உ

முருகா

# சாவித்திரி




மூலம் :

**வேத வியாசர்**



ஆக்கியோன் :

**திருப்புகழ்மணி**

# காணிக்கை



இஃது எமது முன்னுள் மூத்த தமையனுரும், இதுநாள் தவசீலரு மான சிவத்திரு மறைஞானசிவம் அவர்கள் பொன்னுரடிகட்கு, சோபகிருது-புரட்டாசி, 27-ம் நாள் மகநட்சத்திரம், (13-10-1963) அன்று அவர்கட்கு, அறுபது நிறைவின் நினைவாகச் சூட்டுகிறேன்.

அன்பு,

**திருப்புகழ்மணி**



உ

முருகா

# முகவுரை

திருமுருகப் பெருமான் திருவருள் துணையால் ''சாவித்திரி'' என்னும் இவ்வரியநூல் வெளிவருகிறது. சாவித்திரியின் வரலாற்றினை அறிய இது துணை செய்யும்.

13—10—63 அன்று எமது மூத்த தமையனார் அவர்களுக்கு, அறுபது யாண்டு நிறைவுற்றது. அதன் நினைவாக இதனை வெளியிட எண்ணினேன். தடையா யிற்று. நன்றி. இப்பொழுது வெளிவருகிறது.

இந்த நூல் எழுதுவதற்குத் தூண்டியவர் எனது மருமான் த. சுகானந்தன். எதனையாவது எழுதுமாறு வற்புறுத்தினான். பின்னர் என்பால் அன்புமிக்க செல்வன் வெ. நடராசன், தான் வெளியிடுவதாகக் கேட்டான். இது நடந்தது பத்துயாண்டுகட்குமுன். அப்பொழுது எழுதத் தொடங்கி விட்டுவிட்டேன். முன்னமே எழுதிய பலவும் அச்சுக்கு வரவில்லை. எழுத வேண்டும் என்று யானே எண்ணி இதனை எழுதினேன். இதில் கிடைக்கும் புகழை விடப் பொருள் சிறந்ததென்ப.

பிழை பொறுக்க என்று எழுதுவது மரபு. என்றால் அப்படி எழுத இயலவில்லையே என்று வருந்துகிறேன். யானாக எதையும் எழுதவில்லை. எழுதும் அறிவு சிறிதுமில்லை. வேத வியாசர் சொல்ல, விநாயகப் பெருமான் எழுதியது. ஊடே ஒளிரும் கருத்துக்கள், மகான்களுடையவை. புல்லறி வேனுக்கு ஏது அத்தகுதி?

கற்பெனும் திண்மையால் கணவனைக் காத்து மீட்டு காலனை வென்ற இக் கற்பரசியின் வரலாற்றினை மக்கள் அனைவரும் நன்கு படித்துணர்ந்து, பாரத நன்னாட்டுக்கே உரிய கற்பொழுக்கத்தால் எல்லா உலகுக்கும் நலம் செய்வார்களாக.

இந் நூலினை அன்புடன் அச்சிட்டுதவிய பார்க்கர் அச்சக உரிமையாளர் திரு. P. G. நடராஜ முதலியார் J. P. அவர்கட்கு நன்றி. அச்சிடத் துணைபுரிந்து பிழை திருத்தி உடனிருந்துதவிய எமது தமக்கை மகன் திரு. துரை. கோதண்டபாணி அவர்கட்கும் மிக்க நன்றியும் வணக்கமும் உரியதாகுக. உள்நின்றெழுதிய முருகப்பெருமானுக்கு உளமார்ந்த நன்றி.

வளர்க கற்பு ! வாழ்க சாவித்திரி !! வழங்குக திருவருள் !!!

அன்பு

திருப்புகழ்மணி.



# வரலாறு

**மூலம் :** வேதவியாசர் வடமொழியில் எழுதிய மகா பாரதத்தில் வருவது. தருமபுத்திரர் காமியக வனத்தில் இருந்தபோது மார்க்கண்டேய முனிவர் கூறியது.

**வழிநூல் :** முன்னோர் நூலின் முடிபொருங் கொத்துப்
பின்னோன் வேண்டும் விகற்பங் கூறி
அழியா மரபினது வழி நூலாகும்.

—நன்னூல்.

**காலம் :** துவாபர யுகத்தின் முற்பகுதி.

**சாவித்திரி :** சாவித்திரம்-என்ற சொல்லுக்கு, உயிர்களை யழியாமற் காப்பது என்பது பொருள். சாவித்திரி என்பதன் பொருள் உயிர்களை யழியாமற் காப்பவள் என்பதாம். சாவித் திரன் என்று சிவபெருமானுக்கு ஒரு பெய ருண்டு. சாவித்திரனாகிய சிவபெருமான் தேவி-பார்வதி, சாவித்திரியாம். அரசன்-அரசி எனுமாப்போல். இனி எமது ஆசிரியப் பெருந்தகை திருமுருக கிருபானந்தவாரி அவர்கள், சாவித்திரி என்பதற்கு ஜோதிர் மயம் என்று பொருள் தெரிவித்துள்ளார்கள். பிறக்கும்பொழுதே ஒளி மயமாகப் பிறந்த வள் என்று மூலத்தில் வருகிறது. எப் பொழுதும் ஒளி சூழ்ந்து கொண்டிருப்பதால் இவளை மணக்க வெருவி, யாரும் முன் வர வில்லை. வராரோகா என்று மூலத்தில் வருகிறது. இதற்குத் தமிழ் நூல்களில் அணங்கு எனப்படுகிறது. உமாதேவியாரின் சாவித்திரி என்ற திரு நாமந்தான், பிரமன் தேவி சரசுவதிக்கும், சத்தியவான் மனைவி சாவித்திரிக்கும் இடப் பெற்றது.

முற்பிறப்பு : இவள் முற்பிறப்பில் பஞ்ச கன்னியரில் ஒருத்தியாம். மற்றைய நால்வர் மேனை அருந்ததி அநசூயை சுநீதி என்பவராம். இன்னும், அகல்யை மண்டோதரி சீதை தாரை திரௌபதி இவர்கள், இரண்டாம் பஞ்சகன்னியராவர்.

சாவித்திரி விரதம் : ஆனி மாதம், பூரணையில் இருப்பது.

யமன் : விவஸ்வா (சூரியன்) னுக்குச், சாயாதேவி யிடம் பிறந்தவன். இவன் பட்டினம் சைய மினி என்பதாம். தேவியர் அப்ராப்தி, சாமளை, இரி என மூவர். இதில் இரி என்ப வள் தட்சனுக்குப் பிரசூதி என்பவளிடம் உதித்தவள்.

மத்திரம் : இந் நாடு சிபியின் குமாரன் மத்திரன் என்ப வனுல் இமயமலைச் சாரலில், சிந்து நதியின் உப நதிகளும், சரசுவதி நதியும் பாயும் இடங்களில் உண்டாக்கப் பெற்றதாம். அதனுல் அவன் பெயரால் மத்திரம் எனப் பட்டது.

மாளவி : மாளவ நாட்டுப் பெண். நாட்டுப் பெயர் இவளுக்காகியது.

சத்தியவான் : உண்மையாக இருப்பவன். சித்திராஸ்வன் என்றும் பெயருண்டு.

அசுவபதி : குதிரைகளுக்குப் பிரியமானவன்.

சைப்யை : சத்தியவான் தாய். இனிமையும், அழகும், உடையவள் என்பது பொருள்.

த்யுமத்சேனன் : நெருப்பைப் போன்ற வலிமையுள்ளவன்.

மோகனம்-ஆதி

## எடுப்பு

கொழுநனைத் தொழு மனமே
கனமே யுறு மனுதினமே

## தொடுப்பு

கொழுநனைத் தொழுதெழக்
கொண்டல்பெய் யெனப் பெய்யும்
எழுபரி தடுத்தவள்
இயலுணர்ந்து மயல்தணந்து கருணை செய்யும்

## சிட்டை

கக தபகரி கபகரி சதசரி,
கா ,, பக ரிகரிச சதபத
சரி கபதச் பதச்ரி க்ரிச் தபத
ரிச்ா தாப ச்தா பாக தபா காரி

## முடிப்பு

வேடனை எரித்தாள் ஒருத்தி வடவைபோன்ற
வெங்கனல் தணித்தாள் ஒருத்தி
தேடரும் மூவரும் வாடச்செய்தாள் ஒருத்தி
சூடென விசிறியே வீடு பெற்ருள் ஒருத்தி

கானத்தில் இறந்த பதியை எழுப்பி யோர் பெண்
கற்பினுற் கெடுத்தாள் விதியை
தானந் தருமஞ் செய்து ஈனந்தனையே கொய்து
த்யானமுஞ் செய்து க்ருபானந்த முற உய்து.

—கிருபானந்தவாரி



விழிக்குத் துணைதிரு மென்மலர்ப் பாதங்கள் மெய்ம்மைகுன்ரு
மொழிக்குத் துணைமுரு காஎனு நாமங்கள் முன்புசெய்த
பழிக்குத் துணையவன் பன்னிரு தோளும் பயந்ததனி
வழிக்குத் துணைவடி வேலுஞ்செங் கோடன் மயூரமுமே.




முருகா

# சாவித்திரி

## விழிக்குத் துணை

வானம் கறுத்து, இருண்டது. ஞாயிறோன், தன் ஒளிக்கண்கள் மூடப்பெற்று, மேகத் திரைக்குள் மறைந்தான். செந்தாமரை மூடி, மணாளன் விழிக் கதிர் வாராதோ என நின்றது. கானகம் குளிர்ந்து, இருளினால், தன்னை மூடிக்கொண்டது. எங்கிருந்தோ, குகா குகா என்று, மயில்கள் அகவின. தோகை விரித்து நின்றன. “பகலவா! நின் ஒளிவிழி மறைக்கப்பட்டதா? ஆயின், எம் தோகை விழி கொண்டு இவ்வுல கூட்டுவாய்” என்பன போல், வானோக்கி நின்றன.

சருகுகள் மிதிக்கப்படுவதால், எழும் ஓசை, அமைதியான, அச்சூழலில், நெஞ்சை நடுக்குவதாயிற்று. வழியும் குழியும் தெரியவில்லை. முன்னே ஒரு பெண்மணி, திண்ணிய கல்லைப்போல், நடக்கிறாள். அவள் கையில், ஓர் ஆடவன்; காலினால், நிலத்தைத் தடவியபடி, மனைவியால், வழி காட்டப் பெற்று நடந்து வருகிறான். எத்தனையோ குடும்பங்கட்கு வழிகாட்டிய, அந் நம்பி, தனக்கு வழிகாட்ட, ஒருத்தியைக் கொண்டான்.

அப்பெருமகன் தோள்களில் இளஞ்சிருெருவன் அமர்ந்துளான். அச்சிறுவன் முகம், வீட்டிடைப் புகுதும்போது மெய்ம்மகிழ் விபுதர் போன்று அமைதி பெற்றிருந்தது. அவ்விருளிய கானில், அவன் கண்கள், சென்று, சென்று எதையோ தேடின. ஒளி விழி காணத் தேடினனே? உவகை விழிகாட்டும், தன் தந்தையின் இரு விழி காணுதேங்கிய அச்சிறுவன் 'பகலிருந்தும் காரால் மறைக்கப்பட்ட, கதிரவனே! நீயும், என் தந்தை போல், விழி இழக்கச் செய்யப் பட்டனையா? அந்தோ! எமக்கு என்தாயின் விழிகள் வழி காட்டுகின்றன; உனக்கு யார், வழி காட்டி உன் ஒற்றைத் தேரை நடத்துவார்கள்?' என்று எண்ணினனே? யாதோ?

அம் மூவரும், இருவராக, நாடு துரத்தப்பெற்றுக் காட்டிடை நறுமலர் சிவக்கப்புக்கு நீரிழியாக் கண்ணினராய், துடிக்கின்ற இதழினராய், உளந்தடுமாறி வந்து நின்றனர். அம்மாதரசி, 'சர்வேசுவரா!' என்று பெருமூச்சு விட்டாள். ''பெண்ணே! ஏன் கலக்கம்? படையும், பகட்டும் அகன்றன. சடையும் பிறையுமன்றிச் சார்துணை நமக்கார்? செல்; நகரத்தார் வந்தணுக முடியாத கானிற் போ.'' என்ருன் அப்பெரியான்.

'ஐயனே! காட்டின் உள்ளே எங்கே வந்திருக்கிரேம் என்று தெரியவில்லை. நாட்டிலிருந்து மிகு தொலை வந்துவிட்டோம். மூன்று நாட்களாக நடந்து, நீங்கள் அயர்ந்துவிட்டீர்கள்; உண்ணுது

இளைத்தீர்கள். யான் நடக்கத் துன்பமில்லை. ஆனால், மன்னர் தம் மணிமுடி பதிந்த தங்கள் திருவடிகள் தேய்ந்து, வெடித்துக் குருதி தோய்ந்தன. சற்று இங்கு இளைப்பாறுங்கள். யான் சிறிது தண்ணீரோ, கனிகளோ கொணர்கிறேன்' என்று அப் பெண்மணி கூறித் தன் கணவனின் தோள்களில் இருந்த மகனை, 'வாடா, கண்ணு!' என்று இறக்கிவிட்டாள்.

மூவரும் அமர்ந்தார்கள்; "அப்பா! இச்சோலை மிகவும் அழகாக இருக்கின்றது. நமது அரண்மனை யிலும், இதுபோன்று கண்டதில்லை. எத்தனை இனிமையாக இருக்கின்றது! எனக்கு ஒரே மகிழ்ச்சி யாக உளது. அம்மா! நாம் இங்கேயே தங்கிவிட்டால் என்ன?" என்று மழலை பேசிய தன் குழவியை அணைத்தாள் தாய். நெட்டுயிர்த்தாள். மனம் கவன்றது.

"மகனே! இனி நமக்கு இதுவே அரண்மனை. இதுவே நந்தனவனம். இதுவே அரசாட்சி. மாணிக் கமே! இது சோலையல்லடா; நரிகள் ஊளையிடும் கானகமடா. இப்பாவியின் வயிற்றிற் பிறந்த பாவத் தால், நீ கானகம் வந்தாய். அந்தோ சிவனே! என் செய்வேன்?" என்று வருந்தினாள்.

முதியவர்— "மாதரசி! வாழ்க்கை சகடக்கால் போல வரும். இன்பமும் துன்பமும் ஒன்றே. இராமர் மணி முடியையும், சடைமுடியையும் ஒன்றாகக் கண்டார். உயர்வு தாழ்வு ஏன்? நாம் காவலர் தானே? மக்களைக்காக்க இறைவன் நம்மை ஏவினான்.

இனி, தவ சக்தியினுல், அவர்களுக்கு ஆன்மநேய ஒருமைப்பாடு உண்டாகக் காப்போம். கவலையேன்? நெஞ்சத் தஞ்சி யயராதே- அதோ, அது என்ன குரல்? யார் பாடுகின்றது?'' என்று கேட்டான்.

அப்போது, யாரோ மிக இனிமையாக, ஊனையும் உருக்கவல்லதாக,

கண்ணவன் காண் கண்ணொளிசேர் காட்சி யான்காண்
கந்தருவம் பாட்டிசையிற் காட்டு கின்ற
பண்ணவன் காண் பண்ணவற்றின் திறலா னுன் காண்
பழமாகிச் சுவையாகிப் பயக்கின் ருன் காண்
மண்ணவன் காண் தீயவன்காண் நீரா னுன் காண்
வந்தலைக்கும் மாருதன்காண் மழைமே கஞ்சேர்
விண்ணவன் காண் விண்ணவர்க்கு மேலானுன் காண்
விண் ணிழி தண்வீழி மிழலை யானே.

—: திருநாவுக்கரசர்.

சிவானந்தம் என்ற இராகத்தில் பாடிக் கொண்டு வந்தார். மன்னவன் கேட்டு, மகிழ்ந்தான். துயரம் மறந்தான். எழுந்து நின்ருன். இருகை கூப்பினுன். வணங்கினுன். யாவரும் வந்த முனி வரை வணங்கி நின்ருர்கள்.

வந்தவர், "யாரது? ஆ! நீங்கள், சாலுவதேய மல்லவா? மன்னு! துயுமத்சேனு! என்ன இது? ஏனிப்படி...? இது....?'' என்று மனங் கலங்கித் துடிப் புடன் கேட்டார்.

வணங்கிய மன்னன், "ஆம், முனிவர் பெருமானே! யான் துயுமத்சேனன்தான்; இவள்

என் மனைவி சைப்யை; இவன் என் மகன் சத்தியவான். விதி விளையாடிவிட்டது. தவசீலரே! கண்களை இழந்து, இளஞ் சிறுவனை யுடைய என்னை ஏற்கெனவே பகை கொண்ட, தூர்த்தன், முன்னறி விப்பின்றிப் போர் தொடுத்தான். தோல்வி கண்டேன்; துரத்தப்பட்டேன்; நாடிழந்தேன்; நகரிழந்தேன்; மக்கள் துயரழிக்காது, பழிக்காளா னேன். காடு, என்னை வரவேற்றது. இடுகாடு ஏன் அழைக்கவில்லை? அந்தோ!" என்முன்.

முனிவர், "துயுமத்சேனு! கவலற்க! நடந்து வந்தமையால், இளைத்துள்ளீர். அடாடா! இவ் வம்மையின் முக மெல்லாம் முட்கள் கீறி குருதி பெருகுகிறது. உன் கால்களில் இரத்தம்; என்னே விதி! குடைநிழலிருந்த நீ கொடிநிழலுக்கு வந்தாய். மற்றென்று சூழினும், விதி. தான் முந்துறும். நான்; தௌம்யர்-என்பவன். நெடுங்காலமாக இங்கிருக் கிறேன். என் சிறிய இடத்தில் நீயும் இரு." என்று, தமது குடிலுக்கு யாவரையும் அழைத்துச் சென்றார்.

அங்கு, கௌதமர், பாரத்வாஜர் - முதலிய இருடிகளும் கூடியிருந்தனர். எல்லோரும் மிக்க அன்போடு துயுமத்சேனனையும், அவன் மனைவி சைப்யையையும், அவர்கள் குமாரன், சத்திய வானையும் வரவேற்றார்கள். சிவராத்திரியில், வில்வ தளங் கிடைத்தவர்கள் போல, இவர்களைக் கண்டு மகிழ்ந்தார்கள். தங்கள் தங்கள் உறவினராக முகம் மலர்ந்தார்கள். அவர்களின் எல்லையிலாத அன்பில், நனைந்த மன்னவன், எல்லோரையும் தனித்தனியாக

வணங்கினன். அவர்கள் காட்டிய இருக்கையில் இருந்தான். தன் பிறவியில், இதுவரை காணாத புதிய இன்பத்தை அடைந்தான்.

கௌதமர், மூன்று தேக்கிலைகளில் பலாச்சுளை, கொடிநாரத்தை, நவாப்பழம், வாழை, மா-முதலிய கனிகளையிட்டு, தேன்விட்டுக் கொணர்ந்தளித்தார். ஒருமண் குவளையில், மாதுளையும், திராட்சையும் சாருகப் பிழிந்து கொடுத்தார். மூவரும் உண்டு களையாறினார்கள்.

அப்பொழுது, மாலைபோய், இரவு வந்தது. ஞாயிறேன், துயுமத்சேனனின் துன்பந் தாங்காது மலைவாயிலில், விழுந்து இருண்டான். நல்லவர் களுக்கு வந்த பழியைப் போல் உலகம் இருளால், விழுங்கப்பட்டது. மன்னனின் விழியின்மை கண்ட மரங்கள், தங்கள் இலைகளாகிய விழிகளை மூடிக் கொண்டன.

முனிவர்கள். அறிவுச்சுடர்போல், சுடர்விளக் கிட்டார்கள். எங்கும் வேதகானம் நிறைந்தது. அப் பொழுது பாரத்வாஜர், மன்னவனை அன்போடு நோக்கி, "துயுமத்சேனா! நின்று கொண்டிருக்கும் உன்மனைவி, நீ ஆணையிட்டால் தான், அமர்வாள். அவளை இருக்கச் சொல்." என்றார்.

துயுமத்சேனன்: 'சைப்யை! ஏன் நிற்கிறாய்? இரு. அரண்மனையில்தான், எப்பொழுதும் நின்று கொண்டிருந்தாய். என் எதிரில் அமரமாட்டாய். இங்கென்ன? பதவியும், பவிஷும் இழந்தவன் நான்.

இனி எனக்கென்ன மரியாதை? பொருளிருந் தாலன்றி உலகத்தில் வாழ்வேது? செல்வம், மனைவி மக்களைச் சேர்க்கும். வறுமை, குடியும், குலமும் குடியோடழிக்கும். அதிலும் விழி இழந்த நான், நீ நிற்கிருயா? உட்கார்ந்திருக்கிருயா? என்று பார்க் கவா போகிறேன்? இரு; இரு'

இதுகேட்ட சைப்யை, காகலி நிஷாதம் விழுந்த பைரவி போல் நடுங்கித் தளர்ந்தாள். அவள் கண் களில் கண்ணீர் வரவில்லை; உதிரம் ஒழுகியது. உதறுகின்ற குரலால் மெல்லத் தன் நாயகனையும், முனிவர்களையும் நோக்கிச் சொன்னுள்.

"நாயகரே! பொருள் நோக்கி மகிழும் புல்லறிவு, தங்கள் திருவடி சேர்க்கையால் எனக்கு இல்லை. அரச பதவியை யான் விரும்பவில்லை. யான் கவலைப் படுகிறேன். எதற்கு? அரண்மனை வாழ்வு போய் விட்டதே என்பதற்கல்ல. உங்கள் விழிகள் போய் விட்டனவே என்பதற்கல்ல. என் கண்கள் குருடாக வில்லையே என்று வருந்துகிறேன். நீங்கள் தடுக்க வில்லை யானுல், இதுநேரம் நான் குருடாக இருப் பேன். தவசீலர்களே! ஒருபெண், தன் கணவன் விழியில்லாமல் இடர்ப்படுவதைப் பார்த்தும், உயிரோடிருக்க முடியுமா? அவர் தடுமாறுவதைக் கண்டு, அவரிடத்தில் எனக்குப் பக்தி யுண்டாகுமா? அந்தோ! என் கணவருக்கு வரும் இன்பமோ, துன்பமோ-அதில் எனக்கும் பங்குண்டு. அவர் பார்க்காத உலகை நான் பார்க்க விரும்பவில்லை. கேவலம், துணியினுலாவது, என் கண்களை

மறைத்துக் கொள்ள விரும்புகிறேன்.'' என்று உருகினாள்.

இது கேட்ட முனிவர்களும், மன்னவனும் மனம் வருந்தி நொந்தார்கள். "ஆகா! கற்பின் மாண்பே மாண்பு! பெண்ணிற் பெருந்தக்க யாவுள? அம்மையே! உன்கற்பின் பேரொளியால், இவ்வனத்தையே ஒளிபெறச்செய்தாய். கணவன் துயர் கண்டு பொருத கற்புச் செல்வியே! உன்போன்று இவ்வுலகப் பெண்கள் முழுவதும் பதிபக்தியில் சிறக்கட்டும். கணவன், முடமோ, குருடோ, கூனோ, தெய்வமாக எண்ணும் மங்கையர்களாலல்லவா, இம் மா நிலத்தில் மழை பொழிகின்றது. மன்னவா! எங்கள் தவத்தின் பயனால்தான், நீங்கள் இங்கு வந்தீர்கள். உங்கள் வரவால், இத்தவச் சூழலே புனிதமடைந்தது. சைப்யையைக் கண்டு, தபோவனப் பெண்கள் பெரிதும் மகிழ்வர். அவர்கள் மிக்க நன்மையை அடைவார்கள், அம்மா! உங்கட்கு ஒரு குறையுமில்லை. எப்பொழுதும் இங்கேயே இருங்கள்'' என்று மொழிந்தார்கள்.

மன்னவனுக்கு மனமகிழ்ச்சி இல்லை. "பெண்ணே! சைப்யை! நீ அடிக்கடிக்கு இப்படிச் சொல்கிறாய். நாட்டிலிருந்தபோதும், அரண்மனையில் இப்படித்தான் பேசினாய். இங்கும் அதனையே வலியுறுத்துகிறாய். கணவனுக்குக் கண் போனால், மனைவிக்குங் கண்போக வேண்டுமா? இது என்ன நியதி? கண்ணிழந்தவனுக்குக் கண்ணாக இருந்து பணிவிடை செய்வதுதான் கற்பு. அஃதன்றி நீயும்,

குருடாகி உட்கார்ந்துவிட்டால், என்ன பொருள்? கணவனுக்குப் பணிவிடை செய்ய மனமில்லை என்பதுதானே, விடை? நாட்டிலிருக்கும் போதாவது யாரும் துணையிருப்பார்கள். அங்கு நீ கண்களில் துணியைக் கட்டிக்கொண்டாலும் மன்னிக்கலாம்.

இங்கு எனக்கு உன்னையன்றி யார்? நீயல்லவா விழிப்பாக இருந்து வேண்டியதைச் செய்யவேண்டும்? கனியோ, கிழங்கோ, விறகோ, தண்ணீரோ, மலர்களோ-வில்வமோ, அறுகோ, யார் தருவார்கள்? யார் கொணர்வார்கள்? அதற்கு நான் யாரிடம் நிற்பேன்? யாரை ஏவுவேன்? பெண்மணி! நம் மகனும் இளையவன். அவனைக் கவனிக்கவும் ஒருவர் தேவை. இங்குவா; நான் சொல்வதைக்கேள்.

ஒருதாய், தன் மகனுக்கு நோய் வந்தால், தனக்கும் நோய் வரவேண்டுமென்று எண்ணுவாளா? நோயுற்றுப் படுப்பாளா? படுத்தால், மகனை யார் பார்ப்பது? 'ஐயோ! என் உயிருக்குயிரான மகன் நோயுற்றானே? நான் தாங்குவேனா? அவன் நோயில் துடிப்பதை, நான் எப்படிப் பார்ப்பேன்? நானும் படுத்துக்கொள்கிறேன்' என்று படுத்துக்கொள்வாள்? அதுவா முறை? நோயுற்றவனுக்கு, நோயில்லாதவர் நன்மை செயல்வேண்டும். காலற்றவனுக்குக், காலனுர் நன்மை செய்யவேண்டும். விழியற்ற எனக்கு நன்மையும், தேவையும் - எங்கிருந்து வரும்? கண்ணுடையார்தானே செய்ய இயலும்?

பெண்கள் கடமை என்ன? கணவனுக்குப் பணிவிடை செய்வது தானே? உன் கண்களைப்

போக்கிக்கொண்டோ, கட்டிக்கொண்டோ எனக்கு என்ன நன்மை செய்வாய்? நீ எனக்கொரு பாரமாக ஆவாய். நீ தூங்கினுயா? நீ சாப்பிட்டாயா? நீ குளித்தாயா? உனக்கு என்னவேண்டும்—என்று உன்னைத் தான் நான் கவனிக்க வேண்டும். உன்கண்கள், எனக்கு நன்மை செய்வதற்காக இருக்கட்டும்; அது தான் கற்பு.''

என்று தெளிவும் பொருளும் நிறைந்த உரைகளைச் சொன்னுன். அது கேட்டு எல்லோரும் மகிழ்ந்தார்கள். முனிவர்கள் 'மன்னு! நீ அரசன் மட்டுமல்ல; நல்லபேச்சாளி; சிறந்த கல்விமான். நீ ஒரு புலவன்.' என்று தழுவிக்கொண்டார்கள்.

அன்று இரவு அங்கு சென்றது. கௌதமர், சத்தியவானுக்குக் கல்வி கற்பித்தார். வடமொழியுந் தென்மொழியும் கற்ருன் அக் காவலன் மகன். கௌதமர் வேலும், வில்லும், வாளும் கொண்ட அரச கல்வியும் அவனுக்கு அளித்தார். பண்பாளர்களின் நன்நெறி கண்ட புன்மையாளரின் அழுக்காறு ஏறுவதுபோல் அவன் கல்வி ஏறிக்கொண்டே போயிற்று.

சைப்யை, தனது கைகளினுலேயே, கொடிகளையும், சணலையும், மரத் துண்டுகளையும், மூங்கில்களையும் கொண்டு, சிறிய குடிலைப் புதுக்கினுள். அதில் கணவனை இருக்கச் செய்தாள். இறைவனை வழிபடுதற்குத் தனியாக ஓரிடஞ் சமைத்தாள். அதில் சிவபெருமானை எழுந்தருளப் புரிந்தாள். வைகறை

யிலேயே சிவபெருமானை வழிபாடு புரிவாள். எப்பொழுதும், ஐந்தெழுத்தை ஓதுவாள்.

கணவனை, நதிக்கு அழைத்துச் சென்று நீராடப் புரிவாள். தன் கையினால், துவைத்து உலர்த்திய, வேட்டிகளை உடுத்துக்கொள்ளத் தருவாள். முகை விரிந்து, வண்டு மொய்க்காத மலர்களை, வழிபாட்டிற்குச் சித்தஞ் செய்வாள். அறுகு, வில்வம் இவைகளைத் திருத்தித் தருவாள். வழிபாடு முடியும் வரை அருகிலிருந்து வேண்டியனவற்றைக் குறிப்பாற் செய்வாள். சிவ வழிபாட்டிற்கு இடையூறாக ஒரு நாளும், பேசுதலோ, சத்தஞ் செய்தலோ, செய்யாள். கணவன், சிவ பூசையிலிருக்கும்போது, அவன் நினைவு, தன் பக்கம் திரும்புமாறு, வினைகளைச் செய்யாள். சிவ பூசையிலிருக்கும்போது வியர்க்கின்றதே—என்று விசிறமாட்டாள். ஓவிய மலர் போல் அசைவற்று நிற்பாள். மன்னர் பெருமானுக்குச் சைப்யையால், மிக்க நன்மை.

சைப்யையின் பதிபக்தியைக் கண்ட ஆசிரம ஆரணங்குகள், நம் தவந்தான் இவ்வம்மையை நம் பக்கல் சேர்த்தது என்று மகிழ்வார்கள். இவரைப் போலும் பெண்கள் உலகிலுண்டா? என்று வியப்பார்கள். சிலர், வழிபாட்டில் இருக்கும்போதுதான் ஊர் வம்புகளையெல்லாம் பேசுவார்கள். அப்படியா சைப்யை?

கணவன் செபம் புரிகின்றபோது அசையாமலிருப்பாள் சைப்யை. ஐயோ! சில நாரீமணிகள் இருக்கிறார்கள், பாவம்! "என்னங்க, கடலை சுண்ட

லுக்குப் பச்ச மிளகாய் போடவா, மிளகாய் வற்றல் போடவா?'' — என்று கேட்பார்கள். "ஐயே! சொல்லிவிட்டுத்தான் செபம் பண்ணுங்களேன், அப்படியே, கைலாசம் போருப்லதான்'' என்று நொடிப்பார்கள். இவர்களெல்லாம் பெண்களா? வினை; ஏழு பிறவியில் செய்த வினை உருவெடுத்து வந்திருக்கிறது. ஆசிரமவாசிகளுக்குச் சைப்யை, ஒரு தவப்ரசாதமாகக் கிடைத்தாள்.

துயுமத்சேனன் வாழ்வு இனிமையாகச் சென்று கொண்டிருந்தது. சைப்யை, தன் கணவனுக்குக் கண்ணாகவும், உயிராகவும் இருந்து தொண்டு புரிந்து வந்தாள். மன்னவனுக்கு வேறு ஊன்று கோல், தேவையிருக்கவில்லை. வனத்தில் எல்லா வளமைகளையும், அவன் மனைவியின் கண்களில் கண்டான். பல அரிய முனிவர்கள், வேந்தனை அடுத்தடுத்துக் கண்டு, உசாவினார்கள். அங்கு பெரிய கலைச் சாலையே நடந்துகொண்டிருந்தது.

கௌதமரால் சத்தியவான் கல்லாத கலைக ளில்லை என்றானான். முற்றக் கற்ற அவன் அடக்கத் தின் பெட்டகமானான். அன்பு அவன் உருவிற் குடியேறியது. இனிமை, அவன் நாவைப் பற்றிக் கொண்டது. ஒழுக்கம், அவனைப் பின்தொடர்ந்தது. பொய்ம்மை அவனைப் பகைத்தது. மெய்ம்மை, அவனுக்குக் கவசமாயிற்று. சத்தியவானுக்கும், இப்பொழுது கண்களில்லை; கருணை அங்கு, ஆட்சி செலுத்திக் கொண்டிருந்தது. முனிவர்களின் பேச்சி லும், நெஞ்சிலும், உலாவி உறைபவனானான் அவன்.

அவனைப் பெற்ற தந்தை மகிழ்ந்தார். தாய், களித்தாள். "அப்பா! மிகக் கொடிய துன்பம். தான் பிறருக்கு உதவ முடியவில்லையே என்ற எண்ணம் தான். அதைவிடப் பெருந் துன்பம் ஏது? உயிரினங்கள் எல்லாவற்றிற்குமே மனிதன் உதவ வேண்டும். பிற வுயிர்கட்கு உதவாத பொருள்களே கடவுட் படைப்பில் இல்லை. தந்தையே! ஆட்டு மயிர் குளிர் தாங்கும் கம்பளமாகிறது. மான் கொம்பு மருத்துவத் திற்கு ஆகிறது. மாடு இறந்தால், தோல், நீர் இறைக்க உதவுகிறது. மனித உடல் எதற்காகிறது?

"தவசீலரே! மண்ணுற் செய்த பானை உடைந் தால், இரட்டைப் பயன்; மேற்பகுதி, குந்தாணி யாகும். ஏதாவது அதன் மேல் வைக்கலாம். கீழ்ப் பகுதி எதுவும் வறுக்க உதவும். கண்ணுடி உடைந் தால், காவலுக்குச் சுவற்றில் பதிக்கலாம். இருந்தா லும், கெட்டாலும் எல்லாப் பொருள்களும், பிறர்க்குப் பயன்படுகின்றன. மனிதன்?

"இறந்தால், நான்கு பேர்களுக்குப் பாரம். அவனை எரித்த சாம்பல் பல் விளக்க ஆகுமா? தந்தையே! உயிரோடு இருக்கும்போதே பிறர்க்கு உபகாரியாக இருக்க வேண்டும். தொண்டு, ஒருவனை உயர்த்தும். தொண்டு அவனை வாழ வைக்கும். தன்னுல் முடிந்த பணிவிடைகளைப் பிறர்க்குச் செய்ய வேண்டும். முடியாதபோதோ, 'ஐயோ! யான் யார்க்கும் உதவ முடியவில்லையே' என்ற துன்பம் பெருந் துன்பமாம்.

“எந்தையே! தாங்கள், நாடு காத்தபோது, குடிமக்களின் இன்பமே இன்பமாகக் கொண்டீர்கள். நாளும், அவர் துயர் நீக்கவே உமது பணி. பொழுதும் அவர் மகிழ்வாக்கலே, உமது செயல். இனி இப்பொழுது உங்கள் தவத்தால், தூய எண்ணத்தால், பொறையால், ஒழுக்கத்தால் இவ் வுலகுயிர் யாவற்றையுமே வாழ வைக்கிறீர்கள்.”

“எப்படி? தங்கள் தவ வன்மையால் இல்வனத் தில் எப்பொழுதும் மலர்கள் பூக்கின்றன. எல்லாக் காலங்களிலும், எல்லாப் பழங்களும் பழுக்கின்றன. அதனால், மலர்களில் தேன் உண்ணும் வண்டுகள் பசியாறி மகிழ்கின்றன. பறவைகள் பழம் உண்டு களிக்கின்றன. முனிவர்களுக்கு மலரும் பழமும் இறைவழிபாட்டிற்குக் கிடைக்கின்றன. அப்பா! உங்கள் தவ ஒளியால், இக்காட்டில் மழை பொழிந்து கொண்டேயிருக்கின்றது. கானகம் செழித்து வளர் கிறது. தங்களையறியாமலேயே, தங்கள் ஆற்றல், எல்லா உயிர்கட்கும், பயன்படுவதாகின்றது. தந்தையே! நீங்கள் ஏன் கவலைப்படுகிறீர்கள்? நீங்கள் யாருக்கும் உதவவில்லையே என்று நீங்களே நினைத்துக் கொள்வதா? உங்கள் தொண்டு அமைதி யாக நடக்கிறது.” என்று சத்தியவான், தமிழைப் போன்ற இனிய சொற்களைச் சொன்னான். அப் பொழுது அங்கே கௌதமர் வந்தார். மன்னவன் கேட்டு விம்மிதமானான். மகனைத் தழுவினான். மகரிஷியை, வணங்கினான். “முனிவர் பெருமானே! உங்கள் பிச்சைதான் இது. அறியாப் பாலனாகிய சத்தியவானை அமுதம் போலப் பேசும் அறிவாளி

யாகச் செய்தீர்கள். இதற்கு யான் எப்படிக் கடன் தீர்ப்பேன்?'' என்று துயுமத்சேனன் மகிழ்ந்து கூறினன்.

அதுகேட்ட கௌதமர் புன்னகைத்து, "துயுமத் சேன! நாங்களல்லவா உனக்கு நன்றி சொல்ல வேண்டும். தருமத்தின் வடிவமாக நாட்டைக் காத்திருந்த நீ, எங்களைக் காக்கத் தவத்தின் வடிவ மாக இங்கு வந்தாய். வந்தவன் வெறுங்கையாகவா. வந்தாய்? கற்பையும், அடக்கத்தையும் தாங்கிய இரண்டு உருவங்களைக் கொண்டு வந்தாய். அவர் களால் இக்கானகம் வாழ்ந்தது. தவச்சாலை ஒளி பெற்றது. மன்னவா! உனக்கு நன்றி சொல்ல அவாவுகிறோம். ஆனல், உன்னை அனுப்பிய இறைவனுக்கே எங்கள் முழு நன்றியும்.'' என்றார்.

துயுமத்சேனன், துடித்தான்; வெதும்பினன்; பதறினன். "அடிகளே! வேதம் ஓதும் வாயால், இப் பதிதனைப் புகழலாமா? நான் அதற்கு அரு கதையா? ஐயனே! உங்கள் கூட்டுறவால், யான் பயன் பெற்றேன். கௌதமரே! தாங்கள் என்மீது கொண்ட அன்பால், இப்படிப் பேசுகின்றீர்கள். மருவுக மாசற்றார் கேண்மை என்பது தங்களை நாடித் தான் போலும். உலகில் யார் பொருளில்லாதாரைப் பார்க்கிறார்கள்? பொருளற்றானைப் பார்ப்பதேயில்லை யே? பொருள் ஒன்றுதான் சுவாமி! உலகில் புகழையும், நிலையையும் தருகிறது. பொருளற்றவன் உயிரற்றவனே.

"முனிவரே! பொருளில்லார்க்கு இவ்வுலகில்லை என்றூர்கள். இதற்கு என்ன பொருள்? பொருள் இல்லாதவன் இறக்க வேண்டும் என்பது தானே? எப்படிச் சுவாமி? ஆண்களுக்கு இங்கு வேலை இல்லை என்ருல் என்ன பொருள். ஆண்கள் போய்விட வேண்டியது தானே? அப்படிப் பொருளில்லார்க்கு இவ்வுலகு இல்லை என்ருல் பொருள் தேட மாட்டாதவன், இறத்தல் ஒன்றே சாலச் சிறந்ததாம். அதனைத் தெரிந்தும் யான் வறிதே உயிர் பற்றி இருக்கிறேன்" என்ருன்.

முனிவர்: "உம். நல்ல கற்பனை வேந்தனே! எப்படி? பொருளில்லாதவன் இறப்பதா? நன்று! நன்று! அது இப்புன்மைப் பொருளன்று. அ∴து பூரியர் கண்ணும் உள. அதான்று. மெய்ப் பொருளாம். மெய்ப்பொருள் பெறமாட்டாதான், இவ்வுலகில் அவனுக்கு வேலை இல்லை. மெய்ப்பொருள் பெற்ருன், அருள் பெற்றவன். அருளுடையான், அவ்வுலகில் நிலை பெறுவான். வானிடு வில்லின் பான்மைத்தாம் இச்சிறு பொருளோ, அறிஞர் நெஞ்சை மயக்குவது? அன்று; அன்று. மன்னவா! கவலற்க! நீ சிவப்பொருள் பெற்ற செம்மையாளன்."

துயுமத்சேனன், உபநிடதம் போன்ற அச் செவ்வுரையைக் கேட்டான். மீட்டும் அவரைப் பணிந்தான். "தக்கவர் சென்னியில் வீற்றிருக்கும் சீர்த்தியாளரே! எத்தனைதான் கற்றும், கேட்டும், அறிவுள்ளவராயினும், பண்புள்ளவராயினும், பொருள் கண்டே யுகக்கின்றனர். பொருள் பெரு

ஒருவனை நகைக்கின்றனர். பொருளுக்கு முன் பக்தி ஒளிபெறவில்லை. பாற்கடல் கதை தெரியாதா? தோலாடை கொண்ட நஞ் சிவனுக்கு, நஞ்சிவனுக் கென்று தந்ததே? மாயவன் பட்டு கண்டு, திரு மகளைத் தந்தது அல்லவா சுவாமி? என் நிலை என்ன? நூலாயிரங் கற்றென்ன ஐயனே?''

என்ற மொழி கேட்ட கௌதமர் மனத்தில் நகைத்தார். ''பால் பிறை யிட்டால் திரியுந் தன்மையது. அதன் செயல் நமக்கேன்? சிவனை யன்றி நஞ்சைத் தாங்க வல்லார் யார்? இடமறிந் தல்லவா ஒன்றைத் தருதல் வேண்டும்? மன்னனிடம் வாள் தரலாம்; பேடி கைத் தந்து என்ன பயன்? துயுமத்சேனு! அரச வாழ்வு உனக்கு முற்றும் போக வில்லை. பெரிய நன்மையைக் கருதி, இறைவன் உன்னை இங்கு அனுப்பியுள்ளார். உனக்கு ஆண்ட வனின் திருவருள் முழுவதும் கிடைத்துளது. தாங்க முடியாத துன்பத்தின் முடிவு எல்லையில்லாத இன்ப மாம். அப்படி உனக்கு அளப்பில்லாத பெரும்பேறு பின்னே கிடைக்க இருக்கிறது. அதனைத் தாங்கு வதற்கே இங்கே நீ தவமிருத்தலாம்'' என்று கௌதமர் மன்னவன் மனதில், திட்பமும், நுட்பமும் உறச் சொல்லினர்.

இப்படித் துயுமத்சேனன், தவத்தாலும், தவத் தோரின் இணக்கத்தாலும் நன்மைகளைப் பெற்று இறைவழிபாட்டில் மூழ்கி, தவத்தில் நின்ருன். சைப்யை, கணவனை வழிபடுவதும், அவர்க்குத் தொண்டு புரிவதுமாக இருந்தாள்.

சத்தியவான், தானே கானகம் போய்க் கனிகளைக் கொணர்வான். மலர் பறித்து வருவான். விறகு கொணர்வான். வேள்விக்குச் சமித்துக்கள் தருவான். தாயாரின் வேலைகள் முழுவதையும் அவன் எடுத்துக்கொண்டான். "அம்மா! நீங்கள் இருங்கள்; வயதானவர்கள்; நான் செய்கிறேன்" என்பான், அது மட்டுமா? முனிவர்களுக்கும், முனி பத்தினிகளுக்கும், குற்றேவல் செய்து, அவர்கள் அன்புக்கு இடமானுன்.

சத்தியவான் காட்டிற்குப் போனல் மரங்கள் வளைந்து, தழையும், மலரும், கனிகளுந் தரும். நாகங்கள், மணியுதவும். யானைகள் விறகு சேகரிக்கும். பசுக்கள் தாமே வந்து பால் உதவும். வழிபாட்டு நேரத்தில், சத்தியவான்மேல் வைத்த அன்பால் காற்றுகூட அசையாது. தீ, சமித்து போடாமலேயே அணையாமல் எரியும். சத்தியவான் எழுவதற்கு முன்னே பொழுது விடியாது.

எல்லோருக்கும், நல்லவனுக, வல்லவனுக வாழ்ந்தான் சத்தியவான். அவன் புகழ் காடு கடந்து நாடெங்கும் பரவியது. அரச மாளிகையில் அவன் புகழ் பேசினுர்கள்.

சதுக்கங்களில் அவன்புகழ், நின்று விரிந்தது. புலவர்கள் அவனைப் பாடினுர்கள். இசைவாணர்கள், அவன்பெயரை இசையிலிட்டுப் பாடினுர்கள். வானேர் அவன் புகழ் கேட்டு, மகிழ்ந்தார்கள். நாகர் அவன்புகழ் கேட்டு நன்மை பெற்றனர்.

சத்தியவான் பெயர் தெற்கே, இயம உலகம் வரை சென்று எதிரொலித்தது.

மன்னவன் தன் விழிக்குத் துணையாக, மனைவியையும், மகனையும் பெற்றான். சிறந்த அறிவுள்ள பெருமகனாகிய அவன், அதோடு அமையவில்லை. மென்மையும், தண்மையும், வன்மையுமுடைய இறைவனின் இரண்டு திருவடிகளையும், தனது விழிக்குத் துணையாகக் கொண்டான். அவனுக்கு மட்டுமா? யாவருக்கும், திருமென்மலர்ப் பாதங்கள் தானே விழிக்குத் துணை? இதனை யுணர்ந்து அனுபவத்திற் கொண்டுவந்தவன், துயுமத்சேனன்.

கண்கள், தீத் தத்துவத்தைக் கொண்டன. நெருப்பு, ஒளியையும் வெம்மையையும் உடையது. வெம்மையான ஞாயிற்றைக் கண்களால் உற்றுப் பார்த்தால், மின்-பறக்கும். மென்மையான இறைவன் திருவடிகளைக் கண்டால், குளிரும்.

பாவ வெம்மை சேர்க்கும் வேற்றுப்பொருள் களைக் கண்டால் கண்கள் குளிர்ச்சியாகவா இருக்கும்? கண்நோய், கண் எரிச்சல்தான் வரும். திரு மென்மலர்ப் பாதங்களைக் காண்பார்க்கே விழிகள், பழியில்லாததாக ஆகும். பூதநெருப்பின் மாறுபாடாகிய இக்கண்களுக்கு எல்லாப் பூதங் களுக்கும் தலைவர் எவரோ, எல்லாப் பூதங்களுக்கும், நிலையையும், நீர்மையையும், வெம்மையையும், இயக்கத்தையும், ஒலியையும் அருள்பவர் எவரோ, எவருடைய திருவடிகளில், அண்ட

கோடிகள் எல்லாம், தொங்குகின்றனவோ, அவருடைய குளிர்ந்த அழகிய, ஒளி பொருந்திய, திருவடிகள் தாமே நம் எல்லோருடைய விழிகளுக்கும் துணை?

துயுமத்சேனன், அதனைப் பெற்றான். இன்பம் உற்றான். காடு களிப்பைத் தந்தது. முகக்கண் இல்லாதது அவனுக்குக் குறையாக இல்லை. அகக்கண் கொண்டான். அங்கே ஆண்டவனைக் கண்டான்.

முகத்திற் கண்கொண்டு காண்கின்ற மூடர்காள்
அகத்திற் கண்கொண்டு காண்பதே ஆனந்தம்
மகட்குத் தாய்தன் மணாளனோ டாடிய
சுகத்தைச் சொல்லென்றாற் சொல்லுமா றெங்ஙனே?

—: திருமூலர்.

## மொழிக்குத் துணை

வளமை மிகுந்த மத்தரதேசம். புலவர்கள் பாடும் சிறப்பு கொண்ட அந்நாட்டில் வேற்றுத் தேயத்தார் வந்து குவிந்த வண்ணமாயிருக்கிறார்கள். அயல் நாட்டவர்களாகிய அவர்களுக்கு வியத்தகு பொருளாகக் காட்சி யளிப்பவர்கள் கற்புடைக் காரிகையரே. அவர்கள் கணவனை வழிபடுவதும் பணிவிடை செய்வதும் கண்டு அவர்களுக்கு வெட்கமாகவும், வியப்பாகவும் இருக்கிறது. குரு பக்தியும், தேசபக்தியும் வேடிக்கையாக இருக்கின்றன, அவர்களுக்கு. சோமவாரம், கார்த்திகை, சஷ்டி, பிரதோஷம், அமாவாசை-முதலிய விரதங்களையும்,

அவற்றில் உண்ணுது நோற்பதையும், கண்ட அவர் களுக்கு, ஒன்றும் புரியவில்லை. "இது ஏன்? எப்படிப் பசியெடாமலிருக்கிறது? " என்று மருளுகிருர்கள்.

கரும்பைக் கழி என்று எண்ணிய ஒருவன், அதை எடுத்து அடித்தான்; அதிலிருந்து தண்ணீர் வருவதைக் கண்டு, 'இது என்ன' என்று சுவைத்துப் பார்த்தால், இனிப்பாக இருந்தது. 'ஆகா! மத்தர தேசத்தில், கழிகளெல்லாம் இனிப்பாக இருக் கின்றனவே! இந்த மக்கள் எப்படி இனிக்க மாட்டார்கள்!' என்று பேசுவாராயினர். கரும் பாட்டிக் கட்டி எடுக்குஞ் சாலைகளையும், தவச்சாலை களையும் கண்ட அவர்கள், ஒன்றும், புரியாது விழித்து நின்றனர்.

ஒருவன் அவர்களைக் கண்டு, 'ஏன் இப்படிப் பார்க்கிறீர்கள்?' என்று வினவினுன். மாற்று நாட்டு மாந்தர், தவச்சாலையையும், கரும்புச்சாலையையும் காட்டி, 'இவை என்ன?' என்று கேட்டார்கள்.

"ஓ! இதுவா? இது கரும்புச்சாலை. இக்கழிக்குக் கரும்பு என்பது பெயர். இக்கரும்பை ஆலையிலிட்டு, ஆட்டினுல், சாறு வரும். சில செல்வந்தர்களும், அப் படித்தான். வைத்து நசுக்கினுல்தான், ஏதாவது அறம் புரிவார்கள். கவனியுங்கள். அக் கரும்புச் சாற்றைக் காய்ச்சி வெல்லமாக்குவார்கள். அதுவே சர்க்கரையாகவும் ஆகும்.

இதைப் பார்த்தீர்களா? இது தவச்சாலை. இங்கு முக்குறும்பறுத்த முனிவர்கள் இருந்து யோகு புரி

வார்கள்; ஊனினையுருக்கலால், சிவ தேனினைப் பெறுவர். இத் தவச்சாலைக்கும், அக் கரும்புச் சாலைக்கும், ஒரு ஒற்றுமையுண்டு. உடம்பாகிய கரும்பை ஒறுத்து, அன்பாகிய சாறு பிழிய வேண்டும். அதுதான் சீவான்மா. அச்சீவனில், மூன்று பொருள் கள் உண்டு. ஒன்று கன்மவினை; அ..து உடம்பார் வீழ்ந்தால், தாமும் வீழும். அதோ பாருங்கள்; கரும்புச்சக்கை எரிகிறது. அதுதான் கன்மவினை. வினைப்போகமே ஒரு தேகமாதலால், வினைதான் ஒழிந்தபின், தேகமில்லை. கன்மம் மிச்சமின்றி எரிந்து விடுகிறது. சிவாக்கினியினால், சிவஞானிகள், எரிப்பர்.

அங்கே கரும் புகை வருகிறது பாருங்கள்; அது மாய்கை. காய்ச்சப்படுகின்ற சாறு, சீவன். அச்சாற்றில் ஈரத்தைக் கெடுக்கிறார்கள். இச் சீவனில், ஆணவத்தைக் கெடுக்கிறார்கள். சாறு வற்றினால் கட்டி. ஆணவங் கெட்டால் ஆனந்தம். இது தவச்சாலை. அது கரும்புச்சாலை.''

என்று விளக்கினார்கள். அவர்களுக்கோ, விளங்கியது போலவும் இருந்தது; மயக்கமாகவும் இருந்தது. ஒருபக்கம் சிலபெண்கள், பந்து விளையாடிக் கொண்டிருந்தனர். அவர்களுக்கோ, அது தங்களை நினைவூட்டியது. “நாமும் இப்படித் தானே பெண்களிடம் அலைகிறோம்? நம்மைப்போல் இப்பந்தும் பெண்மோகம் பிடித்துப் பல பெண் களிடம் சென்று சென்று வருகிறதே?'' என்று சிலர் நின்று பார்ப்பாராயினர்.

மற்றுஞ் சில யாத்ரீகர்கள் போகின்றவர்களை யெல்லாம் அழைத்து உணவு ஊட்டுவதைக் கண்டு வியந்தார்கள். ஒரு பெண் தன், குழலை விரித்து ஆற்றிக்கொண்டிருந்தாள். மிக நீண்டதும் கருமை யானதுமான அக்குழலைக் கண்ட, சிவந்த குட்டையான முடியையுடைய சிலர், 'இது கருநாகமோ? மழைபொழிய மேகம் இறங்கியிருக் கிறதோ' என்று விலகிச் சென்றனர்.

பண்ணும் பாட்டும் கேட்டு நிற்பவர் பலர். ஆலயங் கண்டு அஞ்சியோடினர். பரதங் கண்டு பரிதவித்தார் சிலர். கால்களில் உருண்ட பரலை எடுத்துப் பார்த்தார்கள். அது ஆணிமுத்து. சேற்றில் விழுந்த உத்தரியத்தை எடுத்தார்கள். பன்னீரும், குங்குமச் சாறும் அதில் கமழ்ந்தன. மாளிகைகளை அண்ணுந்து பார்த்துக்கொண்டே சென்ற ஒருவன் மயங்கி விழுந்துவிட்டான்.

ஓடிவரும் தேர்களும், குதிரைகளும் தங்கள் மேல் எங்கு ஏறிவிடுமோ என்று அஞ்சிய சிலர், அச்சத்தால் அவைகளின் எதிரிலேயே சென்று வீழ்ந்தார்கள்.

உரைத்தவண்ணம் ஒழுகும் புலவர்களையும் வேதம் ஓதும் விற்பன்னர்களையும் சிலர் கண்டு விழித்தனர். சிலர், தங்கள் நாட்டிலுள்ள சிறைச் சாலையைத் தேடிப் பார்த்தனர். மத்ர தேசத்தில் சிறைச்சாலையே இல்லை. நீதி உரைப்பவரே இல்லை. மன்றமும் இல்லை. 'ஏன்?' என்று கேட்டார்கள்.

'குற்றம் புரிபவர்கள் இல்லை' என்று கேட்டு அருண்டு விட்டார்கள். "அதெப்படி? குற்றம் செய்யாமல் இருக்க முடியும்? பொய் கூடவா பேசமாட்டார்கள்? திருடாமலிருக்க முடியுமா? இது என்ன நாடோ? ஒன்றும் புரியவில்லையே?" என்று சலித்தனர் சிலர்.

அத்தகைய மத்ர தேசத்ததிபதிதான் அச்சுவப் பதி. அவன் இல்லக்கிழத்தி மாளவி. தருமம், அவனிடம் அடைக்கலம் புகுந்து இனிமையாகத் தங்கியிருக்கிறது. யாரும், அவனை எப்பொழுதும் பார்க்கலாம். எதையும் கேட்கலாம். பகைவர்கள் கேட்டு நடுங்கும் மறமுடையவன். நேரிற் பார்த்த வர் ஒருவருமில்லை. வந்தபுலவர்கள் மன்னனைவிட்டுப் போகவில்லை. அதனால், அச்சுவப்பதிக்கு உள்ளப் பிரியுந் துன்பம், இன்னதென்று தெரியாமற் போயிற்று.

மன்னவனை எல்லா இடங்களிலும் பார்க்கலாம். குடிநோக்கி வாழும் அவனிடம் அடிபோற்றி வாழ் வாரில்லை. "காவலன் யான். ஏவலர் எனக்கு ஏன்?" என்பான். குடிமக்களிடமுள்ள நெஞ்சங்கள் எல்லாம் மன்னன் நெஞ்சில் பாதுகாவலாக இருக் கின்றன. யாவற்றையும் எடுத்துக்கொண்டான்.

அறமும் மறமும் திறமும் உடைய அவனை வாழ்த்தாதார் இல்லை. வணங்காதார் இல்லை. அவன் புகழ் பரவாத திசை இல்லை. கொடுத்து அறியாத வன். குவித்த செல்வத்தை யாவருங் கொள்ளக் கண்டு விம்மிதனாக நிற்பன். சிவ மணங் கமழும் வாய். ஐந்தெழுத்துறையும் நெஞ்சு. அடியவரை

வணங்கும் சென்னி. அச்சுவப்பதி, அச்சுவைப் பதியானுன்.

அவன் மனங் கவர் மனேவி மாளவி, கொண் கண் குறிப்பறிந்தொழுகும் நீராள். கணவருக்கு எதிரில் வராதவள்; ஏன்! பக்கத்திலும் வரமாட்டாள்; சற்று, பின்னே நெருங்கி வந்து கொண்டிருப்பாள்; கொழுநன் கண்களேயும் வாயையும் பார்த்துக் கொண்டிருப்பாள். புலவர்கள் கையைப் பார்ப்பார் கள். பகைவர்கள் திருவடியைப் பார்ப்பார்கள். மாளவி, கற்பின் செல்வி; திருவின் உறைவிடம்; பொறுமைக்கு அணி; இனிமைக்கு இனிப்பு; கல்விக் கடல்; அறிவமுது. மனேவியின் குண நலன்களேக் கண்டு, மகிழ்வான் மன்னன்.

இருவரும், மத்ர தேசத்தை இனிது ஆண்டனர்; இறைவழிபாடு புரிந்தனர்; வேள்விச் சாலேயமைத் தனர்; கல்விச் சாலே புதுக்கினர்; எண்ணி எண்ணி நாட்டில் நலம் புரிந்தனர். நாடு செழித்தது. காடு மயங்கியது. அறம் பெருகியது. மறம் நின்றது. திரு உறைந்தாள். மத்ர தேசம் மகிழ்ச்சியில் திளேத் தது.

மன்னவனுக்கும் மாளவிக்கும் மகிழ்ச்சி இல்லே. கிஞ்சுக வாய் மலர்ந்து, கிள்ளே மொழி பேசும் பிள்ளேயில்லாக் குறை. தானும்தையலுமாய் அவ்வா னுயர் மாளிகையில் வளேய வந்தனர். முகம் மலர்ந் திருப்பர்; அகம் மலரவில்லே. மொழி தித்திக்கும். அதில், உயிரில்லே. கொஞ்சு நடைக் குழந்தை நோக்கி நின்றனர்.

தனது உயிராம் குடிமக்களைத் தன்னைப்போற் காக்க ஒரு மகனை இரந்து நின்றான். இருவரும், புதல்வரை நாடி அறம் பயின்றனர். சுமங்கலிகளை வழிபட்டனர். இனிய சாலைகளை அமைத்தனர். சுமைதாங்கி நாட்டினர். பசுவிற்கு புல்மேய நிலங்கள் விட்டனர். கோயில்களில் விழவெடுத்தனர். தம் முக மல்லாது, குழந்தை முகம் காணவில்லை.

நெடிது கவன்றனர்; நீளத் துயருற்றனர். அமைச்சர்கள் அரசர்க்கு ஆறுதல் கூறினர். சோதிடர், சோதிடம் கூறினர். மாந்திரிகர், மந்திரமிட்டனர். மருத்துவர் மருந்தளித்தார். மன்னவன், சிவபெருமானைத் தஞ்சம் புகுந்தான். பல அறமும் பரிதவமும் புரிந்தும் பாலகனைப் பார்க்க முடியவில்லை. விரதங்களால் தங்கள் மேனியை இளைத்துக்கொண்டனர்.

“மாளவி! சாலவும் அயர்ந்தேன். மாநிலம் புரக்கும் மகவெனக்கில்லையோ? மக்கள் மொழி கேளாது, மாளுவேனோ? பிஞ்சு முகம் காணாது, என் உயிர் பிரியுமோ? மொழிக்கு மொழி தித்திக்கும் மழலை கதி நறை பாயும் அத்துவதரிதழ்ச் செவ்வாய், எனக்குக் கிடைக்காதா? இறைவன் குழந்தைகளிடம் விரும்பித் தங்குகிறான். அதனால்தான், குழந்தையில்லாதவன் கடவுளைக் காண முடியாது என்றார்கள்.”

மாளவி, “நாயகரே! வருத்தமேன்? இறையருள் எய்தும். குழந்தைச் செல்வத்தின் இன்பந் துய்க்கத் தாமே குழந்தையாக வந்தவரல்லவா நம் சிவபெரு

மான். அவர், மனம் இரங்கமாட்டாரா? உங்கள் தவம் வீண் போகாது.''

அச்சுவப்பதி: ''அஞ்சுகமே! எத்துணை நாளைக்கு உன் மொழியை யான் கேட்பது? என் மொழியை நீ கேட்பது? நம் இருவர் மொழிக்கும் துணை வேண்டாவா? 'கண்ணே! கற்பகமே! மணிவண்ணு! செல்வமே!' என்றழைப்பதல்லவா மொழிக்குத் துணை? குழந்தைகளை அழைப்பதில் அன்பு தோய்ந் திருக்கிறது. அன்பில் இறையவர் வாழ்கிருர்.

பெண்ணமுதே! முருகப் பெருமான் திருநாமங் கள் மெய்ம்மை குன்ரு மொழிக்குத் துணை என்பார் கள். அவர் குழந்தைக் கடவுளாக இருப்பதனுல் தானே? குழந்தை வேலராம் அக்குருநாதன் திருப் பெயர்கள் உண்மையாகவே மொழிக்குத் துணை தான். மாளவி! சிவனுக்கும் உமைக்கும் சிந்தைக் குகந்த செழுங்குருத்தாகத் தோன்றிய குமார தெய்வம், நம் குறை தீரக் குழந்தையாக வர மாட்டானு? அழைத்தால் ஓடி வராத ஐயனு அவன்? குமரனே நமக்குக் குமாரனுக வர வேண்டும் என்று அவாவுகிறேன். நிறைவுறுமா தேவி?''

மாளவி: ''உக்கும், நல்ல ஆசைதான். நான் அப்படி நினைக்கவில்லை. மாமியார் மெச்சும் மருமக ளாக அள்ளியணைக்கும் வள்ளி தெய்வத்தை என் மகளாக நான் வரிக்கிறேன். நீங்களானுல் முருகனை விரும்புகிறீர்கள்? இது எப்படியாவது?''

மன்னன் நகைத்து, ''ஒகோ! அப்படியா? கைலையிற் குறும்புசெய், அக்கதிர் வடிவேலனைப்

பாடு; யாழில் இசை; அவன் குறும்புத்தனம், இங்கும் நிகழட்டும். மாதரசே! அவன் உண்மையாகவே பசிக்கு அழுதானுமே? உம்? என்ன மாயக்காரன்! கருணைபொழி கமலக்கண்களில் கண்ணீரும் வந்ததாமே! உம்; எங்கே, அந்த மயூரநாதனைப் பாடு. வள்ளியையும், பாடேன்? யார் வருகிருர்கள் பார்க்கலாம்.'' என்ருன்.

மாளவி, மென்மையாக நகைத்தாள். எழுந்து கணவனை வணங்கி, யாழை எடுத்து வந்தாள். முறையாக அதன் நரம்புகளைத் தான் எடுத்துக் கொண்ட பண்ணிற்கு ஏற்ப அமைத்தாள். யாழோசையும் குரலோசையும் சேர ஆளத்தி செய்தாள். அவ்வின்னிசை, அரண்மனை எங்கும் பரவிச் சூழ்ந்தது. மன்னன் தன்னை மறந்தான். சண்முகப்பிரியா-என்ற பெரும்பண்ணில் மாளவி பாடுவா ளாயினுள். அப்பாடல் கேட்டு, உமையம்மை அங்குவந்தாள். மகேச்சுரர் வந்தார். முருகன் அவ்விசையில் நடம் பயின்ருன். இன்பம் ஒழுகிப் பெருகியது.

எள்ளத் தனைவந் துறுபசிக்கும்
　　இரங்கிப் பரந்து சிறுபண்டி
எக்கிக் குழைந்து மணித்துவர்வாய்
　　இதழைக் குவித்து விரித்தழுது
துள்ளித் துடித்துப் புடைபெயர்ந்து
　　தொட்டில் உதைந்து பெருவிரலைச்
சுவைத்துக் கடைவாய் நீர் ஒழுகத்
　　தோளில் மகரக் குழை தவழ
மெள்ளத் தவழ்ந்து குறுமூரல்
　　விளைத்து மடியின் மீதிருந்து

விம்மிப் பொருமி முகம்பார்த்து
வேண்டும் உமையாள் களபமுலை
வள்ளத் தமுதுண் டகமகிழ்ந்த
மழலைச் சிறுவா வருகவே
வளருங் களபக் குறும்பை முலை
வள்ளி கணவா வருகவே.

—: பகழிக்கூத்தர்.

சண்முகப்ரியா, உண்முகம் நெகிழ்த்தது. பறவைகள், மகிழ்ந்தன. செடி கொடிகள் தழைத்தன. விலங்கினங்கள் களித்தன. காற்று அசைவில தாயிற்று. மாளவி, கண்களை மூடிப் பாடிக்கொண் டிருந்தாள்- சிவக்குருந்தனின் செயல்கள், அவள் அகக் கண்களில் தோன்றி, விளையாடின. 'மடியின் மீதிருந்து' - என்றபோது, அவள் மடியிலேயே குமாரன், விரலைச் சுவைத்துக்கொண்டு, காலை உதைத்துக் கொள்வதைப்போல், கண்டாள்.

மன்னவன், தன்னை மறந்தான். நெஞ்சம் வறண்டுவிட்டது. இதழ் துடித்தது. கண்கள் பனித்தன. செவிகள் குழைந்தன. 'முருகா' - என்று அழைத்தான். அவன் மூச்சுக் காற்றுப் பட்டு அருகிருந்த மலர்கள் வாடின. "மாளவி! தெய்வ கானம். உன்னிசை, இன்னிசையாக, இன்பம் விளைவித்தது. இங்கே ஒரே சமயத்தில், வள்ளியை யும் வள்ளலையும், வருக - என்று கூப்பிட்டு விட்டாயே? யார் வரப்போகிறார்களோ?" என்றான்.

மாளவி: "வள்ளி வந்தால், முருகன் அவளைத் தேடி வரமாட்டானா?"

மன்னவன்: "ஏன்? மணாளனைத் தேடி, வள்ளி வரமாட்டாளா? போகட்டும்; வள்ளியோ, மணாளனோ, யாரோ வரட்டும். உம். பெண்ணரசி! சிவனுக்கு முருகனைத் தந்தவள் உமை. உமையாள் பயந்த இலஞ்சியந்தானே அவன்? அவ் வுமா மகேசுவரியை நோக்கித் தவமிருப்பேன். தன் குழந்தையை எனக்குத் தரட்டுமே?"

மாளவி, "மருமகளைத்தான் தரட்டுமே?" என்றாள். மன்னவன் நகைத்து, "உம். போட்டியா? சரி குறையிரப்போம்; குமரியோ, குமரனோ, அவள் தரப் பெறுவோம். ஏன்?"

என்ற மன்னவன், மீண்டும் தன் மனைவியை நோக்கி, "மாதரசே! உமாதேவியார், பல அவசரங்களை உடையவள். அவள் அவசரத்தில் சாவித்திரி என்பதும் ஒன்று. சாவித்திரி என்ற திருநாமத்துடன் சாவித்திரி தேவியாக அருள் புரிகிறாள், அவ்வங்கயற் கண்ணி.

சாவித்திரி தேவியை வழிபடுவோர் பல நல்ல வரன்களைப் பெறுவர். சாவித்திரி தேவியை நோக்கிச் சாவித்திரி விரதமிருந்தால் அச் சாவித்திரி தேவி மகவிலார்க்கு மகவாகவும், தனமிலார்க்குத் தனமாகவும் வருவாள்.

எந்தப் பெண்மணி, சாவித்திரி விரதம் இருக்கிறாளோ, அவள் நாயகனுக்கு ஆயுள் பெருகும். மாங்கல்யம் வளரும். அதனால்தான் நீயும், சாவித்திரி விரதமிருக்கிறாய்." என்றான்.

அது கேட்ட மங்கை, நாணித் தலை கவிழ்ந்தாள். புன்னகை புரிந்தாள்.

மன்னவன், "பெண்ணே! திரயோதசியில் தொடங்கிப் பிரதமையில் பாரணை செய்வது சாவித்திரி விரதம். தண்ணீரன்றி வேறுண்ணாது ஏகாக்கிர சித்தராய் இருத்தல் வேண்டும். அப்படி இருப்பார்க்கு அத்தேவி இகம், பரம் இரண்டுந் தருவாள்.

"மாளவி! அவ்வம்மையை நோக்கி, யான் தவமிருப்பேன்; விரதமிருப்பேன். சாவித்திரி வேள்வி புரிவேன். நீயும் அநுசரணையாயிரு." என்றான். கணவனை வணங்கிய மாளவி, 'அப்படியே' என்றாள். மன்னவன் அமைச்சர்களை அழைத்தான்.

"அமைச்சர்களே! யானுந் தேவியும் சாவித்திரி தேவியை நோக்கித் தவமிருக்கப் போகிறோம். யாம் வரும்வரை இந்நாட்டைக் காத்து வாருங்கள்" என்று அரசை அவர்களிடம் தந்தான். மேடானதும், மழை பொழிந்தால் தண்ணீர் தேங்காததுமான நிலத்தை, உழுது வேலியிட்டான். அதில் தவச் சாலையும் வேள்விச் சாலையும் அமைத்தான். வேள்வியில் இருக்கும்முன் வறியவர்க்கு வழங்கினான். கோயில்களில் இடையறாது வழிபாடு புரியச் செய்தான். புலவர்களுக்கு அள்ளிக் கொடுத்தான். நிறைந்த அறங்களைப் புரிந்து, நல்ல நாளில் சாவித்திரி வேள்வியைத் தொடங்கினான்.

அச்சுவப் பதியென்றோதும் அரும்பெயர் அரசர் கோமான்
கச்சணி முலைதே ரல்குல் மாளவி கணவன் செங்கோல்

இச்சையினியற்றி வாழ்ந்தான் எழிலுடைப் புதல்வரின்றி
முச்சகம் புகழ் சாவித்ரி முளரியந் தாள் பூசித்தான்.†

அஸ்வபதி, சாவித்திரி மந்திரங்களினுல் லட்சம் ஆகுதி கொடுத்து வேள்வி செய்தான். ஐம்பொறி களை அவித்து, பிரமசரியத்தைக் கொண்டான். பகலை எட்டாகப் பிரித்து, அதன் ஆருவது, ஆரு வது பகுதிகளில் மட்டும் தண்ணீரருந்துவான். தேவியை நினைந்து நீரருத கண்களையுடையவனு ஞன். இரவும் பகலும் வேள்வி நடந்தது. பல முனிவர்களும் அந்தணர்களும் உடனிருந்து அவ் வேள்வியைச் செய்வாராயினர். அங்கு எப்பொழு தும் சுரம் தவருத மந்திரங்கள் முழங்கிக்கொண் டிருந்தன.

மன்னவன் உரையற்ருன்; உணர்வற்ருன்; உளமற்ருன்; உயிரற்ருன். உரையும், உணர்வும், உளமும், உயிரும் தேவியானுள். மொழி குழற அழுது, தொழுது உருகினுன். 'வருக' என அறை கூவி, ஆளுவாய் என்று துதிப்பான். தேவி பஞ் சாட்சரத்தைச் செபித்துச் செபித்து நா தழும்பேறி யது. சிவ யோகத்தால், தேவியை அணுகினுன். அத்தவச்சாலையில் சித்தர் நின்றனர். முத்தர் கூடினர். பித்தர் பேசினர். கற்புத் தெய்வம் காத்திருந்தது.

வேள்வி பதினெட்டு யாண்டுகள் நடை பெற்றது. தீவலஞ் செய்தது. வேந்தன் உருகினுன்.

---

†பெயர் குறிக்காத இக்கவிகள் எல்லாம் நல்லாப் பிள்ளை யினுடையவை.

மாளவி குழைந்தாள். "தேவி! நின் திருவருள் யாதோ?" என்று வேண்டினுள்.

"தாயே! சகம் யாவும் நீயே! உலகுயிர்கட் கெலாம் அன்னையே! உன்னையே துதித்தனன். சாவித்திரி! நீயன்றி, ஆவித் துணை யார்? உன் சரணமலர் பற்றினேன்; என் அரணம் அறட்டும். ஐந்தெழுத்தம்மையே! மைந்தன் என், சிந்தையறி யாயா? நைந்துருகும் என் நினைவறியாயா? நினைவில் நிற்பவள் நீ யல்லவா? அந்தரி! உன் அருளைத் தவிர என்னையாள்வது எது? குழைந்த என் குறை தீர்க்கவில்லையானுல், உன்னை யார் வந்திப்பார்கள்? அம்மையே! கருணைகரி என்ற உன் திருநாமம் பொய்யாகலாமா?

பாழ்த்த வினையேனின், முறையீடு இயற்கை தான், என்று எண்ணிவிட்டாயா? அல்லது யான் இன்னும், திருவருளைப்பெற உருகவில்லையா? காலம் நீட்டிக்காதே. கொடுக்க மனமில்லாதவர்கள், வறிதே காலம் போக்குவார்கள். தயாபரியாகிய நீ, அதைச் செய்யலாமா? அறம் வளர்த்த நாயகி! உன் அருளுக்குப் பஞ்சமா? கொடுத்தாற் குறையுமா? ஏன் கொடுத்தாய்? என்று கேட்பாரார்? கொடுத்துப் பழகாதவளா?

"சங்கரி! உன் கணவனை, மலரம்பாற்ருக்கிய, மன்மதனுக்குக் கரும்புவில் கொடுத்தாய். மதுரையில் அம்மியில்வைக்கத் திருவடியைத் தந்தாய். எங்கள் குமாரமூர்த்திக்குப் பால் கொடுத்தாய்; வேல்

கொடுத்தாய். எனக்குத் தருவதில் என்னம்மா அழுகுணி?

வேல்கொடுத் தாய்திருச் செந்தூர் வேலவர்க்கம் மியின்மீது வைக்கக்
கால்கொடுத்தாய் நின் மணவாளனுக்குக் கவுணியர்க்குப்
பால்கொடுத்தாய் மூவர் பயப்பட மதவேட்குச் செங்
கோல் கொடுத்தாய் அன்னையே எனக்கேதுங்கொடுத்திலையே.

—: படிக்காசுப் புலவர்

"தேவி! பராசக்தி! அம்மை! திரிபுராந்தகி! மகம்மாயி! அச்சுத சகோதரி!" எனத் துதித்தான்; உருகினான்; பாடினான்; பரவினான்; அழுதான்; தொழுதான்; மெய்மறந்தான்.

"மருவு குருபதியுவதி பவதி பகவதி மதுரவசனி
பயிரவி கவுரி உமையாள் த்ரிசூலதரி
வநசை மதுபதி அமலை விசயை திரிபுரை புநிதை
வநிதை அபிநவை அநகை அபிராம நாயகி"

—: அருணகிரிநாதர்

என்று பராவினான்.

"அம்மா குங்கும நிறத்தினளே, மஞ்சளாடை தரித்தவளே! மட்டில்லாக் கருணைபெறும், மாதேவி! நீ காத்தி என்று உனை வேண்டுவன். காவாயேல் யாதுசெய்வேன்? சுந்தரி! உனதிருதாள் தஞ்சம்; உலகளிக்கும் மகவு உனதருளால் வேண்டினன். தருவது உன் கடன். மழைக்கு வண்மையைக் கொடுத்த நீ, வண்மையற்றவளா? யான் பாவியானாலும், நீ தாயல்லவா? கண் துடைக்கும் நீ கனிவடைத்து நின்றுயா?

ஆனேறுடைய பவளமலை
அருகார் பச்சைப் பசுங்கொடியே
அருளே அன்பில் விளைகின்ற
அமுதே பிறவி யகற்றுமலைத்
தேனே என்றுந் தெவிட்டாத
தெய்வப் பாகே திருமுருகன்
தேட ஒளித்துப் பின்னெடுத்துத்
தீம்பா லளிக்குந் திருத்தாயே
வானே எனினும் வேண்டா துன்
மலர்த்தாள் வேண்டும் அடியர்தமை
வலிய அழைத்து வரமளிக்கும்
வரமே மலயத் துவசனருள்
மானே வழங்கு மதுரை வளர்
மயிலே வருக வருகவே
மறைகள் பரவும் அங்கயற்கண்
மணியே வருக வருகவே.

—: கிருபானந்தவாரி

என வுருகியழுதான். விழிநீர் வெள்ளமிசையானுன், வருந்தியழைத்தால், வாராதிருப்பளா?

அம்மை வெளிப்பட்டாள்; காட்சி தந்தாள். 'அசுவபதி! மாளவி!' என்று அழைத்தாள். தவம் பயன் பெற்றது. வேள்வி முடிவுற்றது. மன்னன், அகத்தே கண்ட சாவித்திரியைப் புறத்தேயுங் கண்டான்; பார்த்துக்கொண்டே நின்ருன்; நெடுநேரம் நின்ருன்; அம்மா! என்று கதறினுன்; பதறினுன்; படிமிசை வீழ்ந்தான்; பலமுறை பணிந்தான்.

"எம்பிராட்டி! பாவியேற்கும் உன் பவள மேனியைக் காட்டினையோ? ஆகா! என்னே உன் அருள்திறம்! தஞ்சம்! தஞ்சம்!" என்று குழைந்தான்.

சாவித்திரி, "வேந்தே! பிரமசரியத்தால் நீ தூய்மையுற்றவனானாய். பத்தியால் நீ பவித்திர னானாய். உனக்காக யான், இந்த அக்கினியிலிருந்தே தோன்றியிருக்கிறேன். கவலையை விடு. என்ன வேண்டும்? கேள். தர்மந் தவறாதவனல்லவா நீ? நினைத்ததையே கேள்" என்று அருளினாள்.

மன்னவன் கேட்டு மகிழ்ந்தான். "அம்மா! உன் திருவருளால் இவ்வுலகைத் தாங்கும் மிகுந்த குமாரர்களை விரும்புகிறேன். அறத்தின்மேல் நாட் டம் கொண்ட எனக்கு வேறு என்ன வேண்டும்? அம்மா! எனக்கு அருளுவதில், தடையில்லையானால் இதனையே எனக்கு வரமாகத் தருவாய்" என்று வேண்டி நின்றான்.

அது கேட்ட உமாதேவியார், மனதில் நகைத் துக் குறையிரந்து நிற்கும், கோமானை நோக்கி, "அரசனே! நல்ல பிள்ளைகள் பிறக்க வேண்டு மானால், கொஞ்சமாவது தவம் செய்ய வேண்டும். நீ அதைச் செய்தாய். தவமிலார்க்குச் சத்புத்திரர்கள் எங்கிருந்து வாய்க்கும்?

"நீ நல்ல பத்திமான். உனக்கு மிகுதியான குமாரர்கள், உன் மனைவியினிடத்திலேயே தோன்று வார்கள். ஆனால், இப்போது என்பெயரைக் கொண்ட ஒரு பெண் குழந்தை பிறக்கும். அதில் நீ மன அமைதி அடை. இம் மண் தத்துவத்திற்குத் தலைவனான பிரமன் விதித்த விதியால் உனக்கு இது நேர்ந்துளது. நீ சிறப்பாக என்னை வழிபட்டதனால்

உனக்கு இந்த அரிய வரத்தைத் தருகிறேன்'' என்று சொல்லி, ஐந்து திருமுகங்களையும், எட்டுத் திருக்கைகளையும் உடைய அவ்வுமாதேவி, அக் கணமே அங்கிருந்து மறைந்தருளினுள்.

சாவித்திரியின் இன்னருளைப்பெற்ற மன்னவன் விரதபூர்த்தியாகிய நீராடலைச் செய்து, வேண்டிய பல அறங்களைப் புரிந்தான்; திருக்கோயில்களில், சிறப்பான திருவிழாக்களைச் செய்தான்; நகர் திரும்பினுன்; இனிது செங்கோல் நடாத்துவா ணுயினுன்.

மாளவி, முன்னிலும் பன்மடங்கு சாவித்திரி தேவியையும், தன் கணவனையும் வழிபட்டாள். சுவாதியில், இப்பியில் விழுந்த மழைத் துளிபோல், சாவித்திரிதேவியின் திருவருளால் மாளவி கருவுற் ருள். திருவுற்ற அவள் கரு, தக்கார் கைப்பட்ட செல்வம்போல் வளர்ந்தது.

மாளவி, எப்பொழுதும் சிவசிந்தையுடன் இருப் பாள். கொழுநனைத் தொழுவதும் அடியார் பூசை செய்வதும் அவள் தொழிலாயின. நாளும் பல தீர்த்தங்களிற் சென்று நீராடினுள்; கோயில்கட்குப் போய் வணங்கினுள்; பல தெய்வங்களை வேண்டிக் கொண்டாள்; நன் மகவு பிறக்கும்பொருட்டு, அறம்பல புரிந்தாள்.

மாளவியின் உள்ளம் சாந்தியாக இருந்தது. படபடப்பு, கோபம், பொருமை, அச்சம், அவா, பொய்ம்மை இவைகளை நீக்கி, இனிமை, அமைதி,

அன்பு, கருணை, வாய்மை இவைகளைக் கொண்டாள். கருவுற்ற அவள் குறைவாகவே உண்ணுவாள். அதுவும் சத்துவ குணத்தைத் தரவல்ல உணவாக உண்ணுவாள்.

நல்ல கனவுகளாகக் காணுவாள். அவள் கனவில், ததீசி, மரீசி முதலிய முனிவர்களும், சரசுவதி, இலக்குமி, இந்திரை முதலிய தெய்வப் பெண்களும் வருவார்கள். மிகுதியாக உறங்காத அவள், மிகுதியாக அறிவு நூல்களைப் படிப்பாள்.

கனவில், பேய் வருவதுபோலவும், பூதம் வருவது போலவும், கண்டு, பயந்து, ஆ என்று அலறிச் சில பெண்கள் வருந்துவார்கள். மாளவி அப்படியில்லை. சிலர், கருவுற்ற காலத்தில், மிகுதியாக உண்டு தனக்கும், கருவுக்கும், துன்பந் தேடுவார். தகாத உணவுகளையும் உண்ணுவர். அது குழந்தையின் குணத்தை மாற்றும். அதிக தூக்கம், குழந்தைக்குத் தமோ குணத்தைச் சேர்க்கும். மாளவியின் கரு, குற்றமின்றி வளர்ந்து முற்றியது.

உலகெங்கும் மகிழ்ச்சி நிலவிய காலம்; நற்கோள்கள், உச்சமும் ஆட்சியும் பெற்றிருக்க, அபிஜித் என்ற நல்ல முகூர்த்தத்தில், உலகில், அறமும், வாய்மையும் நிலைபெறும் பொருட்டு, கற்புத்தேவதைக்கு உறைவிடமாக மாளவி, தாமரை இதழ் போன்ற கண்களையுடைய சிவந்த ஒரு பெண் மகவை ஈன்றாள். மத்ரதேசத்தில் புத்ரோத்சவம் கொண்டாடினார்கள்.

மன்னவன் மகிழ்ந்தான். ஏழுயாண்டுகள் திறை தவிர்த்தான்; ஏழு நாட்கள் கருவூலத்தைத் திறந்து விட்டான்; சிறை விடுத்தான்; திருக்கோயில் களில், ஆராதனை நடந்தது. அடியார்களுக்குச் சமாராதனை செய்தான்; பரிசில்கள் வழங்கினான்; வரிசையறிந்து பாராட்டினான்; புலவர்கள் வாழ்த்தினார்கள். வேந்தர் பலரும் வந்து, நலம் விசாரித்தார் கள். அரண்மனை தேவலோகமாக மாறியது.

சாவித்திரி மந்திரத்தினாற் செய்த வேள்வியாலும், சாவித்திரிதேவியின் திருவருளாலும் பிறந்த அப்பெண்மகவுக்குப் புரோகிதர்களும், புலவர்களும், அமைச்சர்களும் சாவித்திரி என்றே பெயரிட்டனர்.

மன்னவன் தொழுது மீண்டு வாழுநாள் மனைவி சாவி
அன்னவள் கருவா யாங்கோர் அரிவையைப் பயந்த பின்னர்
தன்னுள மகிழ்ந்து சாவித் திரியென நாமஞ் சாத்தி
மன்னவன் வளர்த்தா னந்த நங்கையு மங்கை யானாள்.

மகவைத் தொட்டிலிட்டுத் தாலாட்டினர். பொன்னூசல் மாட்டிப் பாணர்கள் இருந்து பாடினார்கள். புலவர்கட்கும் மற்றவர்கட்கும் மன்னன் வெகுமதி தந்தான். மாளவி, தன் குழந்தையைக் கண்ணினும் உயிரினுங் கட்டிக் காத்தாள். தங்கம் போன்ற அக்குழந்தை தந்தையின் மார்பிலும், தாதிகள் தோளிலும், தாயின் மடியிலும் தவழ்ந்து வளர்ந்தது. தரையில், வளரா அப்பொற்றொடியை வண்ண வண்ணப் பெயரிட்டு, அழைத்துச் சீராட்டினர்.

குகப்ரியா—ஆதி

கண்ணொளியே தண்ணமுதே கற்கண்டே தாலேலோ
பெண்கொடியே மாளவிஎன் பெரும்பேறே தாலேலோ

சாவித்ரி தேவியருள் சாவித்ரி தாலேலோ
மாவத்ரி தேவியென வாழியநீ தாலேலோ.

—திருப்புகழ்மணி.

சாவித்திரி, வளர்ந்து, குறுநடை பயின்று, மழலை பேசினுள். தந்தைக்கும், தாய்க்கும், பெரு மகிழ்வு. உம்மா-உம்மா என்பாள். அசுவபதிக்குப் புரியாது. "மாளவி! என்ன இது? உம்மா-உம்மா என்ருல் என்ன? அம்மா என்ருலும் உன்னைக் குறிக்கும்?" என்று கேட்டார்.

மாளவிக்குப் பெருமை பிடிபடவில்லை. இந்த மொழி-எழுத்தில், கிடையாதல்லவா? இலக்கணமும், இலக்கியமும் ஏது? மழலை மொழிக்கு விரிவுரை யாளர் தாய்தானே? "இது தெரியவில்லையா? கண்ணே! சாவித்திரி! உம்மான்னு என்னும்மா?" என்று கேட்டாள். குழந்தைக்குத் தாய் தன்னைக் கேள்வி கேட்கிருள் என்ரு தெரியும்? அது இயற்கை யாக உம்மா என்றது. "ஓ! கோ! அதுவா? என் கண்ணே மாணிக்கமே! உனக்கு எப்படியடி தெரிந்தது? என்னுங்க? உங்களுக்குத் தெரிகிறதா? உம்மான்னு, உமாமகேசுவரி என்று பொருள். தெரிந்ததா? உக்கும்" என்ருள்.

மன்னன் கேட்டு நகைத்தான். "மாளவி! குழந்தை மொழிக்கு நீ சொல்லியதுதான் விளக்கம். நான் அதை மறுக்க முடியுமா? சரி குழந்தையை என்னிடம் கொடு" என்று வாங்கிக் கொஞ்சுவான்.

"சாவித்திரி! இங்கே பார். உன் அம்மாவைப் போல் நீ அசடாக இருக்கக் கூடாது. உம்! அறிவுக் கொழுந்தாக இருக்கவேண்டும் என்ன?"

மாளவி, "ஐய! உங்கள் குழந்தை அறிவுக் கொழுந்தாயிருக்கணும் என்ருல், முதலில் நான் அறிவுச் சுடராயிருக்கணும்; தெரிந்து கொள்ளுங்கள். டே! கண்ணு! நீ அம்மாவிடம் வந்துவிடப்பா. அப்பாவிடம் இருந்தால் இப்படித்தான். கொடுங்கள் என்னிடம்."

மன்னன், "மாளவி! நீயே குழந்தையை அபகரிக்கிருயே? எனக்கும் தானே இந்த செல்வம்?"

மாளவி, "ஏன் எனக்குந்தான்" என்ருள். "சரி. இருவருக்குமேதான். நடுவில் இருக்கட்டும்" என்று மன்னவன், பொதுக் கட்டிவிட்டான். சாவித்திரி, மொழி பயிலும்போதே, சிவநாமஞ் சொல்லி வளர்ந்தாள். சிவா, சிவா என்று சதா சொல்லுவாள்.

அம்மா, அப்பா என்று சாவித்திரி பேசும் மழலை நறுமணங் கமழ்ந்தது. "அப்பா! நாளைக்கே வந்துட்டியா? நேத்தும் போவியா?" என்று கேட்பாள். அது அசுவபதிக்குத் தேனு இனிக்கும். சாவித்திரிக்குத் தெரிந்த எண் எல்லாம் ஒன்றே ஒன்றுதான். எதற்கும் ஒன்றைத்தான் காட்டுவாள். சொல்லுவாள். "சாவித்திரி! இது எத்தனையம்மா?" என்று கேட்டால், "ஒந்து" என்பாள். ஒந்துதான் யாவற்றிற்கும்.

இறையவர் ஒருவர்தான். உருவம் பலவானாலும் தெய்வம் ஒன்றே என்ற தத்துவம், யாருக்குத் தெரிகிறது. இதைத்தான் சாவித்திரி, ஒந்து ஒந்து என்று காட்டினாள். எத்தனை காட்டினாலும் ஒந்துதான். எல்லா எண்களும் ஒன்றில்தானே அடங்கும்? எல்லா எண்களும் தோன்றும் நிலைக்களன் ஒன்று தானே? அதுபோல், எல்லாத் தெய்வங்களும் தோன்றவும், ஒடுங்கவும், நிலையாயது சிவம் ஒன்றே. இப் பேரறிவு சாவித்திரிக்கு இயற்கையாகவே கிடைத்தது.

தாயார் அன்பாலும், தந்தையார் அரவணைப்பாலும், சாவித்ரி வளர்ந்தாள். அவளுக்கு இரு தோழியர் கிடைத்தனர். ஒருத்தி அறம்; மற்றொருத்தி கற்பு. இருவரும் சாவித்ரியுடனே வளர்வதானார்கள்.

சாவித்திரியைச் சுற்றி எப்பொழுதும், சிலர் இருப்பார்கள். இனிமை, ஒப்புரவு, வாய்மை, ஒழுக்கம், தூய்மை, அடக்கம், பணிவு, கொடை, முதலிய நற்குணங்கள், சாவித்திரியைச் சூழ்ந்து ஒளிபெறும்.

மணற்சிற்றில் இழைக்கும் சாவித்திரி, “மகா தேவா! சம்போ! கங்காதரா! சிவா!” என்று சிவ நாமங்களைச் சொல்லி, விளையாடுவாள். வரும் அடியவர்க்கும், விருந்தினர்க்கும் பணிவுடன் வேண்டுவன தருவாள். விளையாட்டிலும் பொய்யறியாதவள். தித்திக்கும் தேன்மொழியாகப் பேசுவாள். பெரியவர்களைக் கண்டால் வணங்குவாள். யார்க்கும் இதமே பேசுவாள். வேலைக்காரர்களிடம் அன்பாகப் பழகுவாள். உயர்வு தாழ்வு அவள் மனத்தில் இல்லை.

இப்படிச் சற்குணக் குன்ருக வளர்ந்த சாவித்திரிக்கு, எழுத்தறிவித்தனர். சாவித்திரி படித்தாள் என்று சொல்லலாமா? கலைகள் வந்து அவளிடம் தங்கின. சாவித்திரிக்கு ஒரு ஆசிரியர், சில நாளைக்குத்தான். அதற்குள் அவர்களிடம் சரக்கு தீர்ந்து விடும். மறுபடியும் வேறு ஆசிரியர்தான். அவர் நிலையும் அவ்வளவுதான். சாவித்திரிக்குச் சொல்லி வைத்த ஆசிரியர்கள் எல்லாம் அங்கேயே நின்று விட்டார்கள். சாவித்திரி நெடிது வளர்ந்து, கல்வியின் உச்சிக்குப் போய்விட்டாள். அவர்கள், அகல் விளக்கு. இவள் தீப்பந்தம்.

ஒரு நாள் மாலை நேரம். திருக்கோயில்களில் எக்காளம் முழங்குகிறது. பறவைகள் கூடுநோக்கிப் பறக்கின்றன. கறவைகள் வீடுநோக்கி வருகின்றன. அசுவபதி தன் மனைவியுடன், மலர்ச்சோலையில் உலவிக் கொண்டிருந்தார். ஒருபுறம், இருவாட்சிக் கொடியின் கீழ் அமர்ந்து சாவித்திரி படித்துக் கொண்டிருந்தாள். தந்தையொடு தாயையும் கண்டவுடன், எழுந்து நின்ருள். விரைந்து வந்தாள். பணிந்தாள். "அப்பா! அம்மா! என்னைத் தேடியா வந்தீர்கள்? அழைத்திருந்தால், வந்திருப்பேனே!" என்ருள்.

மூவரும், சென்று பசும்புல்லில் அமர்ந்தார்கள். சற்றுத் தொலைவில் வேலைக்காரர்கள் மன்னருக்கு என்ன வேண்டுமோ என்ற குறிப்புடன் நின்று கொண்டிருந்தார்கள். அதற்கும் அப்பால், கோயில் கோபுரம் தெரிந்து கொண்டிருந்தது. மன்னவர்,

மகளை நோக்கிக் "கண்ணே! இங்கு என்ன செய்கிறாய்? படித்துக்கொண்டிருக்கிறாயா?" என்று கேட்டார்.

சாவித்திரி, "ஆமப்பா! கல்வியினுங்கில்லை, சிற்றுயிர்க்குற்ற துணை. மாலை நேரம், மனம் ஒரு படித்தாயிருந்து, படிக்க நன்றாயிருக்கிறதப்பா! அப்பா! நான் உங்கள் சேயல்லவா?"

மன்னவர், "ஆம், அதிலென்ன ஐயம்?"

சாவித்திரி, 'நீங்களும் எனக்குச் சேய்தான்' என்றாள். மன்னவரும், மாளவியும் கேட்டு வியந்தனர். "மாளவி! குழந்தை பேசுவதைக் கேட்டாயா? அவள் எனக்குச் சேய்; நான் அவளுக்குச் சேயாம்! உனக்கு ஏதாவது புரிகிறதா?" என்று அசுவபதி மாளவியைக் கேட்டார்.

மாளவி, "சேய், என்றால் என்ன? குழந்தை தானே? அப்படியானால், சாவித்திரி நமக்குச் சேய் தான். நீங்கள் எப்படி அவளுக்குச் சேயாவது? சென்ற பிறவியிலா? வரும் பிறவியிலா?"

அசுவபதி நகைத்தபடி, "மாளவி! சேய், என்றால் குழந்தை, செம்மைப் பண்பு, சிவப்பு, தொலை—என்று பல பொருள்கள். சாவித்திரி, எனக்குச் சேய் என்றால் குழந்தை என்று பொருள். நான் அவளுக்குச் சேய் என்றால், சிறந்தவன் என்பது பொருள். அப்படித்தானே சாவித்திரி?"

சாவித்திரி, "நீங்கள் எனக்குச் சிறந்தவர் தானே அப்பா? அம்மா! நீங்கள் என்னைப் பெற்றீர் கள், நான் உங்களைப் பெற்றேன்."

மாளவி, "என்னது? நீ என்னைப் பெற்ருயா? ஆறடி பெண்மணியை நீ எப்படிப் பெற்ருய்?" என்று குழம்பினுள். சாவித்திரி, தாயை வணங்கி னுள். "அம்மா! நீங்கள் என்னை வயிறுளைந்து பெற்றீர்கள். நான் உங்களைத் தவத்தால், (தாயாகப்) பெற்றேன். என்போற் பேறு பெற்ருர் யார்?"

மாளவிக்கும், மன்னவர்க்கும், அளவிறந்த மகிழ்ச்சி. மகளை வாரியெடுத்தார்கள். அணைத்தார் கள்; முத்தமிட்டார்கள். "கண்ணே! அறிவுச் செல்வமே! அடாடா! குழந்தை எத்தனை அழகாகப் பேசுகிறது?" என்று கொஞ்சினுர்கள்.

சாவித்திரி மீண்டும் தந்தையை வணங்கினுள். "அப்பா! நான் ஒரு பாடல் சொல்லட்டுமா?" என்று கேட்டாள். "சொல்லம்மா" என்ருர் தந்தை. 'அப்பா! அது பலவிகற்ப வெண்பா. சிவபெரு மானைக் குறித்தது. சிவனே-என்பது தோன்ரு எழுவாய். ஒவ்வொரு சொல்லுக்கும், இரண்டிரண்டு பொருள்கள் வரும். சொல்லவா' என்று குழந்தை கேட்க, அசுவபதி 'சரி' என்ருர்.

"அப்பா! நான் ஒருநாள், திருக்கோயிலுக்குச் சென்றிருந்தேன்; அங்கு சிவபெருமானைக் கண்டேன். அவர், அரவாபரணர் அல்லவா? 'தாபணி'—என்றேன். நான், பணி-பாம்புகளைக்

கேட்கிறேன் என்று தானுகிய செல்வர், பணிகளைத் தந்தார். நானும், தான்பணி என்று இருந்தேன்.

தாபணி என்றக்கால் தான்பணி தந்தானே.

அப்பா! அம்மா! தா-பணி, என்றவுடன், சிவ பெருமான், பணி-பாம்புகளைத் தந்தான். ஆனுல், நான் கேட்டது அதுவல்ல. தாப-அணி என்றேன். தாபம்-பிறவிநோய், அணி - அடுக்காக இருக்கிறது என்றேன். அதற்கு எந்தை தான்-தன்னைப் பணி—வணங்கு என்ருர். இப்படி இந்த முதல் வரி, இரு பொருள் தந்து, இன்பந் தரும்.

"அடுத்தது. அவர் காதிற் குழையினரல்லவா? தோடும் அணிந்துள்ளாரே? 'காதணி'-என்றேன். ஒகோ! குழந்தை காதணியை விரும்பிக் கேட்கின்றதென்று, காதணி தோடு என்ருர். தோடு என்ருல், அணிகலன் தானே அப்பா! தோடு என்ருல் மலர் இதழுக்குக் கூடப் பெயரல்லவா? மலரிதழைக் காதில் அணிந்து கொள்கிருர்களே? அதனுல், சிவ பெருமான், காதணி தோடு என்ருர். நான் அதையா கேட்டேன்? கா-தணி என்று சொன்னேன். கா—காப்பாற்று. தணி-ஆசாபாசங்களைத் தணி என்று வேண்டினேன். அதற்கு அவர் சொன்னுர்; மகளே! உன்னைக் காப்பாற்ற வேண்டுமானுல், நீ அறிவு நலம் பெற வேண்டும். அறிவைப் பெறுவதற்குக் கருவியாயிருப்பது காது. அந்தக் காது என்ற பொறியானது, வான் என்ற பூதத்தினிடத்திருந்து, ஒலி என்ற புலனையுடையது. ஆக அது ஞானேந்

திரியம். காதுகளால் என் புகழையும், நல்ல நூல் களின், கேள்விகளையும் கேட்கலாம். அதனால், காது களுக்கு அணியாயிருப்பது கேள்வி; அக் கேள்வி யால், நீ தோடு-அறியாமையைத் தோண்டு. அப் பொழுது நான் உன்னைக் காத்து ஆசாபாசங்களைத் தணிப்பேன்.' என்றாரப்பா.

காதணி என்றேனு காதணி தோடென்றான்.

அப்பா! காது, அணி, தோடு என்று முன்னிலை ஏவலாகச் சொன்னான். காது - பொய்ம்மையைக் கொல், அணி-வாய்மையை அணி, தோடு-அறியா மையைத் தோண்டு என்று பல பொருள்கள்படப் பேசினார்.

"தந்தையே! சிவபெருமான், திருமாலின் கண்களை அணிந்தாரல்லவா? கோ என்றால் கண் கள் தானே? அதனால், நான் 'கோவணி சொல்' என்றேன். நான் கண்ணுக் கணிகலம் என்ன சொல் என்று கேட்கிறேன், என்று கோவணி-கண் ணுக்கு அணியாவது, தண்-குளிர்ச்சி, கருணை என்று சொன்னார்.

கோவணி சொல்லென்றேன். கோவணி தண்ணென்றான்.

"எந்தையே! யான் கண்ணுக் கணியையா கேட்டேன்? கோ - கண்ணை, அணி - மலராக அணிந்த சிவபெருமானே! சொல் எனக்கு ஞானத் தைச் சொல்; என்று கேட்டேன். கோவணி! என்பது விளி. கோவணி, கோவை யணிந்தவன்.

அது காரணப்பெயரல்லவா? அவர் சொன்னுர் கோவ-அணி கோபத்திற்கு, அணி நெருப்பாக இருப்பது, தண்-குளிர்ச்சியாகும்; அதாவது கோபத் திற்குப் பகை, கருணை, ஞானம் பெற விருப்புபவர்கள் கோபத்தை விட்டுக், கருணையைப் பெற வேண்டும் என்ருர். நான் கோ—தலைவரே! சொல்-புன்மையேன் சொல்லும் சொற்களை, அணி - ஏற்றுக்கொள்வீர் என்றேன்.

“பிதாவே! உலகத்திற்குத் தலைவர் அவரல்லவா? அதனுல் நான், தாரணி-என்றேன். அவர் பூமி யாவது, இந்த இடந்தான்; என்ருர்,

தாரணி என்றிடத் தான்.

இடந்தான் என்பது வலித்தல்விகாரமாக, இடத்தான் என்று வந்தது.

நான், பூமியையும்; இடத்தையுமா கேட்டேன்? தாரணி தார்-மாலையை, அணி-தேவரீர் அணிந்து கொள்வீர் என்று சொன்னேன். அதற்கு அவர் இட- அன்போடு இடுவாயானுல், தான்-தானுகிய சிவ பெருமான் ஏற்றுக் கொள்வேனென்ருர். என்றிட- என்றுசொல்ல, தான்-நான்தான் என்று சொன்னுர்.

தாபணி என்றக்கால் தான்பணி தந்தானே
காதணி என்றேனுக் காதணி தோடென்ருன்
கோவணி சொல்லென்றேன் கோவணி தண்ணென்ருன்
தாரணி என்றிடத் தான்.

—திருப்புகழ்மணி

"பிறவிநோய்க்குமருந்து, பணி-தொண்டு-தாச மார்க்கம். காத்துந் தனித்தும் அணிவது,ஞானத்தை. ஞானத்தோடு தொடர்புகொள்வது சத்புத்ர மார்க்கம். ஞானந் தருபவன் தந்தை. பெறுபவன் மைந்தன். ஞானஞ் சொல்லிக் கருணையோடு அவைகளை அணிந்துகொள்வது நட்பினுல்; இது சகா மார்க்கம். மாலையை அணிந்துகொள்வது சன்மார்க்கம். முதல் வரியில் தொண்டும், இரண்டாம் வரியில் மைந்தனு வதும், மூன்ரும் வரியில் தோழனுவதும், நான்காம் வரியில் நாயகியாவதும் ஆக இறைவனை அடையும் நான்கு வழிகளும் இப்பாடலில் அமைந்துளது."

"அப்பா! திட்பமும், நுட்பமும் உள்ள இப்பாட லுக்கு இன்னும் பல அரிய பொருளைக் காணலாம். எனக்கு அறிவு இவ்வளவு தானே? இருள் சூழ்ந்து விட்டது பார்த்தீர்களா? விளக்கொளி எங்கும் பரவியது. கோவிலில் அர்த்த சாமப் பூசை நடக் கிறதே; நமக்குக் காலம் போனதே தெரியவில்லை."

என்று சாவித்திரி அழகாகவும், இனிமையா கவும் பேசினுள். இருமுது குரவர் கேட்டு இறும்பூ துற்றனர்; களிப்புக்கடலில் வீழ்ந்தனர். கண்கள் நீர் சொரியக் கைகளால் அணைத்தனர். விம்முற்ற நெஞ்சில் மகிழ்வு பீரிட்டுக்கொண்டு வந்தது. மகளின் அறிவு நலம் அளவிட முடியாததாக இருந்தது. அணைத்தனர்; உச்சி மோந்தனர்; பல்கால் முத்த மிட்டனர்.

இருக்காதா? ஒருவரி எழுதுவதற்குள் ஒன்பது பிழை எழுதும் மக்களைப் பெற்றவர்களே, மகிழ்ந்து

முத்தமிடுகிருர்கள் என்ருல், அறிவுக்களஞ்சியமாம் சாவித்திரியைப் பெற்றவர்களுக்கு மகிழ்ச்சி எல்லே ஏது?

"சாவித்திரி! மாணிக்கமே! உன் சொற்கள் தேனில் நனேந்து வருகிறது. அறிவு நலந் தோய்ந்த அச்சொற்கள், அறிவுக்கு விருந்தாக அமைகிறது. நீ மொழிக்குத் துணையாகச் சிவ நாமங்களேக் கொண்டாய். உன் மொழி எங்களுக்குத் துணையாக நின்றது. நீ நீடு வாழ்க! உன் புகழ் உலகெங்கும் பரவுக. சிவபெருமான் திருவருள் உனக்குப் பூரணமாக நிற்க" என்று வாழ்த்தினுர்கள்.

இப்படிச் சாவித்திரி கற்ரேரும் மற்ரேரும் புகழக் கலேக்கடலானுள். மதிநல மிக்க மாதரசியாக ஒளிர்ந்தாள். யாவரும் அவளேப் பாராட்டினர். பெண் பெற்றவரெல்லாம் சாவித்திரியைப் பெண்ணுகப் பெறவில்லேயே என்று ஏங்கினர்.

## பழிக்குத் துணே

காலந்தான் எத்தனே வேகமுள்ளது? காலத்தில் அகப்படாத பொருள்களே இல்லே. எத்தனேயோ முறை மா, பூத்தது; காய்த்தது; பழுத்தது, இலே உதிர்ந்தது. சாவித்திரி, இப்பொழுதுதான் பிறந்தாள்; தவழ்ந்தாள்; மழலே பேசினுள்; சிறுமியானுள்; ஆடினுள்; பாடினுள்; கற்ருள்; தேறினுள்; நங்கை, மங்கையானுள். அப்பா! எத்தனே வேகம்?

மலபரிபாகம் அடைந்த ஞானிகளேப்போல் சாவித்திரி பக்குவமுற்ருள். மங்கையான சாவித்திரியைக் காண மயில்கள் உடலெங்குங் கண்களாயின.

அவள் மென்மையைக் கண்டு மா சிவந்தது. தென்றல் மெலிந்தது. சாவித்திரிக்குப் போட்டியாக மலர்கள் வண்ணமும், மணமும் பெற்றன. பூமகள், மிக அழகாகத் தன்னைப் புதிதாக எழில் செய்து கொண்டதுபோலும், சாவித்திரி தன் எழிலால் தனித்து நின்ருள்.

சாவித்திரியிடமிருந்த நான்கு பொருள்கள் போய்விட்டன. நான்கு பொருள்கள் புதிதாக அவளிடம் வந்து நிலைத்தன. அழுகை, அடம், விளையாட்டு, குறும்பு இவைகள் போயின. அச்சம், மடம், பயிர்ப்பு, நாணம் இவைகள் குடிபுகுந்தன. உலகத்திலுள்ள அடக்கம் முழுவதும் இவளிடம்வந்து தங்கிவிட்டன போலும்! இத்தனைப் பொருள்களும், சாவித்திரியிடம் புதிதாக வந்து தங்கினமையால், இவைகளின் பாரம் தாங்காமல் இடை சிறுத்து, நைந்து, மெலிந்தது. பாவம்! அதுபற்றிச் சாவித்திரி கருணை இல்லாதவளாக ஆனுள்.

பெண்களெல்லாம் சாவித்திரியின் அழகைக் கண்டு பெருமூச்சு விட்டனர். சாவித்திரி கோயில் கட்கும், சிற்பசாலைக்கும், சித்திர மண்டபத்திற்கும் போகின்றபோது அங்குள்ள சிற்பங்களும் சித்திரங் களும் இவள் எழிலுக்காற்ருது உயிரைப் போக்கிக் கொண்டன. தாய்க்குலம், இவள் குண நலன் கண்டு பெருமைப்பட்டது. புலவர்கள் தங்கள் பாடலில், அவளைப் பாராட்டிப் பெருமையுற்று மகிழ்ந்தனர்.

அசுவபதிக்கும் மாளவிக்கும் சாவித்திரியின் அழகையும் குணச்சான்ருண்மையையும் இனிய

மொழிகளையும் கண்டும் கேட்டும் அளவிறந்த மகிழ்ச்சி. தம் மகளை மற்றவர்கள் பாராட்டும்போதும் புகழும்போதும் மகவில்லாது இறையருளால் அவளை ஈன்ற போதினும் நனிபெரிதுவந்தனர். அம் மடவரற் பெற்ருேர் "ஆகா! சாவித்திரி தேவியே வந்து அவதரித்தாள்" என்று களிப்புக்கடலில் ஆழ்ந்தனர்.

சாவித்திரியின் கண்கள் திரும்பிய பக்கம் சேடிகள் நின்று நலம் புரிந்தனர். அவள் மனம் எண்ணியதை அவர்கள் செய்தார்கள். நகரெங்கும் சாவித்திரியின் புகழ்தான். திசையெங்கும் அவள் அழகொளி சென்று ஒளிர்ந்தது. வானகமும் கானகமும் அவள் எழிலும் இனிமையும் கமழ்ந்தன.

மன்னர்தம் குமாரர்கள் சாவித்திரியை மனதிலும் எண்ணவில்லை. அவளை மனைவியாகக்கொள்ள வேண்டும் என்று எண்ணுகின்ற காளைகளே இலையாயினர்; தங்கையாக எண்ணினர். மகளாகக் கொண்டனர்; தோழியாகப் பழகினர். தாயாக வணங்கினர்; தெய்வமாக வழிபட்டனர். மனைவியாகக்கொள்ள நினைத்தார் இல்லை.

எழிலுக்காற்ரு திளைத்தவரும், குணத்திற் குடைந்து குன்றினரும், அறிவிற் கயர்ந்து அவலமுற்றனரும், கல்வியில் நாணிக் கவலையுற்றனரும், இசைக்கடங்கா தெய்த்தனரும், அவளுடைய கம்பீரத்தின் முன்னிற்க முடியாது தலை கவிழ்ந்தனருமாகக் காளைகள் அவளைக் கனவிலும் காதலிக்கப் பயந்தனர்; விலகிச் சென்றனர்.

சாவித்திரி, இன் சொல்லாலும் இனிய குணத்தாலும் தன்னடக்கத்தாலும் யாவரையும் கவர்ந்தாள். வெகுளி அவள் நின்ற திசைக்கு வெகு தொலை சென்றது. அவள், கடுஞ்சொல் கூறியதே இல்லை; இனிமையாகப் பேசுவாள்; பெரியவர்களை வணங்குவாள்; தாய் தந்தையரைத் தொழுவாள்; மலர் பறித்து இறைவனை வழிபடுவாள்; அடியார்களை வணங்குவாள்; அறம்பல புரிவாள்; ஏவலர்க்கு எப்பொழுதும் இன்முகமாகப் பரிசில் பல தருவாள்.

ஒருநாள்; மாலை நேரம்! விளக்கேற்றி இறைவனை வழிபட்டாள். ஆயிரம் நரம்புகளைக் கொண்ட பேரியாழ் என்ற யாழெடுத்து இனிமையாகப் பாடுவாளாயினள். அவள் இசையைக் கேட்டுக் கல்லும் புல்லும் உருகின.

மணிரங்கு—ஆதி எடுப்பு

2 , ,

;; ரீ0ம பபா0 நிநீ0
பநீ0 பநீ0 ரி. க. ம. நி,
;; என்ன குற்றம் என்மேல்
;; பா0ச் நீ0ப மகரீ
;; சொன்ன தென்ன தோழீ
;; ச்ரிச் நீ0ப நீச்ா
;; கன்னலார்க்கும்எனக்கும்
;; பாச்நீ பமா கரீ0
பொன் னெருப் பே. தந்தார்=

தொடுப்பு

;; ரீரிரி ரீ00 ரீமர் ;; ம்ரிச் நீ பநிச்ா00
;; தென்னவரே அவர்;; தீந்தமி ழோ அவர்க்கு

;; ச்ரிச் ந்oo பாச்ா ;; பச்ாநி பா மக ரீச்ா
;; கண்ணெருப்பே கொண்டார் ;; கருணை எங் கே.
கொண்டார்—

முடிப்பு

;; பநிந்நி பநிந்நி ந்நி ;; ச்ாநிப மாகா காரீ
;; நினைந்து நினைந்து வாடும் ;; நேரிழை என்.-
தாபம்

;; சரிமக ந்oப சாசா ;; நிமப நீநி பாநீ
;; வனைந்தச டை முடி ;; யார்க்குமா பெரும்
பாபம்

;; ச்ரிர்ரி ரீரீo ரிரி ரிமகரி ;; ரீம்ரி ரீoo oo ச்ா
;; முனைந்த திரிபுர ...........;; 'மோஎன்ன கோ
...........பம்

;; ச்நி ச்நி பாoo மாநீ ;; பச்நிப மாகா ரீசா
;; நனைத்தமல — ரடி ;; நயப்பதற் கோ சாபம்
;; 2 ச்நிநிச் நீபா மாநீ ;; பச்நிப மாகா ரீசா—
;; நனைத்தம ல—ரடி ;; நயப்பதற்கோ. சாபம்

—திருப்புகழ்மணி

ஆகா! சாவித்திரி தேவியே வடிவெடுத்து வந்து பாடுகிருளா? இசை வெள்ளம் பெருக்கெடுத்தோடியது. அசுவபதியும் மாளவியும் கேட்டு விம்மித முற்றனர். மதி குளிர்ந்தது. மரம் தழைத்தது. கொடி வளைந்தது. கூன் நிமிர்ந்தது. அங்கங்கே நின்ற தோழியர், அப்படியப்படியே நின்றுவிட்டனர். உள்ளே வந்த அரசரும் தேவியும் அமருவதற்கஞ்சி நின்றவண்ணமிருந்தனர். இன்பத்தின் எல்லேக்கு அழைத்துச் சென்ருள் யாவரையும். ஒவ்வொருவருக்கும் சாவித்திரியை வணங்க வேண்டும் என்ற எண்ணம் ஏற்பட்டது.

தந்தையும் தாயும் நிற்பதைக் கண்டவுடன் யாழை வைத்துவிட்டு எழுந்தாள்; ஓடி வந்தாள்; வணங்கினுள். "அப்பா! அம்மா! ஏன் நிற்கிறீர்கள்? அமரக் கூடாதா?" என்று பணிவாகக் கேட்டாள். மாளவி மகளைத் தழுவிக் கொண்டாள். பாவம்! அசுவபதி, வயது காரணமாகக் கண்களால் தழுவிப் பருகினுன். மகளைத் தம் பக்கலில் அமர வைத்தனர். நெடு நேரம் பார்த்துக்கொண்டே இருந்தனர். ஒரே சமயத்தில் அவர்களுக்குக் களிப்பும் கவலையும் பெருகின.

"செல்வமே! மலையத்துவசன் மகளே வந்து யாழ் வாசித்ததைப்போல் இருக்கிறது. உன் இசைக்கு உருகாதார் யார்? பாணர்கள் வெட்கித் தலை குனிந்தார்கள். ஆகா! மகளே! உன்னைக் காணுந்தோறும். காணுந்தோறும் என் நெஞ்சில் உவகை ஊற்றெடுக்கிறது. கண்கள் நீர் சொரிகின்றன. உன் இனிய நலன்களை எண்ணுந் தோறும், என்நெஞ்சு வெடித்துச் சிதறுகின்றதம்மா?

"கண்ணே! நீ ஆண்மகனுகப் பிறக்கவில்லையே என்று நான் கவலைப்படவில்லையம்மா. நீ திருமணம் புரிந்து, செல்லும்போது உடன்வர நான் பெண்ணுகப் பிறக்கவில்லையே அம்மா? அந்தோ! என் விதி மிகப் பொல்லாதது. பிரிவதற்கென்றே பிறந்த நின்னைப் பிரியுங்காலம் நெருங்கிவிட்டதே! என்செய்வேன்? உயிரினும் உணர்வினும் சிறந்த உன்னைப்பிரிந்தும் யான்வாழ வேண்டுமா? மகளே! நீ ஏன் இப்படி அற்புதமான குண நலன்களைக்

கொண்டிருக்கிருய்? அதுதானேயம்மா, என்னைக் கொல்லுகின்றது? ஒரு வாயாடியாக, அடங்காப் பிடாரியாகப் பிறந்திருக்கக்கூடாதா? உன்னை, எளிதாகத் தள்ளிவிட்டிருப்பேனே? ஆகா! உலகத்தில் என்போற் பெண் பெற்றுத் துன்புற்ருர் யார்? தெய்வமே! கண்ணையிழந்து வாழ்வேன். என் கண்மணியை எப்படிப் பிரிவேன்? மகளே! மகளே!"

சாவித்திரியின் கைபற்றி உருகினுன் அசுவபதி. அவன் கண்களில் நீர் பெருக்கெடுத்தோடியது. மாளவி, உதடுகளைக் கடித்துக்கொண்டு, தலை கவிழ்ந்திருந்தாள். சாவித்திரி துடித்து விட்டாள். தந்தையை வணங்கினுள். "அப்பா! அப்பா! என்ன பேசுகிறீர்கள்? அருமையினும் அருமையாகப் பெற்ற என்னைப் பிரிப்பதற்கோ வளர்த்தீர்கள்? யான் இங்கிருப்பது உங்களுக்குத் துன்பமா? தந்தையே! திருமணம் என்ற பெயரில் என்னைத் துரத்தவேண்டா. யான் உங்களைப் பிரிந்து செல்வேன். ஐயனே ஒருவேளை எனக்குப்பின் தம்பிகள் பிறக்கவில்லையே என்று வருந்தி என்னை அனுப்புகிறீர்களா? வேண்டாம் அப்பா! வேண்டா. நானே தங்கட்கு மகனுக இருந்து தொண்டு புரிவேன். தந்தையே! தங்கள் திருவடி பிடித்து வேண்டுகிறேன். எனக்கு மணம் வேண்டா அம்மா!"

என்று கதறினுள்; அழுதாள். மாளவி துயருடன் அவளை எடுத்து அணைத்தாள்; கண் துடைத்தாள்; அருகில் அமர்த்தினுள். "மாணிக்கமே! வருந்ாதே.

பெண்களுக்கு அறம், கணவனை வழிபடுதல். உமாதேவி, இமயமலையில் இருந்திருந்தால், என்ன பெருமை? யார் வணங்குவார்கள்? "முருகனுக்குத் தாய்" என்று வழிபடுவார்களா? கொண்டான் வீடுதான் காரிகையர்க்குப் பெருமை தருவது. அது தானம்மா ஒரு பெண்ணை முழுமையாக்குகின்றது. சாவித்திரி! நான் உன் தந்தையை மணக்கவில்லை யானால் கற்புக் களஞ்சியமாம் உன்னை மகளாகப் பெற்றிருக்க முடியுமா? பெண்மை, தாய்மையில் தான் வாழ்கிறதம்மா? வருந்தாதே." என்று தேற்றினாள்.

அசுவபதி "சாவித்திரி! உன்னைப் பிரிவது துன்பமாயினும், பிரிந்து தான் தீர வேண்டும். தவிர்க்க முடியாத துன்பமம்மா இது. பழிக்கு நாணுகிறேன். 'அசுவபதி மகளுக்கு மணஞ் செய்ய வில்லை' என்று உலகம் பழிக்கும் அம்மா! பழியை ஏற்றுக்கொள்ளலாமா? உன் எழிலுக்கும் கல்விக்கும் ஏற்ற கணவன் உலகில் இல்லை. உன்னை விரும்பி ஒருவரும் வரிக்கவில்லை. அதனால் வேறு பகைவர்கள் என்னைப் பழிக்கிறார்கள்; புறத்தே நகைக்கிறார்கள். உன் அறிவிற்கும் குணத்திற்கும் சொக்கநாதர் தான் உனக்கு மணாளனைத் தருதல் வேண்டும். அம்மா! முன் ஒருசமயம் தாரணி என்றிடத்தான் என்று பாடினாயே? அதனால் உன்னை மணக்க அரசிளங்காளைகள் அஞ்சுகிறார்களோ? அறிவமுதே! நீ காடுகளிலும், மலைகளிலும் உள்ள முனிவர்களை வணங்கு; நல்ல யாறுகளில் முழுகு; சிறந்த தலங்களில் இரு; திருக்கோயில்களில் வழிபடு.

சான்றோர்களின் நல்வாழ்த்துக்களால் உனக்குத் தெய்வீகமான கணவன் வருவான். தீர்த்த யாத்திரை சிறந்தது. பல அரிய அநுபவங்களைப் பெறுவாய். மகான்களுடன் பழகலாம். சோலைகளில் தங்கலாம். இயற்கை எழிலைப் பருகலாம்.

"நாளை நீ செல்வதற்கு வேண்டியதைச் செய்வேன். ஆயிரம் தோழிகள் உன்னுடன் வருவார்கள். ஐந்நூறு அந்தணர்களும் புலவர்களும் வருவார்கள். ஆயிரமாயிரம் யானைகளும் புரவிகளும் காலாட்களும் உடன் வருவார்கள். அஞ்சுதலில்லாமல் சென்று வா. அரச காரியத்தால், யான் உடன் வர இயலவில்லை. அரண்மனையில் எப்பொழுதும் விருந்தினர்களும் மகரிஷிகளும் வருவார்கள். அவர்களை உபசரிக்க உன் தாய் இங்கிருக்கவேண்டும். அவளும் உன்னுடன் வரமாட்டாள்.

"அம்மா! எனக்கு ஏற்பட்ட பழி எளிதானதன்று; பயங்கரமானது. அப்பழிக்குத் துணையில்லை. துணை ஒன்று ஏற்குமானால், அது உன் பதிதான். என் பழியைத் தாங்கிக்கொள்ளும் தோள்கள் உன் கணவனின் தோள்களே! நீ மகளாக இருந்தாய். இனி மனைவியாக இருக்கவேண்டும். மலராக இருந்த நீ மணம் பெற்றுக் கமழவேண்டும். மணியாக இருந்த நீ ஒளி பெற்றுத் திகழவேண்டும். அஞ்சுகமே! நீசென்று என் பழிக்குத் துணையைக் கொண்டு வா.'' என்று அசுவபதி நெஞ்சுருகக் கூறினான். சாவித்திரி கேட்டு வாளா இருந்தாள். பிரிவதற்கஞ்சினாள். அறத்தைக் கடக்க இயலவில்லை.

பொழுது புலர்ந்தது. புள்ளினம் ஆர்த்தன. கள்ளினம் கமழ்ந்தன. சாவித்திரி செல்லும் வழி களைத் துடைத்துத் தூய்மைப்படுத்துவான் போல் கதிரவன், ஒளிக் கைகளை நீட்டினன், தோழிகளுக்கு உவகை, புதிய இடங்களைப் பார்க்கப்போகிறோம் என்று. நகரத்திலிருந்தும் பலர் உடன் புறப்பட்ட னர். ஆயிரமாயிரம் தேர்களும் யானைகளும் நின்றன. யாவரும் தங்கள் தங்கள் இருக்கையில் ஏறி அமர்ந் தனர். அரண்மனையிலேயே இருந்த சாவித்திரியைப் பார்க்க இயலாமல் பரிதவித்த தேவர்கள், இனி சாவித்திரி வனத்தில் விருப்பம்போல் உலாவுவாள்; அவளைக் கட்டுப்பாடின்றி நன்றாகப் பார்க்கவேண் டும் என்று கண்களைத் திறந்த வண்ணம் முன் கூட்டியே காடுகளிலும், மலைகளிலும், யாறுகளிலும் சென்று தங்கினார்கள். தேவர்களைவிடத் தேவதா ஸ்திரீகள்தான் மிகுதியாகத் தங்கினார்கள்.

சாவித்திரி இறைவனை வழிபட்டாள்; திருநீறிட் டாள்; இறை நாமங்களை முறையாகச் செபித்தாள்; நனைந்த கூந்தலை நுனியில் முடிந்து தொங்கவிட் டாள். அது அரசிளங் குமரர்கள் வந்து அகப்படும் வலைபோல் நீண்டு தொங்கியது. இது மேகமோ என்று ஐயுறுமைக்கு, இறைவனின் திருப்பாதங் களில் இருந்து வெள்ளை மலர்களை எடுத்துக் குழல் களில் செருகிக்கொண்டாள்.

மஞ்சள் பட்டாடை உடுத்த அவள் பச்சைக் சுஞ்சுகம் தரித்தாள். இறைவனை வழிபடச் செல்வ தால் அணிகலன்களைத் தரித்துக்கொள்ளவில்லை.

அது சாவித்திரியின் அழகைக் கெடுக்கும் பாவத்தை நாங்கள் செய்யமாட்டோம் என்று ஆபரணங்கள் பெட்டகத்துள் பதுங்கியதைப்போல் இருந்தது.

நோயாளியாக மருத்துவச்சாலை செல்லும்போதும் நாரீமணிகள் பெட்டகம் சுமந்த நகைகளைச் சுமந்து செல்வார்கள். பாவம்! சாவித்திரி, ஒரு முத்துத் தாழ்வடத்தை மட்டும் அணிந்துகொண்டாள். முத்து முத்தாகப் பேசும் இவள் முத்துமாலை அணிந்தது சரியே! எனப் புலவர்கள் தலையாட்டினர். ஆகா ! சாவித்திரிதான் எத்தனை நளினமாக அலங்கரித்துக்கொள்கிறாள் ? என்று பெண்கள் பாராட்டினர். இவள் கல்லாத கலையே இல்லையோ ? என்று இறும்பூதுற்றனர்.

முத்துத் தாழ்வடத்திற்கு மிகப்பெருமை. தன்னைத் தான் சாவித்திரி அணிந்துகொண்டாள் என்ற அளவிறந்த மகிழ்ச்சியினால் உடல்வெளுத்தது. அவள் உடம்பில் புரண்டு தழுவி ஒளிபெற்றது. அது கண்ட சில மன்னர்கள் நாம் அப்பேறு பெறவில்லையே! என்று அவசமுற்றனர்.

உமா தேவியார் தென் தமிழ் நிலத்தில் தோன்றி தமிழகமெங்கும் ஆண்டார்கள் ; தமிழன்னையாக விளங்கினார்கள். சிவபெருமானை மறந்த பின்னும் அவர்கள் தமிழை மறக்கவில்லை. அவள் உடலெல்லாந் தமிழ்தான். அவள் அருளிய ஞானப்பாலும் தமிழ்ப் பால்தான். அப்பாலை யுண்டாரெலாந் தமிழில் தானே பாடுகிறார்கள் ? அத்தகைய உமா

தேவியார் ஞானப்பால் உண்ட முருகன் சிவபெரு மானுக்குத் தமிழில் தானே, ஓரெழுத்தில் ஆறெழுத்தை ஓதுவித்தார்? இவைகளை எல்லாம் சாவித்திரி நினைத்தாள் போலும்? உமாதேவியாரிடத்துப் பக்தி கொண்ட அக்கற்புக்கரசி தமிழ்க் கடலில் தோன்றிய தமிழ் முத்தை அணிந்துகொண்டதற்கு வேறு என்ன காரணம்? எம்மம்மை தென்பாண்டி நாட்டில் தோன்றினாள். அந் நாட்டில் தோன்றிய முத்தை அணிவேன் என்று அணிந்துகொண்டாளோ? பக்தியில் அணிந்தாரா? அங்கயற்கண்ணி அருளால் பிறந்தேன். அவள் தாய் வீட்டில் விளைந்ததை அணியவேண்டும் என்று நன்றிப் பெருக்கால் அணிந்தாரா? சாவித்திரி, தென் கடல் வளாகந் தோன்றிய முத்தை அணிந்தது தமிழிற்கொண்ட காதலை வெளிப்படுத்துகிறது.

சாவித்திரி வருகிறாள்; சாவித்திரி வருகிறாள்; என்று தம் நாவை அசைத்துத் திசை எங்கும் ஒலி எழுமாறு ஆர்க்கின்ற மணிகளைக் கொண்ட தேரில் தாயையுந் தந்தையையும் வணங்கிப் புலவர்கள் வாழ்த்த, வாத்தியங்கள் முழங்க, சாவித்திரி வலது காலை முன்வைத்து ஏறி அமர்ந்தாள். அது மீனாட்சி திக்கு விசயத்திற்குப் புறப்பட்டதைப்போலிருந்தது. மலர்மாரி பொழிந்தனர்.

அசுவபதிக்கும் மாளவிக்கும் கண்கள் தெரிய வில்லை. குளமும் யாறும் அவர்கள் கண்களில் குடி வந்தன. நெஞ்சு உயர்ந்து, உயர்ந்து தாழ்ந்தன. கைகளைத் தூக்கி வாழ்த்தினர். மங்கல அரிசிகளைப்

பெய்தார்கள். பொன்னிலைாய உருளைகள் உருண்டன. தேர் புறப்பட்டது. சாவித்திரியின் தேருக்கு முன்னே ஒரு தேர் ஓடுகிறது. அதில் ஒருவன் கரும்பு வில்லையும் மலர்ப் பாணங்களையும் கொண்டு செல்கிறான். அவனுக்கும் சில விருதுகள் போகின்றன. குயில், ஆடலோசை, மணியோசை, இவைகள் அவனுடன் சென்றன. ஓசையற்ற அத்தென்றல் தேர் மென்மையாகச் சாவித்திரிக்கு முன்னே செல்வதாயிற்று.

சாவித்திரி மிக அரிய தீர்த்தங்களில் முழுகினாள். ஒவ்வொரு இடங்களிலும் பல நாட்கள் தங்கினாள். போகின்ற இடங்களில் எல்லாம் தூய்மையையும் இனிமையையும் கொடுத்தாள். வாழ்த்துக்களைப் பெற்றாள். காடு மகிழ்ந்தது. யாறு குதித்தோடியது. அவள் பாதம்பட்டு மலை உயர்ந்தது. முனிவர்கள் தவப்பயன் பெற்றார்கள். நெடுநாட் பிரிந்த கன்று கண்ட ஆப்போல் களி சிறந்தார்கள். முனி குமாரிகள் தோழிகள் ஆனார்கள். மரம் வளைந்து மலர் உதவியது. சாவித்திரி யாவரையும் வணங்கினாள்; அறம் புரிந்தாள்; விரதமிருந்தாள். இப்படி அவள் யாத்திரை, சென்றுகொண்டிருந்தது.

## பாகத்தில் வைக்கும் பரம கல்யாணி

சாவித்திரி சென்ற பிறகு அசுவபதிக்கும் மாளவிக்கும் நாள் வாளாக இருந்தது. மனம் பாரமாகியது. நெஞ்சம் உலர்ந்தது. கண்கள் நிலைத்தன. செயல்கள் அற்றன. பொதுவாக அவர்களுக்குத்

துன்பம் கவசமாயிற்று. அரண்மனை பொலிவிழந்து காணப்பட்டது. ஏவலர்கள் முகத்தில் நிறைவு காணப்படவில்லை. உணவு எப்பொழுதும் ஆறியே இருந்தது. படுக்கை சுருட்டப்படாமலேயே இருந்தது. இசைவாணர்களுக்குச் சுரங்கள் மறந்து விட்டன. சோலையும், மாலையும் இருந்தும், சோகமும் சோம்பலும் சேர்ந்தது.

பொருளற்ற பாடலைப்போலவும், புலவர்கள் நீங்கிய சபையைப் போலவும், ஆதார சுருதி இல்லாத இசையைப்போலவும், தெய்வ வழிபாடில்லாத தேயம் போலவும், மத்ர தேசம் பொலிவிழந்தது.

மன்னவனும் தேவியும் மிகுந்த துயரத்தை எய்தினர். நெஞ்சமெல்லாம் விம்முற்று பேச்சற்றிருந்தனர். நெடு மூச்சுவிட்டு நீளத் திரிந்தனர். ஒருவரை யொருவர் சரியாகப் பார்ப்பதுகூட இல்லை. "தேவி! என்ன துன்பம் இது? குழந்தையை, அறிவில்லாமல் அனுப்பிவிட்டேன். என்ன மூடத்தனம்? நான் ஏன் உடன்போகவில்லை? குழந்தை எப்பொழுது வருவாளோ? உணவு உண்கிருளோ? மகிழ்ச்சியுடனிருக்கிருளோ? என்று துன்புற்ருன்.

அப்பொழுது ஓர் ஒற்றன் வந்து வணங்கினுன். "அரசர் பெருமானே! வணக்கம்! நமது இளவரசியாரவர்கள், பிரமாண கோடியில் முழுகிக் கலிங்கம் வந்துள்ளார்கள். அங்குப் பூரி என்ற இடத்தில் சிவபெருமானை வழிபட்டு அறம்பல புரிந்தார்கள் நாளை கோதாவரி கடலோடு கலக்குமிடத்திற்குச்

செல்ல இருக்கிறுர்கள். நலமாக இருக்கிறுர்கள். தங்களை வணங்கினதாகச் சொல்லச் சொன்னுர்கள். தாதிகளுக்கும் மற்ற ஏவலர்கட்கும், தம் அன்பைத் தெரிவித்தார்கள். நான் வருகிறேன் " என்று வணங்கினுன்.

அசுவபதி, " ஒற்ற! செல்க. குழந்தையை எல்லாத் தலங்களையும், எல்லாத் தீர்த்தங்களையும் கண்டு முழுகி வரச்சொல். விரைவு வேண்டா. நாங்கள் நலமேயுள்ளோம் என்று சொல். எங்கள் நினைவால் வருந்தவேண்டா. செல். வேறு சிறப் புளதேல் நாளை சொல்வேன்!" என்று ஒற்றனுக்கு விடை கொடுத்தார். அவனும் நல்லது என்று வணங்கிச் சென்முன்.

" மாளவி! நாள்தோறும், ஒவ்வோர் ஒற்றர் சாவித்திரியிடமிருந்து வந்து நலன் சொல்வார்கள். அவளுக்குத் தேவையானதை இங்கிருந்து கொண்டு செல்வார்கள். செல்வி இருக்குமிடம், பார்த்த சிறப் புக்கள், பழகிய முனிவர்கள், யாவற்றையும் நாளும் வரும் ஒற்றர்கள் தெரிவிப்பார்கள். எத்தனையிருந் தாலும், சாவித்திரியைக் காணுதது குறைதான்" என்று அசுவபதி மனைவியிடம் கூறினுர். மாளவி கண் கள் நனைந்து, மடித்தலம் ஊறியது. மனக்கண்ணுல் மகளைக் கண்டு உசாவினுள். " பெருமானே! இந்த பிரிவுத் துன்பம், கொடிதாக இருந்தாலும் பொறுத் துக்கொள்ளலாம். நம் மங்கைக்கேற்ற மணுளன் கிடைக்கவேண்டுமே! தாவிப்படரக் கொழு கொம் பில்லாது நம் செல்வி, தனிக் கொடியாகத் துயருறு

கிருள். அவள் தனிமை நமக்கு இனிமையல்ல. இணைந்த அவள் வாழ்வு நமக்கு மகிழ்ச்சியை அளிக்கும்; அந் நாள், எந்நாள்?"

என வருந்திய மாளவியைத் தேற்றினன். "வருந்தற்க. சொக்கநாயகி திக்கு விசயம் சென்ருள்; அழகிய சொக்கரைக் கொண்டாள். நம் செல்வி தீர்த்த யாத்திரை சென்ருள். அதன் பயனுக மணவாளன் வருவான். ஏன் கவலே? நாம் இறைவனே வழிபடுவோம். ஆண்டவன் நம் எண்ணங்களே முற்றுவிக்கட்டும்" என்று அசுவபதி மனேவியுடன் பேசிக்கொண்டிருக்கும்போது, இனிய யாழோசை தெள்விளியாக வந்தது.

மன்னவன், வியந்தான்; எழுந்தான்; நடந்தான்; விதிர்த்தான். என்ன இது? சாவித்திரிக்குப் பிறகு யார் இப்படி யாழ் வாசிப்பது? என்று எண்ணிஞன். அங்கு எப்பொழுதும் முருகப் பெருமானேப் பாடுபவரும் அவருடன் இடையருது இருப்பவரும் முருகனுக்கு வாகனமாகத் தாம் செய்த வேள்வியிலிருந்து செம்மறியாட்டைத் தந்தவரும் குகபரனுக்கு மாணவரும் முருகா! குகா! சண்முகா! என்று ரீங்காரம் செய்பவரும் பிரம குமாரருமான நாரதர் வந்துகொண்டிருந்தார். சும்மா வருவாரா? முருகனேப் பாடிக்கொண்டே வந்தார்.

எடுப்பு

மத்தியமாவதி—ஆதி.

1. 'மத்தியன் மாவநிவோன் மருகா
முத்தியல் வேற்பதிநன் முருகா



தொடுப்பு

எத்தியல் மானிடர் இழிவறுக்கும் எங்கோ
நத்தியல் பாலா றிடக்கரை நின்றேய்—

முடிப்பு

புன்னாகவராளி.

2. புன்னாகவளி தவழும் பொன் மாதர் தமைக்கண்டு
மன்னு நின் மலரடியை மறவா வரந்தருவாய்—

மோகனம்.

3. என்னமோ கனவினில் இயம்பிய தென்றுநீ
உன்னி என்னை இனி ஒதுக்கிடல் வேண்டா
நன்னய மார்திருப் புகழ் மணியே என்
நாயகனே தமிழ்த் தாயகமே அருள்.

அசுவபதி விரைந்து வந்து தரையில் வீழ்ந்து வணங்கினான். மாளவி வணங்கினாள். அகம் மகிழ்ந்தனர்; முகம் மலர்ந்தனர்; வருக! வருக! என வரவேற்றனர்; இருக்கை தந்தனர். இருநீர் தந்தனர்; மலரிட்டனர்; வழிபட்டனர்; குடையிட்டனர்; குளிரிட்டனர்; கும்பிட்டனர்; மட்டளித்தனர்; பட்டளித்தனர்; பரிவாரங்களோடு வணங்கினார்கள்; மீள மீளத் தொழுதார்கள்; இருகை மலர் குவிய நின்றனர்; திருநீற்றுக் காப்பு பெற்றனர்.

தனையை தன்னெழிலுக் கேற்ற காந்தனைத் தருதலுன்னி
நினைவுவே றுரைவேருகி நிருபனுந் துயர்கூர் காலை

1. மத்தியன் மாவதிவோன்—திருமால். மத்து—வெண்ணெய் கடையுங் கருவி; இயல்—தங்கிய; மா —சிறப்பாக, வதிவோன்—உறைபவன். வெண்ணெய்யோடும், தாழியோடும், மத்தோடும் தங்கிச் சிறப்பாக உறைபவன். 2. புன்—மென்மையான, நாகம்—சுரபுன்னையின், வளி—காற்று. 3. என்னமோ—ஏதோ—கனவினில்—கனுவில்.

புனைசடை துளங்க †வீணை பொதுளிய கரத்திேைடு
மனைய மன்னவனிருந்த வவையில் நாரதனடைந்தான்.

"ஐயனே! யான் தவமுற்றேனல்லேன். என் முன்ேைர் இயற்றிய தவம், தேவரீர் வரப்பெற்றேன். இந்நாடு புனிதமுற்றது. துய்யனே ! இவ்வரண்மனை, தூயதாயது. என் கண்கள் ஒளிபெற்றன. மகிழ்ச்சி! மகிழ்ச்சி!'' என்று அசுவபதி இன்னுரை பகர்ந்தான்.

நாரதர், "மன்னவ ! அமர்க. உன் நாடு நலந் தானு? குடிகள் நலமா? மழை பொழிகிறதா? மாண வர்கள் கல்வியில் ஊக்கமாக இருக்கிருர்களா? தெய்வ வழிபாடு சிறப்பாக நடைபெறுகிறதா? கேட்காம லேயே தர்மம் செய்கிருர்களா? வேந்தே! உன் நாட் டில் பெண்கள் கற்பு நெறி வழுவாமலிருக்கிருர்களா? கணவனை எதிர்த்துப் பேசாமலிருக்கிருர்களா? ஆண்கள் ஒழுக்கத்தில் நிலைத்திருக்கிருர்களா? நீ அறநெறி தவருமல் ஆட்சி செலுத்துகிருயா? மகிழ்ச்சியில் வாழுகிருயா? சொல்''

என்று கேட்டார். அசுவபதி கேட்டான்; புன்னகை அரும்பினுன்; மலரடி வணங்கினுன். "ஆம் மெய்யனே. நாடு தழைத்துளது. நரியும், புலியும், பாம்பும் காட்டில் மட்டும் வாழுகின்றன.

---

†வீணை என்றிருக்கிறது. இது தவறு. நாரதர் யாழ் வல்லோர் தான். யாழ் இசைக் கருவி. நரம் பானியன்றது. வீணை, தாளக்கருவி. நல்லாப்பிள்ளை அண்மையில் இருந்தவர். ஆதலான் யாழை வீணை என்று மயங்கிப் பாடினுர்.

மனிதர், மனிதர்களாக இருக்கிறார்கள். எந்தக் கணக்காயரும் நெற்றிக்கு இட்டுக் கொள்ளாமல் வருவதில்லை. கணவனுக்கு முன் உண்டு உறங்கும் பெண்ணும், நேரம் கழித்து வரும் ஆணும் இருக்கவில்லை. பிரமபுத்ர! பொதுவாக தர்மம் கெடாமல் இருக்கிறது. சொன்னது சொன்ன வண்ணம் பொருள்களைத் தருகிறார்கள்; ஒன்றும் கலப்பதில்லை. பகை இல்லை; அச்சமில்லை; வறுமை இல்லை; அழுக்காறில்லை; அறியாமையில்லை; வறுமையில்லை; துன்பமில்லை. எல்லாம் உங்கள் பெரு வாழ்த்தாலும், இறையருளாலும் நலமே'' என்றான்.

நாரதர் தலை அசைத்து மகிழ்ந்தார். ''மாளவி! ஏன் நிற்கிறாய்? உன் மகள் எங்கே? எங்கள் மீனாட்சியின் பெயரை வைத்து விட்டாயே? உம். நலமா அவள்? விளையாடுகிறாளா? எங்கே காண வில்லையே?''

என்று, கேட்ட முனிவர் பெருமானை, மாளவி வணங்கினாள். ''முனிநாதா! சாவித்திரி இங்கில்லை.'' என்றாள். ''ஏன்? எங்குச் சென்றாள்?'' என்று கேட்டார் நாரதர்.

அசுவபதி நாரதரைப்பார்த்து,''இசைவாணரே! சாவித்திரி, தீர்த்த யாத்திரை சென்றுள்ளாள். சில நாட்களாயின. அவளைப் பிரிந்து பேதுறுகிறோம். தவசிலரே! சாவித்திரிக்குத் திருமணம் செய்ய வேண்டும். அவட்கேற்ற நல்ல கணவன் யாரென்று தெரியவில்லை, வளையவரும் அவள் வடிவழகுக்கும் அறிவாற்றலுக்கும் தகுந்த பதி, யாரோ? மகான்கள்

வாழ்த்துக்களைப் பெற்று வரக் கானகம் அனுப்பி யுளேன். சுவாமி! நீங்களும் அவளை வாழ்த்த வேண்டும்.'' என்று சொன்னான்.

"அப்படியா? உம், முருகா!'' என்று பெருமூச்சு விட்டார் நாரதர். "அசுவபதி! மாளவி! உங்கள் குழந்தைக்குக் குறையில்லை. குன்றெறிந்த குமரன் திருவருள் செய்வான். அஞ்சற்க. ஆறெழுத்தைத் தியானம் செய்யுங்கள்.''

என்று நாரதப் பெருமான், அருளியபோது, அங்குச் சாவித்திரி வந்தாள். வந்தவள் நேராக யாழ் வல்லோரை வணங்கினாள்; தந்தையைத் தொழுதாள்; தாயை வணங்கினாள்; அங்குள்ள பெரியார் எல்லோரையுமே வணங்கினாள்; தீர்த்த யாத்திரையிலிருந்து கொண்டு வந்த திருநீறும் நறுநீரும், இறைவன் திருவடியில் சூட்டிக் களைந்த மலரும் கையுறையாக நாரதருக்கும் தந்தைக்கும் மற்றவர்க்கும் தந்தாள்.

யாவருக்கும் மகிழ்ச்சி. மாளவி, மகளை அணைத் தாள். பால் கொணரச் செய்து தந்தாள். 'மகளே! நலமா? இளைத்தனையே?' என்று நலம் விசாரித்தாள்.

நாரதர் கை காட்ட யாவரும் அமர்ந்தனர். மாள விக்கும் அசுவபதிக்கும், ஒவ்வொரு பொருளும் இரண்டிரண்டாகத் தெரிந்தன. புன்கணீர் அடைக் குந் தாழில்லாது பொழிந்தது. சாவித்திரி, தாய்க் குப் பின்னே தாதிகளுடன் நின்றாள். நாரதர்

மென்மையாக நகைத்து, அசுவபதியை நோக்கினர். "உம். அசுவபதி! உன் மகள் வளர்ந்துதான் விட்டாள். இனி அவளுக்குத் திருமணம் செய்யவேண்டியதுதான். நீ என்ன ஏற்பாடு செய்துளாய்?" என்று கேட்டமுனிவரரை வணங்கினன் அசுவபதி. "யான், என் சொல்வது? சாவித்திரிக்கு ஏற்ற மணமகனைத் தெரிந்து மண முடிக்க வேண்டியதுதான்."

என்று சாவித்திரியைத் திரும்பிப் பார்த்தான். சாவித்திரி நாணித் தலை கவிழ்ந்தாள். நாரதர் "கூடாது கூடாது; நீ உன் மனதிற்கிசைந்தவனைச் சாவித்திரிக்கு வரனுகத் தேர்ந்தெடுக்காதே. அதில் பயனில்லை. பெண்ணின் மன மறிந்து, திருமணம் முடிக்க வேண்டும். நீ உன் ததிக்குக் கணவன் தேடுவாய். மாளவி தன் விருப்பத்திற்குப் பார்ப்பாள்; அது சிறப்பல்ல. மணமகள் என்ன நினைக்கிருள்? அதுதான், இதில் கவனிக்கப்பட வேண்டிய ஒன்று.

"அசுவபதி! சில நாள் மட்டும் இருக்கும் உடைகளைத் தேர்ந்தெடுக்கும்போது குழந்தைகளின் விருப்பந் தெரிந்து, அந்த விருப்பப்படியேதானே எடுக்கிறோம்? உண்ணும் உணவும் அவள் விருப்பந் தானே! கணவன் ஆயுளுக்கு ஒருவனல்லவா? மலரா சூட்டிக் களைந்தெறிவதற்கு? மணாளனுயிற்றே? மங்கையின் விருப்பந்தான், பார்க்க வேண்டும்." என்ருர்.

அசுவபதி, ஆம்; அப்படியே; என்று சொல்லிச் சாவித்திரியைக் குறிப்பாகப் பார்த்தான். தந்தையின்

குறிப்பறிந்த சாவித்திரி, தாதியின் தோளில் தலை கவிழ்ந்தாள்.

மத்திர தேய வேந்தே மகட்கொடை பெற்ற நீயுன்
சித்தம் வந்தவற் களித்தல் சிறப்பன்றித் திருவை யன்னாள்
புத்தியில் வரித்த தூய புருடனுக் குதவலாமென்
றுத்தமனுரைப்ப மன்ன னெண்டொடிக் குரைப்ப தானன்.

அசுவபதி, "சாவித்திரி! நாரதப் பெருமான் சொல்வது உண்மையே. உன்னால் வரிக்கப்பட்ட தவமுள்ள அரசகுமாரன் யாராவது இருக்கிறானா?' சொல். அஞ்சுதல் வேண்டா" என்றான்.

நாரதர், "அஃ அஃஆ! நன்று! நன்று!" என நகைத்தார். "மன்னா! எப்படி! உன்னால் வரிக்கப் பட்ட அரசகுமாரன் இருக்கிறானா? நல்ல கேள்வி கேட்டாயே? ஏனப்பா! நீயாகப் பார்த்து இவனைத் தான் வரிக்க வேண்டும் என்று கட்டளையிடுகிறாயா? உன்னால் வரிக்கப்பட்டவன் யாரென்று கேள். அரச குமாரன் யாரென்று கேட்கிறாயே? அரசகுமாரனைத் தவிரச் சாவித்திரி விரும்பக் கூடாதா? உம். வேறொரு வனை விரும்பியிருந்தால்? இப்பொழுது சொல்வாளா? நீதான் அரச குமாரன் யாரென்று கேட்டு விட்டாயே? தப்பு; தப்பு. உன் மகள் விரும்பியவன் அவளுக்குக் கணவன். நீ அரசனாக இருப்பதால், அந்த உயர்விலேயே, கேட்காதே." என்று கூறினார்.

அசுவபதி கேட்டான். "உண்மைதான். சாவித் திரி, நீ யாரையாவது விரும்புகிறாயா? அம்மா! எங்க

ளிடம் சொல்ல ஏன் தயக்கம்?'' என்று அன் பாகக் கேட்டான். சாவித்திரி, முன்னிலும் பெரிதும் முகஞ்சிவந்து, தரை நோக்கினுள். தரை மகளுக்கு மகிழ்ச்சி சாவித்திரி தன்னைப் பார்ப்பதில். சாவித் திரி, வெட்கத்தினுல் தலை கவிழ்க்கவில்லையானுல் அவள் முகத்தை, நிலமகள் எங்கிருந்து பார்ப்பது?

மாளவி, மகளை அழைத்தாள்; தலையைத் தட வினுள். "கண்ணே! என்ன வெட்கம்? நாங்கள் யார்? உன் நலத்தில் ஈடுபட்டவர்கள் தானே? சொல். சொல்லம்மா?'' என்று கேட்டாள். அப் போது சாவித்திரியின், தோழிகளில் ஒருத்தி முன் வந்தாள். யாவரையும் வணங்கினுள்.

"மன்னர் பெருமானே! மகரிஷி அவர்களே! வணக்கம். சாவித்திரி நாணுகிருள். அவளுக்காக யான் சொல்லவா?'' என்று நயமாகக் கேட்டாள். நாரதர் தலை அசைத்தார். அசுவபதி, அவளைப் பார்த்து "மணிமொழி! நீ எப்பொழுதும் குழந்தை யுடன் இருப்பவள். நீயும் அவளும் ஒன்றே. உடம் பால்தான் நீங்கள் வேறு. நான் பார்த்திருக்கிறேன். மனவிருப்பங் கூட உங்களுக்கு ஒன்று போல்தான் தோன்றுகிறது. நல்லது; நீ சொல். உன்னிடம் சொல் லாத மறைவா? உனக்குத் தெரியாத செய்தியா? சொல் மணிமொழி; சொல்'' என்று கட்டளையிட்டார்.

மணிமொழி, "நாங்கள் தீர்த்த யாத்திரைக்குச் சென்றேமல்லவா? பல தீர்த்தங்களையும் ஆடிக் கொண்டு, முனிவர்களை வணங்கிச் சரசுவதி நதிக்

கரையில் தங்கினேம். அங்குதான் நிகழ்ந்தது. காலே இறை வழிபாட்டை முடித்துக்கொண்டு ஒரு கல்லின் மீது அமர்ந்திருந்தோம். அது கார் காலம். மென்மையான மழைச்சாரல் வீசிக் கொண்டிருந் தது. அது மனத்திற்கு மிக இதமாக இருந்தது. எங்கும் கொன்றை மலர்ந்திருந்தது. அதன் இதழ் கள் விழுந்து தரையைத் தங்கமாக்கின.

அப்பொழுது அங்கே ஒரு கட்டழகன் வந்தான். அவன் கையில் மிகுதியான தாமரைகள் இருந்தன. மற்ருெரு கையிலுள்ளகூடையில் கனிகள் இருந்தன. நாங்களெல்லாம் மன்மதன்தான் என்று எழுந்து விட்டோம். வந்தவன் செக்கச் செவேலென்று இருப் பதைப் பார்த்துத்தான் இந்திர குமாரன் என்று தெரிந்தோம். பிறகு, சற்று உற்றுப் பார்த்தோம். பயம் நெஞ்சில் படபடவென்கிறது எங்களுக்கு. அவ்வழகன் கால்கள் பூமகளை முத்தமிட்டுக் கொண் டிருந்தன. உம், எங்களில் யாராவது நிலமகளாக இருக்கக் கூடாதா! என்ன செய்வது! அவன் கண் களோ கருணையைப் பொழிகின்றன. சில இடங் களில் கொடுப்பதைத் தடுக்க இரண்டு பேர் இருப் பார்கள். அதுபோல் அவர் கண்கள் பொழியும் கருணையை, இமைகள் மூடிமூடித் தடுத்தன.

அதனல் தான் அவர் அரச குமாரர் என்று உறுதிப்பட்டது. அப்பா! அப்பொழுதுதான் நிம்மதி யாக மூச்சுவிட்டோம். நாங்களெல்லாம் அவரைப் பார்த்துக் கொண்டிருந்தபோது சாவித்திரி என்ன செய்தாள் தெரியுமா? அப்படியே அவரை விழுங்கி

விட்டாள். இதுவரை நாங்கள் பார்க்காத அவள் இடை, நாங்கள் பார்க்கும்படியாகத் தெரிந்ததே! அடேயப்பா! அப்படியே நிற்கிருள்; பெருமூச்சு விடு கிருள்? கூப்பிட்டால் காது கேட்கவில்லே? அவளுக்கு முன்னே போய் நின்ருல் கண் தெரியவில்லை; அவள் கண்களே உற்றுப் பார்த்தால் அக்கட்டழகன் இருக்கிருன். நாங்கள் என்ன வென்று சொல்வது?'' என்ற மணிமொழியை முழங்கையினுல் இடித்தாள், சாவித்திரி. "சீ! என் கண்ணில் ஒன்றும் இல்லே. உன் நெஞ்சில் தான் இருக்கிருர். வாயை மூடு'' என்ருள். மணிமொழி சற்று சத்தமாக, "நான் ஒன்றும் சொல்லவில்லேயடியம்மா! நீ ஏன் என்னே இடிக்கிருய்?'' என்ருள். அசுவபதி, நகைத்து "மணிமொழி! குழந்தை என்ன சொல்கிருள்?'' என்ருர். "ஒன்றுமில்லே அரசே! அவர் பெயரைச் சொல்லேண்டி என்கிருள்'' என்ருள் மணிமொழி.

ஐயோ! ஐயோ! என்று தலேயிலடித்துக்கொண் டாள் சாவித்திரி. மணிமொழி, "சும்மாத்தான் இரேண்டி நான்தான் சொல்கிறேனே! நீயும் சொல்ல மாட்டாய்! வெட்கம். காதலேயும் விடமாட்டாய். நல்ல பெண்ணடி! சும்மாயிரு'' என்ருள். நாரதர் "உம். பிறகு? அவன் யார்? பெயரென்ன? எங்கிருக் கிருன்?'' என்று கேட்டார்.

மணிமொழி, "அவர் சாலுவதேசம். அவர் தந்தை துயுமத்சேனர். தாய், சைப்யை. மன்னர் குமாரர்'' என்ருள். அசுவபதி, "ஓ! துயுமத்சேனர் குமாரனு? துயுமத்சேனர், என் நண்பர்தான். அவர்.... .... ....?

"ஆம் மன்னவா! கானகத்தில் இருக்கிறார். அவர் குமாரர் தான் இவர். முனிவர்களைக் கேட்டுத் தெரிந்து கொண்டோம். அவர் பெயர் ... .... என்னவோ, மறந்துவிட்டதே? ஏண்டி சாவித்திரி! உனக்குத்தான் தெரியுமே! சொல்லேன்! என்ன அவர் பெயர்?" என்று கேட்டாள் மணிமொழி.

முகத்தைச் சுளித்த சாவித்திரி, "போடி! எனக்கென்ன தெரியும்? உனக்குத்தான் வேலையில்லை. காட்டில் உள்ளவர்களை எல்லாம் கேட்டுத் தெரிந்து கொண்டு வந்தாய்? போ போ" என்றாள்.

மணிமொழி, "ஐயையோ! இவள் என்ன இப்படிப் பொய் பேசுகிறாளே! ஏண்டி சாவித்திரி உனக்கு அவர் பெயர் தெரியாது?"

"ஊஉம். தெரியாது." தலையாட்டினாள்.

"பொய் சொல்லாதே?"

"தெரியாதுடி. போடி."

"சத்தியமாகவா?"

"சத்திய .......... போடி" என்று வெட்கினாள்.

தோழியர்கள் எல்லோரும், கைதட்டி நகைத்தார்கள். 'ஐயையோ' இவள் கல்யாணம் ஆவதற்கு முன்பே கணவன் பெயரைச் சொல்கிறாளே?"ஏண்டி, திருமணத்திற்குப் பின் அவரை எப்படித்தான் ஆட்டிவைவப்பாயோ? பாவம் அவர்" என்று நையாண்டி செய்தனர்.

சாவித்திரி, நாணித் தலை கவிழ்ந்து, போங்களடி என்று ஓடினுள். வாடி! ஏன் ஓடுகிருய்? என்று மணிமொழி, கைபற்றி இழுத்தாள். மாளவி, மகளை அணைத்து அருகில் அமர்த்தினுள்.

நாரதர், "ஓகோ! அவன் பெயர், சத்தியவானு?" என்று கேட்டார். மணிமொழி, "ஆம், சத்தியவான் தான் அவர். அவரைத் தான் எங்கள் தலைவி, நாயகனுகக் கொண்டிருக்கிருள்." என்று விளக்கினுள். மன்னனுக்கும் மாளவிக்கும் பெரு மகிழ்ச்சி.

நாரதர். "தகும். தக்கவனே. குணத்தாலும், பேச்சாலும், தோற்றத்தாலும், ஏற்றத்தாலும், சாவித்திரிக்கு நாயகனுந் தகுதியுடையவனே. அசுவபதி! சாவித்திரி தக்க வரனையே வரித்தாள்" என்ருர். "சுவாமி! சத்தியவான் அத்தனை சிறந்தவனு?" என்று மன்னவன் கேட்டான்.

நாரதர், "அசுவபதி! சத்தியவான், சத்தியத்தையே பேசுகிருன். அவன், தந்தை சத்தியத்தை விரும்புகிறவர். தாயும் சத்தியத்தையே பேசுகிருள். அதனுல், அவனுக்குப் பெரியவர்கள், 'சத்தியவான்' என்று பெயரிட்டார்கள். இவனுக்குக் குதிரைகள் விருப்பம். ஓவியத்திலும், குதிரைகளை விரும்பிப் பார்ப்பான். விருப்பமாக எழுதுவான். அதனுல், சித்திராஸ்வன், என்றும் அழைப்பார்கள். சத்தியவான், ஞாயிற்றேனுக்கு ஒப்பான ஒளியுள்ளவன். அறிவில் வியாழ பகவான். வீரத்தில் மகேந்திரன். பொறுமையில் பூமி. அரசே! வலிமையான துயுமத்சேனனுக்கு மகனுகப் பிறந்த இந்த சத்திய

வான், கொடுப்பதில் நிகரில்லாதவன். தனக்கென்று எதையும் வைத்துக் கொள்வதில்லை. அதனுல், இவனுக்கு நண்பர்கள் அதிகம் என்று சொல்வேன். சங்க்ருதி குமாரன் நந்திதேவனைத் தெரியுமல்லவா? வள்ளல் தன்மையில் அவன் தான் இவன்? தன்னையே கொடுப்பதில் உசீநரன் மகன் சிபியை மிஞ்சி விட்டான். இவன் பெருந்தன்மைக்காக யயாதி பாராட்டுகிருன். தோற்றத்தில் சந்திரன் இவனைக் கண்டு தேய்கிருன். அழகில் அசுவினி குமாரர்களை ஒத்தவன்.

அவனிடம் இல்லாதது ஒன்று; அசூயை. இனிமையாகப் பேசுவான்; புலனடக்க முடையவன்; ஒழுக்கம் அவன் மூச்சு. வாய்மை அவனுக்கு அணி. பணிவுடையவன்; அகங்கார மில்லாதவன்; தவ சீலன். அசுவபதி! முனிவர்கள் அவனைப் பற்றிச் சுருக்கமாகச் சொல்கிருர்கள்; "எப்பொழுதும், அவனிடத்தில் உள்ளும் புறமும் ஒத்திருக்கிறது. தைர்யம் அவனிடத்திலேயே நிலை பெற்றிருக்கிறது." என்கிருர்கள். இதைவிட என்ன வேண்டும்? தர்மவானுகிய அவனை நீ மருமகனுக அடைவது சிறந்ததே." என்று அசுவபதியைப் பார்த்தார். அசுவபதிக்கு மிக்க மகிழ்ச்சி. சத்தியவான் புகழால் அச்சபை நிறைந்திருந்தது. ஒவ்வொருவரும் தங்கள் தங்கள் பிள்ளைகளை நினைந்து பெருமூச்சு விட்டார்கள். என்ன செய்வது ?

நாரதர் மாளவியைக் குறுக்காகப் பார்த்தார். "சத்தியவான், இப்பொழுது தாய்தந்தையர்களோடு

கானகத்தில் இருக்கிருன். அவன் ராஜ்யம் அவ னுக்கு இருக்கவில்லே. துயுமத்சேனன், கண்களே இழந்து விட்டான். அப்பொழுது சத்தியவான், சிறுவன். அதனுல், முன்னமேயே பகை கொண்டிருந்தவன், நாட்டை அபகரித்தான். இவர் கள் காட்டை அடைந்தார்கள்.

"யானேயும்- குதிரையும் தேரும் அவர்களுக்கு இல்லே. பெருமையும் வீரமும் பணிவும் இருக்கின் றன. மாளிகை இல்லே. குடிசைதான். மகத்தான தவம் இருக்கிறது. பொன் ஊஞ்சல் கிடையாது; மரத்தில் தொங்கும் கொடிகள் தான். தங்கப் பாத் திரங்களேப் பார்க்க முடியாது; மண் பாண்டங்கள் தான். தங்கமான குணமிருக்கிறது"

"நெடு நாட்களாக கானகத்தில் வாழ்கிருர்கள். முத்தும் பவளமும் பெருகிய செல்வம் அவர்களிடம் இல்லே; அருட் செல்வந்தான். ஏவலர் யாருமில்லா தவர்கள்; கனிகளேயும், காய்களேயும் உண்பவர்கள். மரப் பட்டைகளேத் தரித்தவர்கள். விரதமிருப்ப வர்கள்; பொதுவாக அவர்கள் உலக சுகத்தை விரும்பவில்லே. தவம் தனமாகும்."

என்ற நாரதர், மாளவியைப் பார்த்தார். அவள் முகம் சற்று சிணுங்கியது. பிறகு, தன் உணர்ச்சி களேக் காட்டவில்லே. அசுவபதி, நாரதரைத் தொழு தான். "நாரதப் பெருமானே! அவர்கள் அரசியலி லிருந்தா லென்ன? அடவியிலிருந்தா லென்ன? பொன்னும் மணியும் பொருளும் ஏன்? அவைகளேயா சாவித்திரி மணக்கப் போகிருள்? குணக் குன்ருகக்

கணவன் வாய்க்க வேண்டும். கல்வியிற் சிறந்த சத்தியவானுக்கு வேறு ஏதாவது குற்றம் உளதா'' என்று கேட்டான்.

நாரதர், ''குற்றமா? அவனிடமேது? தூய்மை யான நெஞ்சையுடையவன். சாவித்திரி அவனை விரும்பியது பெருமைதான். முன்னைத் தவந்தான் அது. அங்கயற்கண்ணிக்கு ஆலவாயப்பர் கிடைத் தது போலே. சாவித்திரி-சத்தியவான். பெயர் கூட நன்ருகப் பொருந்தியுளது. இவர்கள் மணந்தால் பெரிய நதியில் விழுந்த சிறிய நதியைப் போல் பிரித்துத் தெரிந்து கொள்ள முடியாமல் ஒன்றியிருப் பார்கள். சீலம் பல பயின்ற சத்தியவானைத் தவிரச் சாவித்திரிக்கு ஏற்றவன் யார்? நான் இதனை வர வேற்கிறேன். வாழ்த்துகிறேன். ஆனல்...'' என்று விட்டார்.

அசுவபதி துடித்துவிட்டான்; விரைந்து எழுந் தான்; பணிந்தான். ''சுவாமி! என்ன ஆனல்? ஏன் தயங்குகிறீர்கள்? முன்னே சொன்ன நலன் களெல்லாம் ஆனல்,...என்பதால் அடிபட்டுப் போகின்றனவே? சொல்லுங்கள் சுவாமி! உங்களைத் தவிரச் சொல்லவல்லவர் யார்?'' என்று பதறினன்.

நாரதர் அமைதியாக, ''உம். முருகா! எம்பெரு மானே!'' என்று நெடு மூச்சு விட்டார். திருநீற்றுக் கோயிலிலிருந்து, ஆறெழுத் தோதித் திருநீறிட்டுக் கொண்டார். அசுவபதிக்கு ஒன்றும் புரிய வில்லை. மனம் படபடவென்று அடித்துக்கொண்டது.

என்னவோ! என்று மயங்கினன். சபையிலுள்ளவர்களும் நாரதரையே பார்த்துக்கொண்டிருந்தார்கள். மாளவிக்கு உதடுகள் துடித்தன. இடக் கண் துடித்தது. என்ன தீமையோ! என்று அருண்டுவிட்டாள். சாவித்திரி, அமைதியாக நாரதப் பெருமான் முகத்தையே பார்த்துக்கொண்டிருந்தாள். எந்த வகையான அசைவும் அவளிடம் இல்லை. அசைக்க முடியாத உறுதி அவள் கண்களில் தெரிந்தது.

சிறிது நேரங் கழித்து நாரதர், எல்லோரையும் தம் அருட்கண்களால் பார்த்தார். "அசுவபதி! இறைவன் திருவருள் எப்படி எப்படியோ வேலை செய்கிறது. ஊழ்வினை வந்து உறுத்தால் அதனைக் கடக்க வல்லவர் யார்? நாம் எப்பொழுதும் கலங்கக் கூடாது.

ஏற்கெனவே தீர்மானமாய்த்தான் நாம் வந்து பிறக்கிறோம். எனக்குங் கூடத்தான். ஆனல், முருகனருள் துணை செய்தமையால், பிறவிப் பெருங் கடல் பிழைக்கலானேன். மன்ன! இன்னவனுக்கு இன்னவள் மனைவி—என்பது நம் தீர்மானமல்ல. பிறப்பதற்கு முன்னேயே முடிவு செய்யப்பட்டுத் தான் பிறக்கிறார்கள். அதனை மாற்றச் சர்வ வல்லமையுள்ள கடவுளாலும் முடியாது. செய்யப் படாத தீர்மானத்தை இறையவர், கருணையால் மாற்றுவார்.

ஆகவே சாவித்திரி, சத்தியவானை விரும்பினள் என்றால், அது ஊழ்தான். அது சாவித்திரி

குற்றமல்ல. அவளுக்கு அவன்தான் கணவன். அதில் ஐயமில்லை. மாற்றவும் இயலாது. பதவியைப் பார்க்கவில்லை. செல்வத்தைப் பார்க்கவில்லை. உறவைப் பார்க்கவில்லை. அவன் வதியும் இடத்தைப் பார்க்கவில்லை. காலத்தைப் பார்க்கவில்லை. ஆனால், சத்தியவானைக் கண்டாள். மனதால் வரித்தாள். வாக்கால் சொன்னாள். இனி என்ன? செயல்தானே? மன வாக்கால், அவள் அவன் மனைவிதான். எது இப்படிச் செய்தது? விதி. அது மிகக் கொடியது. தாண்ட முடியாதது. வெல்ல முடியாதது. நாம் அமைதியாக இருக்க வேண்டும். சாவித்திரி! நீ விரும்பிய சத்தியவான், இன்றைய நாளிலிருந்து, சரியாக ஒரு யாண்டு முடிந்ததும் தேவர்களுக்கு விருந்தினனாக ஆவான்.'' என்றார்.

ஆயவன் தனக்கு வேறோர் வடுவுள தரச வென்ன
நேயமொ டவனை யையை நீயுரைத் தருள்க வென்றே
தூயநல் லரசன்கேட்பத் துவக்கறு முனிவன் சொன்னான்
ஆயுவின் றுதி யோராண் டலதிலை யவனுக் கென்றான்.

அசுவபதி, ஆ! என்று அலறிவிட்டார். மாளவி தலையை யாரோ பிளப்பது போல் இருந்தது. கண்கள் வெடித்துச் சிதறும் போல் தெரிந்தது. ஓவென்று கத்தி யழவேண்டும், என்று எண்ணினாள். மங்கலமாகப் பேசும்போது, அழுவது, அறிவுடைமை யல்ல என்று அடக்கிக்கொண்டாள்.

அசுவபதிக்கு நெற்றிப் பொட்டு விண், விண் என்று அடித்துக்கொண்டது. மனம் சிவ நாமத்தை வேகமாக உச்சரித்தது. இரு கைகளையும், இறுக்கி

மூடிக்கொண்டான். நா உலர்ந்தது. கண், இமைக்க வில்லை. வாய் திறந்து வாளா இருந்தான்.

தோழிகள் அப்படியப்படியே நின்று விட்டார் கள். ஒன்றுமே தோன்றவில்லை. அடுத்தவரைத் திரும்பிப் பார்க்க அஞ்சினார்கள். "என்ன பயங்கரம்? விதி இப்படியும் கொடுமையாக இருக்குமா? சே! நம் இளவரசிக்குத் துன்பம் வருவதற்கு முன் நாம் இறந்து விட வேண்டும். அவர்கள் பக்தி அவர்களைக் காப் பாற்ருதா? மீனாட்சி கை விடுவாளா? இறைவனே!" என்று ஏங்கினார்கள்.

சபை ஸ்தம்பித்து நின்றுவிட்டது. மூச்சுவிடப் பயந்தார்கள். நாரதர் கண்களை மூடிக் கொண்டார். ஆறெழுத் தோதி நின்றார். காற்றுல் அசையாத கல்லைப்போல் அசைவிலாது நின்றவள் சாவித்திரி யொருத்தியே. அவள் நெஞ்சு படபடக்கவில்லை. அமைதியாக இருந்தது. எப்பொழுதும் போல் நின்றாள். அதுவே நாணம். அதே மகிழ்ச்சி. அதே குறும்பு. சற்றுமுன் இருந்ததைப் போலவே இப் பொழுதும் நின்றாள்.

எல்லோரும், சாவித்திரியைப் பார்த்தார்கள். அவள் புன்முறுவலாக இருந்தாள். ஏதோ, தனக்கு முன்னமேயே தெரிந்ததைப் போலவும், அதைப் பற்றி இப்பொழுதென்ன என்பதைப் போலவும் இருந்தாள். வாய்திறக்க எல்லோரும் நடுங்கினார்கள். பேசினால் என்ன விளையுமோ என்று எண்ணினார் கள். இறைவன் திருவடியைத் துணையாகப் பற்றிய

சாவித்திரி, இடுக்கண் வருங்கால் நகுக, என்றபடி இருந்தாள்.

அப்பொழுது ஒரு தோழி, கையிற் பிடித்திருந்த மலர்த் தட்டத்தைப் பயத்தாலும் படபடப்பாலும், விட்டுவிட்டாள். கணீர் என்று விழுந்த சத்தம் எல்லோரையும், உணர்வுபெறச் செய்தது. நாரதர் திரும்பிச் சாவித்திரியைப் பார்த்தார். அசுவபதிக்கு உடல் வியர்த்தது. நெஞ்சில் ஏதோ அடைத்துக் கொண்டமாதிரி இருந்தது. கீரவாணி, என்ற தோழி, மெதுவாகத் தன்னை விடுவித்துக் கொண்டாள். கைகால்களை அசைத்தாள். சற்றுத் தள்ளி நின்றாள். கண்களைப் படபடவென்று அடித்துக் கொண்டாள். தொண்டையைக் கனைத்தாள். உலர்ந்த இதழ்களை நாவினால், அடிக்கடி நீவிக் கொண்டாள். மிக மெல்லிய குரலில், ''சாவித்திரி! நாரதர் சொல்லியதைக் கேட்டாயா? உன்னால் வரிக்கப்பட்ட கணவனுக்கு இன்னும் ஒரு ஆண்டே ஆயுள். ஆயுளற்ற கணவனை நீ மணந்து என்செய்வாய்? இளமையும் அழகும் உடைய நீ அறிவினால் ஆராய்ந்து பார். உன் முடிவு உனக்குமட்டும் நன்மை பயப்பதாக இருக்கக் கூடாது; உன் தாய்க்கும், தந்தைக்கும், உன்னிடம் மாறாத அன்பு கொண்ட, தோழிகளாகிய எங்கட்கும் இந் நாட்டிற்கும் உன்முடிவு இனிமையாக இருக்க வேண்டும்; நன்மைதரவேண்டும். சாவித்திரி! நன்கு சிந்தி; அவசரப்படாதே. உனக்கு இப்பொழுது நீயே அதிகாரி. இந்த சபையைத் திரும்பி நன்றாகப்பார்; ஒவ்வொருவர் முகத்தையும் ஊன்றிக் கவனி. பிறகு,

உன் முடிவைச் சொல். நீ, ஒரு யாண்டிற்குப் பின் துயருறுவதை இப்பொழுது எங்களால் கற்பனை கூடச் செய்து பார்க்க முடியவில்லை. அத்தனை இருளானது அத்துன்பம்.

"கோமகளே! உன் பிதா தக்க ஒருவனுக்குக் கொடுக்கக்கடவர். கொடுக்க வேண்டிய காலத்தில் கன்னியைத் தானங் கொடுக்காத பிதாவைப் பெரியோர்கள் இகழ்வார்கள். இளைய மனைவியைத் தனித்துவிட்டு ஊர் சுற்றும் ஊதாரியையும், தந்தை இறந்த பின் தாயைக் காப்பாற்றாத பட்டிமாட்டை யும் சான்றோர்கள் இகழ்ந்து ஒதுக்குவதுபோல் உன் தந்தையை ஒதுக்குவார்கள். ஆகவே, உன்னை உறுதியாக மணமுடிக்கத்தான் வேண்டும். ஆனால்,

"கல்யாணி! நீ வரனாக வரித்த சத்தியவா னுக்கு எல்லாக் குணங்களும் நிறைந்திருந்தும் ஆயுள் குறைந்திருக்கிறது. ஆகவே, உன்னை வரமாக வேண்டுகிறேன். செல்வி! அன்பினால் யாசிக்கிறேன். யாசிக்கின்ற எனக்கு நீ இதைக் கொடு. மறுக்காதே சாவித்திரி! உன் திருவடியைப் பிடித்து மன்றாட்டமாக வேண்டுகிறேன். நீ பதறாதே. விரைவு கொள்ளாதே. கருணை கூர்ந்து வேறு வரனை வரித்துக்கொள்" என்றாள்.

'கீரவாணி!' என்று கத்திவிட்டாள் சாவித்திரி. கழுகு அடித்த பெண் மயிலைப்போல் சத்தமிட்டாள்; பதறிவிட்டாள்; கண்களில் நீர் ஒழுகின. உடல் வியர்த்தது. உடம்பே ஆடிவிட்டது. குரல் நடுங்கி

யது. உரத்த குரலில் பேசினுள். அவள் பேச்சில் ஓர் உறுதி இருந்தது. நம்பிக்கை இருந்தது. அத்தனை விரைவிலும் அச்சொல்லில் தெளிவு இருந்தது. பணிவு இருந்தது. இனிமையிருந்தது.

கண்கள் சிவக்கவும், நெற்றி சுருங்கவும், சாவித்திரி பேசினுள். "கீரவாணி! கேள். அப்பா! அம்மா! மணிமொழி! முனிவர் பெருமானே! தோழி களே! சபையோர்களே! யாவரும் கேளுங்கள். நான் பதிதையல்ல. பாரத நாட்டுப் பத்தினிப் பெண். ஒருத்திக்கு ஒருவன் தான். ஒருவனுக்கும் ஒருத்தி தான். இலக்கணத்திலேயே, அதற்குமேல் எண் ணிக்கையில்லை என்ருர்கள். நன்கு கவனியுங்கள். பசுவை ஒரு முறைதான் தானஞ் செய்யலாம். பிதிரார்ஜித சொத்தை ஒரு முறைதான் பங்கிட்டுக் கொள்ளலாம். கன்னிகை ஒரு முறைதான் பதியை வரிப்பாள். அதுமட்டுமல்ல. ஆட்டுக்கு ரோமம் பல முறை வெட்டலாம். தோல் உரிப்பது ஒரு முறை தான். நான் கணவனைத் தேர்ந்தெடுப்பதும் ஒரு முறைதான். இது என்ன சட்டையா? உரித்து விடு வதற்கு? ஒரு பெண்ணிற்குக் கணவன், உடம்பால் மட்டுமல்ல, உயிராலுந்தான். பெரியோர்களே! உப்பில்லாத கலக்கூழ் குடிப்பதைவிடச் சத்துள்ள உணவு சிறிது சாப்பிட்டாலும் போதுந்தானே? அறிவில்லாதவர்களாக ஆயிரம் பேர் கூடிய சபையைவிடச் சான்ருேர்களாக ஓரிருவர் கூடினுல் போதாதா? குணமில்லாத கணவனேடு பதினுயிரம் யாண்டுகள் வாழ்வதைவிடக் குணக் குன்ருகிய என் கணவனேடு, யான் பத்து விநாடிகள் வாழ்ந்

தால் போதாதா? சண்டையும், வம்பும், தும்பும், இகழ்வும், துன்பமும் கொண்டு நெடுநாள் வாழ வேண்டுமா?

"சான்றோர்களே! சிந்தியுங்கள். வனத்திற் பார்த்த அவரை மனத்தில் வரித்தேன். வரித்ததைச் சொன்னேன். இனி என்ன? யான் எப்படிப் பிழைப் பேன்? பிழைப்பது எனக்கு அழகா? அவர் என் பதி தானே? யான் அவர் மனைவி தானே? என்னைக் கொண்டு போய்ச் சேர்ப்பது உங்கள் கடமை.

மனமொத்து நினைந்தணி வாக்கதனுற்
புனிதற் கெதிர் சொற்றது பொய்த்துளதேல்
இனிமெய்ப் பரிசப்படும் ஏழையருந்
தனிதப் புவர் நன்னிறை தாரணிமேல்.

"அன்பு கொண்டவர்களே! என் கணவர், குறையாயுளுள்ளவரோ! நிறையாயுளுள்ளவரோ! எனக்கென்ன! நான் அவர் மனைவி. எனதுயிர் அவர். அவர், உயிர் போகுமென்றால் என்ன! யானும் இறப்பேன் என்பதுதானே? கைம்பெண்ணாகவா வாழ்வேன்? அவருக்கு முன் சென்று, அங்கு அவரை வரவேற்பேன். அது தானே கற்பு! கற்பிழந்து வாழ்வதா! இரண்டாமவனை யான் வரிக்கமாட்டேன். எனக்கு ஆயுள் பிரதானமல்ல. மனந்தான் பிரதானம்.

முன்னாக வரித்தமுனைக் குரிசில்
தன்னாயு விறந்திடினுந் தகைநாள்
தொன்னாள் கொளினும் அவனுற்றிடினும்
என் நாயகனே அவனென்றனளால்.

"ஆகவே, உங்களைப் பணிந்து வேண்டுவது விரைவில் என் நாயகனிடம் என்னைக் கொண்டு போய் விட்டுவிடுங்கள். நான் அவர்க்குப் பணி விடை செய்ய வேண்டும்" என்றாள்.

சபையோர் கேட்டு, ஆ! ஆ! என்றனர். என்ன கற்பு! என்ன கற்பு! என்று, இறும்பூதுற்றனர். நாரதர் அசுவப்தியைப் பார்த்தார். அசுவபதி, அவரை வணங்கினான். "சுவாமி! சாவித்திரியின் விருப்பத்திற்கு மாருக யான் என்ன சொல்வேன்? அவள் விருப்பமே என் விருப்பம். அவள் கண் கலங்க, நான் பொறுக்கமாட்டேன். என்மகள் தர்மத்தைத் தவருதவள்; பொய்யறியாதவள். அவள் சொன்னால், அது சரியாக இருக்கும். நீங்கள் அப்படியே உத்தரவு செய்யுமாறு வேண்டுகிறேன்" என்றான்.

நாரதர், முருகா! என்று சொல்லி, மறுபடியும், "அசுவபதி! வருந்தாதே! யாருமே கவலைப் படாதீர்கள். எது நடக்க வேண்டுமோ, அது நடந்திருக்கிறது. சாவித்திரியால் இந்த நாடு வாழும். பெண் குலம் சிறக்கும். அவள் கற்புத் தெய்வம். அட்டதிக்குப் பாலகர்களும் அவள் ஏவல் செய்வார்கள். தர்மத்திற் பிறழாத அவளைத் திருப்ப முடியாது. சாவித்திரி! நீ சத்தியவானையே மணப்பாயாக" என்றார்.

சாவித்திரி நாரதரை வணங்கினாள். ஆறெ மூத்தை யோதி, "தீர்க்க சுமங்கலியாயிரு. அனேக குமாரர்களைப் பெறுவாய்" என்று வாழ்த்தினார்.

"அசுவபதி! சத்தியவானிடத்திலுள்ள குணங்கள் வேறு மனிதர்களிடத்திலில்லே. தாமதிக்காதே. சாவித்திரியை, அவனுக்கே கொடு. நான் வருகிறேன்" என்று எழுந்தார். யாவரும் எழுந்தார்கள்.

"கற்புத் தெய்வமே! வாழ்க. பெண்கள் நாயகமே! வாழ்க! எங்கள் தவச்செல்வியே வாழ்க" என்று வாழ்த்தினர்கள். பலர் அவளே வணங்கினர்கள். மாளவி, மகளே! என்று அணைத்துக் கொண்டாள்.

அசுவபதி நாரதரை வணங்கி, "ஐயனே! தாங்கள் முன்னின்று இத் திருமணத்தை முடிக்க வேண்டும். உடனிருங்கள்" என்று வேண்டினன். நாரதர் மகிழ்ந்து, "யான் வருவேன். நீ செல்க" என்று சொல்லி மறைந்தருளினர். மன்னவன், வனத்திற்கு அப்பொழுதே புறப்பட்டான். அமைச்சர்கள் உடனே ஏற்பாடு செய்தார்கள். நகரமே உடன் வந்தது. எல்லாப் பொருள்களேயும் இங்கிருந்தே எடுத்துக்கொண்டார்கள்.

சமையல்காரர்கள் புறப்பட்டார்கள். கருவூலத்தார், கருவூலத்துடன் புறப்பட்டனர். இசைவாணர்கள், இசைக் கருவிகளோடு புறப்பட்டார்கள். நாட்டிய ஆரணங்குகள் புறப்பட்டார்கள். மேளங்கள் முன் சென்றன. எத்தனையோ விருதுகள், எத்தனையோ வரிசைகள். ஆயிரமாயிரம் பெண்கள் எப்படித்தான் இத்தனை விரைந்து புறப்பட்டார்களோ? பாவம்!

அசுவபதி யானையிலேறினன். மாளவி தேரேறி னள். சாவித்திரி, இறைவனை வழிபட்டாள். தாய் தந்தையரை வணங்கினள். தோழிகளுக்கெல்லாம் முகமன் கூறினள். மணிமொழியும் அவளும் பல்லக்கில் ஏறினர்கள். எல்லோரும் புறப்பட்டுச் செல்ல லாயினர். மன்னவனுக்கு வலந்துடித்தது. மாளவிக்கு இடந் துடித்தது. பாற்குடமும் மதுக்குடமும் வந்தன. நிறைகுடமும் சுமங்கலியும் வந்தார்கள். சிறிது மழை தூறலாக வந்தது. மயில் இடம் போயிற்று. அரவம் வலம் போயிற்று.

மத்ரதேசமே கானகத்திற்கு வந்துவிட்டது. ஆயிரமாயிரம் தேர்களின் ஒலியும் குதிரைகளின் குளம்போசையும், யானைகளின் பிளிறலும், மலை களிலும் முழைகளிலுஞ் சென்று திரும்பின. சிறிய சிறிய யாறுகள் குறுக்கே வந்தன. முனி குமாரர் களும் முனிபத்தினிகளும் நின்று வேடிக்கை பார்த் தனர். பலர் வேள்வி செய்து கொண்டிருந்தனர். சிலர் மலர் பறித்துக்கொண்டிருந்தனர். வேதம் பயின்றவர் பலர். அங்கங்கே முனிவர்களும் முனி குமாரர்களும் கூடித் தவத்திலிருந்தனர். வனந்தரமே அமைதியாக இருந்தது. அங்கே ஒரு ஒளி சூழ்ந் திருந்தது.

மெல்லெனக் காற்று வீசியது. தருக்கள் அசைந்தன; ஆடின. அது சாவித்திரியை "வருக" என வரவேற்பதைப் போலிருந்தது. கரும்பாறையில் மயில்கள் நின்று நடனமாடின. குயில்கள் கூவின.

சாவித்திரி வந்துவிட்டாள். இனி நமக்குச் சிறுவர்களால் துன்பமில்லையென்று மந்திகள் குட்டிகளோடு மரமேறின; கனிகளை உதிர்த்தன. சாவித்திரியின் கண்களைக் கண்ட மான்கள் வெட்கி ஓடின. எல்லோரும் துயுமத்சேனர் ஆசிரமத்தின் முன்னே வந்து சேர்ந்தனர். கௌதமர், தௌம்யர், பாரத்வாஜர் முதலிய முனிவர்கள், மன்னனை முகமன் கூறி வரவேற்றனர். துயுமத்சேனர், வழிபாட்டை முடித்துக் கொண்டு மலர்களோடு வெளிவந்தார். அவர் நெற்றியில் திருநீறு துலங்கியது. முகத்தில் அறிவுக் கண் சுடர் விட்டது. வாய் ஐந்தெழுத்தை யோதியது. சத்தியவானும் சைப்யையும் அவருக்குத் துணைபுரிந்து அருகில் நின்றனர்.

சற்றுத் தொலைவிலிருந்தே கால்களால் நடந்து வருகின்ற அசுவபதி துயுமத்சேனரைக் கண்டவுடன் விரைவாகச் சென்று நண்பரே! என்று தழுவிக் கொண்டார். துயுமத்சேனரும் தழுவிக் கொண்டார். ‘நான் அசுவபதி’ என்று தெரிவித்துக் கொண்டார். மாளவி வந்து வணங்கினள். ‘என் மனைவி, மாளவி வணங்குகிருள்’ என்று அறிமுகப் படுத்தினர். “அப்படியா! வாழ்க.” என்று வாழ்த்தினர் துயுமத்சேனர்.

அப்பொழுது அங்கேயொரு, பூம்பல்லக்கு நின்றது. மலர்களினலாயது அது. அதிலிருந்து மணிமொழியும், தழைகளையுடுத்த வனதேவதையும் இறங்கினர்கள். அசுவபதி பார்த்தார். “என்ன இது? நம் குமாரியா? முத்துப் பல்லக்கில் ஏறவில்லையா? பூம்

பல்லக்கிலா ஏறினுள்? அடாடா! அணிகலன்களை எப்பொழுது அகற்றினுள்? பட்டுடை இருக்க வில்லையே! இவள் மானிடப் பெண்ணே யல்ல. கற்புத் தெய்வமே'' என்று வியந்தான்.

சாவித்திரி, காதுகளில் தழையைச் செருகியிருந் தாள். கைகளில் சங்கு வளையல்களை அணிந்திருந் தாள். கழுத்தில் ஒரு முத்துமாலை அணி செய்தது. மரப்பட்டைகளாலும் தழைகளாலும் ஆன உடையை உடுத்தி இருந்தாள். தலை முடியை எடுத்து முடித்து அதில் மகிழம்பூவைச் சுற்றியிருந்தாள். மணிமொழி யுடன் இறங்கிய அவள் மென்மையாக நடந்து வந்தாள். தரை அவள் காலோடு கூடவே அசைந்து வருவதைப்போலிருந்தது.

வைத்த கண் வாங்காமல், முனிபத்தினிகள், அவளைப் பார்த்துக்கொண்டிருந்தனர். 'சாவித்திரி நேராகச் சென்று, துயுமத்சேனரை வணங்கினுள். அசுவபதி, ''நண்பரே! சாவித்திரிதேவியின் திருவரு ளால், எனக்கு மகளாகப் பிறந்த உங்கள் மருமகள், சாவித்திரி வணங்குகிருள்'' என்ருர். கேட்ட துயுமத் சேனர் ஆடிவிட்டார். உணர்ச்சி மிகுதியாயிற்று. வாழ்க! வாழ்க! என்று கைகளிலிருந்த இறைவனை அருச்சித்த மலர்களைச் சாவித்திரியின் தலையிற் பெய் தார். சாவித்திரி, சைப்யையை வணங்கினுள். முனிவர்களை யெல்லாந் தொழுதாள்.

யாவரும் சென்று ஒரு ஆச்சாமரத்தின் அடியில் அமர்ந்தனர். சத்தியவானும் சைப்யையும் துயுமத் சேனருக்குப் பின்னே நின்றனர். பெண்கள் ஒரு

பக்கம் அமர்ந்தனர். அசுவபதி அமர்ந்தார். அமைச் சர்களும் பௌரோகிதர்களும் இருந்தனர்.

சாவித்திரி, தரையைக் காலால் கீறிக் கொண்டே சத்தியவானைப் பார்த்தாள். அவள் கண்கள் சத்தியவானின் திருவடிகளில் சூழ்ந்தன. சத்தியவான், தருக்களையும் கொடிகளையும் பார்ப்ப வன்போல் சாவித்திரியைப் பார்த்தான். அவன் கண்கள் சாவித்திரியின் கண்ணொளியோடு ஒன்றின. இருவரும் அன்பினல் ஈர்க்கப்பட்டு நின்றனர். மணிமொழி,சாவித்திரியின்காலைக்கிள்ளி,சாவித்திரி- என்ருள். என்னடி? போடி என்ருள் சாவித்திரி. என்ன! என்ன! என்று கேட்டார்கள். 'ஒன்று மில்லை. சாவித்திரியின் காலில் ஒரு எறும்பு ஏறியது; அதைத் தள்ளினேன்' என்ருள் மணிமொழி. 'எறும்பா! இவள் குறும்பு' என்று சாவித்திரி மென்மையாகப் புன்னகைத்தாள்.

அப்பொழுது அங்கே முனி குமாரர்களும் முனி பத்தினிகளும் சீரிய புதிய மண் குவளைகளில் கொம்புத் தேனைப் பிழிந்து, கொடி நாரத்தைச் சாற்றை விட்டு, அங்கு மண்டிக்கிடக்கும் குங்குமப் பூவையும் தூவி, நீலத் திராட்சையைப் பிழிந்து, எல்லோருக்கும் கொடுத்தார்கள். நகரத்தார்க்கு இது புதுமையாகவும் சுவையாகவும் இருந்தது. நாமெல் லாம் கானகத்திற்கே வந்துவிடலாமே என்று சிலர் நினைத்தார்கள்.

துயுமத்சேனர், அசுவபதியைப் பார்த்தார். "அசுவபதி! உன் வரவு எனக்கு உவகையைத் தரு

கிறது. சுற்றத்தோடும் உன் மகளோடும் வந்துள் ளாய். இதைவிட எனக்கு மகிழ்ச்சி என்ன? மனமொன்றிய நண்பர்களோடு அளவளாவுவதை விட இன்பம் உண்டா? சிலர் நண்பர்களாக இருந்து நல்ல பாம்பாக மாறிவிடுவார்கள். அவர்கள் பொருள் வழிச் சேர்ந்தவர்கள். பொருள்தான் எத்தனை பேரைக் கூட்டுகின்றது? எத்தனை பேரைக் கழிக் கின்றது? அடாடா! அசுவபதி! கானகத்திற்கு வந்த பின் யான், நிம்மதியாக இருக்கிறேன்.

நகரத்திலிருக்கும்போது எத்தனை மறைவு! எத்தனை வஞ்சகம்! எத்தனை இச்சகம்? அப்பப்பா! பொருளுக்காகவே என்னைச் சுற்றுவார்கள். பயங்கர மான மனிதர்கள் அவர்கள். என்னைவிட்டுப் பிரியவே மாட்டார்கள். ஏன்? பிரிந்தால், தங்களைப் பற்றி யாராவது, எதுவும் சொல்லிவிட்டால்! அதற்குப் பயம். பாவம்! அவர்களென்ன செய்வார்கள்? பொருளாசை அப்படி!

அசுவபதி! பொய் சொல்லுகிறுர்கள் என்று தெரிந்தும், யான் சும்மா இருப்பேன். போனுற் போகட்டு மென்று நான் இருந்தால், ஏமாந்து விட்டேன் என்று அவர்கள் நினைப்பார்கள். என் நண்பர்களோ அவர்களுக்கு நான் அஞ்சுகிறேன் என்று வருந்துவார்கள். எப்படி? என் பொருளை விரும்பிப் பெறுபவர்களே எனக்குக் கேடு சூழ்வார் கள். பகைவர்களுடனும் உறவாடுவார்கள். அவர் களால் தானே நான் நாடிழந்தேன்.

“நண்பரே! பொருளை விரும்பிச் சூழ்ந்திருப்ப வர்கள், மீனைப்போல் கொத்தி, உயிரெடுப்பார்கள்.

நான் யாரை விரும்புகிறேனே, அவர்களை நெருங்க விடமாட்டார்கள். அன்புள்ளவர்களோடு பேசலா மென்ருல், இவர்கள், வேவு பார்த்துக்கொண்டே யிருப்பார்கள். யாரையுந் தூற்றிக் கொண்டே யிருப்பார்கள். எல்லோர் மீதும் கோள் சொல்லுவார் கள். நாம் கேட்கிருேமோ இல்லையோ, வளவள வென்று பேசிக்கொண்டே யிருப்பார்கள். கொடுப் பதைத் தடுத்துக்கொண்டே யிருப்பார்கள். தங் களுக்கு அவர்களாகவே எடுத்துக் கொள்வார்கள். இருந்தும் நான் மிகுதியாகச் செலவழிக்கிறேன் என்று தூற்றுவார்கள்.

"அசுவபதி! என் மனைவியின் மீதும் அஞ்சாமல் கோள் சொல்லுவார்கள். அப்பொழுது, சத்தியவான் சிறுவன் தானே! அவன் மீது ஓயாமல் குறை சொல்லுவார்கள். கொல்லும், அளவுக்குக் கோள் மூட்டுவார்கள். அப்பா! பயங்கரமான கற்பனைகள் எல்லாம் அவர்களுக்குத் தான் வரும். எத்தனை சூழ்ச்சி! எத்தனை வஞ்சகம்? அந்தத் துன்பம்! எனக்கு இப்போது இல்லை. சாந்தியாக இருக் கிறேன். அசுவபதி! ஒன்று சொல்லுகிறேன். நம் மனைவியோ, குழந்தைகளோ, உறவினர்களோ தங் கள் குறைகளைச் சொல்வதற்கும், தேவைகளைக் கேட்பதற்கும், இன்னொருவரை முன்னிட்டுக் கொண்டு, நம்மிடம் வரக்கூடாது. அப்படி வருவார் களேயானுல், அது நம்முடைய பலவீனத்தைக் காட்டுகிறது. வீணர்க்கு நம்மைக் கொடுத்து விட் டோம் என்பதுதான் பொருள். சே! மனைவி, ஒரு வரை வைத்துக்கொண்டு நம்மிடம் பேசுவதா!

குழந்தைகள், பேசுவதற்கு அடுத்தவரையா அழைத்துவருவது! என்ன வாழ்வு! எதைக் குறிக்கிறது? நாம் அவர்களிடம் அன்பு காட்டவில்லை என்பதல்லவா தெரிகிறது. அன்பு இருக்கிறது. வெளிப்படுத்திக்கொள்ளவில்லை. பக்தி இருக்கிறது. கிரியாமார்க்கத்தினால், அது பயன்படவேண்டும். அவர்களுக்குக் கொடுக்க வேண்டிய உரிமையைக் கொடுக்கவில்லை என்று தானே பொருள்! என்னவோ பலருடைய வாழ்க்கை இப்படியே போகிறது. கண்ணிருந்தும் காணாதவனாகக் காதிருந்தும் கேட்காதவனாக இருக்கிறார்கள். எல்லாம் பொருள் செய்வகை.

"அன்புள்ளவரே! தகுதி படைத்தவர்க்கெலாம், இத்துன்பந்தான். உனக்கும் இருக்குமே! எனக்கிருந்த அவ்விலங்கு, தூளாகிவிட்டது. இப்பொழுது யான், உள்ளும் புறமும் ஒத்தவர்களோடு பழகுகிறேன். இங்கு எப்பொழுதும் சத்தியம் நிலவுகிறது. அன்பு கமழ்கிறது. பகை இல்லை.

"போகட்டும்; உன் நாடு நலமா? மழை பொழிகிறதா? ஆட்சி அமைதியாக நடைபெறுகிறதா? புலவர்கள் பாடுகிறார்களா? சிவபெருமானை வழிபடுபவர்கள், சுவாமிதான் என்று நினைந்து வழிபடுகிறார்களா? உன் நண்பர்களும் உறவினர்களும் நலமா? பழமை பாராட்டி வந்தாய். நன்றி. மிக்க மகிழ்ச்சி!" என்று, பலவாகப் பேசினான் துயுமத்சேனன்.

யாவரும் கேட்டு அதிசயித்தனர். அப்பா! பொருள், இத்தனை பயங்கரமானதா? என்று

தெளிந்தார்கள். வனத்திலுள்ளவர்கள், 'நகரத்தில் இப்படிக் கொடுமையானவர்கள் இருக்கிறார்களா! நல்ல காலம்! நாம் அங்கு வாழவில்லை' என்று நிம் மதியாக மூச்சு விட்டார்கள்.

அசுவபதி, துயுமத்சேனனை வணங்கினான். "தவமன்னரே! இறையருளால் யாவரும் நலம். நெடுநாட்களாக, எனக்குக் குழந்தை யில்லாதது உமக்குத் தெரியும். சாவித்திரி யாகம் செய்தேன். அத் தேவி யருளால் ஒரு பெண் மகவு பிறந்தது. அதன் பெயர் சூட்டுவிழாவிற்கு நீங்கள் வந்தீர்கள். சத்தியவான், ஆறியாண்டுக் குழந்தை. 'நம் பைய னுக்கு, இச் சிறுமியை முடித்துவிட வேண்டும். என்ன! நீர் நமக்குச் சம்பந்தி!' என்று பேசினீர்கள். கடவுள் கட்டளையால் தான் அப்படிப் பேசியிருக் கிறீர்கள். அதனை நிறைவேற்ற யான் வந்துளேன்.

என்னால் கொடுக்கப்படுகின்ற கன்னிகையைத் தர்ம சாஸ்திர முறைப்படி நீர், மருமகளாக ஏற்றுக் கொள்ள வேண்டும். என் விருப்பம் இதுவே. என் மனைவி மாளவி அதையே வற்புறுத்துகிறாள். சாவித் திரி, சத்தியவானையே மணந்து கொள்ளட்டும். பேசப்படுகின்ற இதனை நீங்கள் மறுக்கக் கூடாது. நம் சம்பந்தம் சிறந்து விளங்கட்டும்." என்று, பணிவும் இனிமையும் பயப்பக் கூறினான். மாளவி, சைப்யை யிடம் அதனையே வற்புறுத்தினாள். அங்குள்ளவ ரெலாம், ஆம், ஆம் என்று தலையாட்டினர்.

ஒருவரை யொருவர் மார்புறத் தழுவி
உவகையில் திளைத்தபின் பரசன்

மருவுறு குழலென் திருமகள் நினது
மைந்தனை வரித்தனள் அதனல்
தருவெனுங் கரத்தோய் கடிமண மியற்றித்
தருவதென் சிந்தையில் துணியா
ஒருவிநன் னகரிங் குற்றன னென்ருன்
உத்தர மற்றவ னுரைத்தான்.

தரு, யாவருக்குங் கொடுக்கும்; பெருது. கொடுத்துப் பழகிய உனக்கு யான் தருவேன். பெற்றுக் கொள். என்ற குறிப்புத் தோன்றத், தருவெனுங் கரத்தாய்! என்று விளித்தான்.

இன்னும் தருவுக்கு யாராவது எதையாவது தர வேண்டுமானல் அதன் வேரில் தான்-அடியில் தான் தரவேண்டும். எல்லோருக்கும், தழையும் நிழலும் மலரும் கனியுந் தந்து உபகாரியாக இருக்கிருய். அதனல் உன் அடியில், இதனைக் காணிக்கையாகத் தருகிறேன், என்று நீர் வார்ப்பார்கள். அது தான், அதன் குறிப்பு. அந்நீர், மரத்திற்காய் கிளைகளெலாம் பயன் பெற்று, உலகத்திற்கு உபகாரமாக மாறுகிறது.

அது போல், 'துயுமத்சேன! வேண்டாமையெய்தி, வனத்தில் இருந்தாலும் நீ உபகாரி; வள்ளல். முன் பொருளால் இருந்தாய். இப்பொழுது, அருளால் அளிக்கிருய். வாங்கி யறியாத நீ, கை நீட்ட வேண்டா. உன் அடியில், காணிக்கையாக என் மகளைத் தருகிறேன். அவளால், உன் குடி முழுவதும் பயன்பெறும். உன் கிளைஞர் நலம் பெறுவர். கற்பிற் சிறந்த அவளால், இவ்வவனிக்கே உப

காரம்! என்ற குறிப்பும் வெளிப்படத் தருவெனுங் கரத்தாய்! எனப்பட்டது.

திருமணச் செய்தி கேட்ட தோழிகளுக்குக் களிப்பு. ஒருவரை யொருவர் இடித்துக் கொண்டனர். கல கல வென்று நகைத்தனர். கைதட்டிச் சாவித்திரியைச் சீண்டினர். ஒருத்தி சாவித்திரியைத் தள்ளினுள். "உஸ்! சும்மாயிருங்கள். என்ன விளையாட்டு பெரியவர்கள் எதிரில்?" என்று உண்மையாகவே கோபித்தவளைப்போலச் சொன்னுள் சாவித்திரி.

துயுமத்சேனன் கேட்டான்; மனம் வருந்தினுன்; கண்ணீர் சிந்தினுன். சொற்கள் தடுமாறின. அசுவபதியின் கைகளைப் பற்றிக் கண்களில் ஒற்றிக் கொண்டான். குரல் தழுதழுத்தது. "அன்புடையவரே! என்ன பேச்சுப் பேசினீர்கள்! பாவியாகிய என்னிடமா இதைச் சொல்வது! நான் பாவியப்பா பாவி! என் போற் பெரும் பாவம் செய்தார், இப் பாரில் இல்லை. கண்ணிழந்தேன்; அரசிழந்தேன்; நகரிழந்தேன்; பெருமை குன்றினேன்; சிறுமை யுற்றேன்; ஒதுங்க இடமில்லாமல், காட்டைத் தஞ்சம் புகுந்தேன். திரு நீங்கிய என்னை மிடி பற்றிக்கொண்டது.

செல்வச் செழிப்பற்ற எனக்கு மகளைத் தருகிறேன், என்று மனமுவந்து சொன்னுயே! அதற்கு நான் கடமைப்பட்டவன். என் குடி முழுவதும் கடமைப் பட்டிருக்கிறது. நன்றி! பெரு நன்றி!

வேண்டா. அசுவபதி! வேண்டா. பட்டுடுத்த அப் பைங்கிளி, இப்பனியில் வந்து பரிதவிக்கவேண்டா. இங்கு நெய்யும் பருப்பும் ஏது? பஞ்சணை ஏது? பட்டு ஏது? மணிகள் ஏது? ஒளியுமிழும் விளக்குகள் ஏது? ஏவல் செய்யப் பணியாளர் ஏது? அசுவபதி! நான் செய்த வல்வினை போதாதா? சாவித்திரியைக் கான கத்தில் வறுத்தித் துன்புறுத்தும் தீவினை என்னைச் சேர வேண்டுமா? மாளிகையில் இருந்த அவள், இம் மண் தரையில் எப்படி இருப்பாள்! இது என்ன துன்பம்! சாவித்திரி, உண்டாளா? உறங்கினளா? உவகையா? உவர்ப்பா? என்று பார்க்கவே எனக் குச் சரியாக இருக்கும். யான் தவஞ் செய்பவன். எனக்கு ஏன் இத் துன்பம்!

அவள் சிறுமி. ஆயிரமாயிரம் கற்பனைகள் இருக்கும். அந்த இளம் உள்ளத்தின் ஆசைகளைக் கெடுக்கக் கூடாது. அவள் விரும்பியதைத் தர இயலுமா? விரும்பியதைத் தர இயலாத கணவனை எந்தப் பெண்மணிதான் விரும்புவாள். அவன் கரும்பாகவா இருப்பான்? இரும்பாக இருப்பான். சத்தியவான் தவத்தையே தனமாகக் கொண்டவன். மனைவியால் உதாசீனப் படுத்தப்படும்போது மென் மையான அவன் உள்ளம், உடைந்து சிதறும். பாவம்! தன் காதலி வேண்டியதைத் தர இயல வில்லையே என்று வருந்துவான். அதற்குக் காரணம் யார்? யான் தானே என்று எங்களைப் பழிப்பான். இது ஏன்? அமைதியாகச் சென்று கொண்டிருக்கும் எங்கள் வாழக்கை, இப்படியே போகட்டும். இதில் துன்பமில்லை. மாறுக, இன்பத்தில் திளைக்கிறோம்.

அசுவபதி! நீ பழமையான அன்புடையவன். நட்புக்கு இனியவன். மாறுத அவ்வன்பினுற் பேசினுய். நீ எப்பொழுதுமே, பொருளை விரும்புவதில்லை. பொருளைப் பொருளாக மதிப்பதில்லை. சிறியரே மதிக்கும் இச் செல்வம் என்பாய். உன் குணம் உயர்ந்தது. பெருந் தன்மையுள்ளவன் நீ. உனக்குத் தெரியாது. பொருட் செல்வத்தின் பிடிப்பு பயங்கரமானது. அதன் பிடிப்பில் சிக்கியவர்கள் தப்ப இயலாது.

நண்பரே! இப்பொருள்தான், கணவனுக்கும், மனைவிக்கும் பூசலை உண்டுபண்ணுவது. காதலித்துத் திருமணஞ் செய்து கொண்டவர்கள், கல்லலில் நிற்பார்கள். பொருள் கருத்தை மாற்றும். அவமானம், பொய், பேராசை இவைகளைச் சேர்ப்பது பொருள்தான். யார் ஒருவர் பொருளை இழக்கின்றுர்களோ அவர்கள், கவலைக் கடலில் வீழ்கின்றுர்கள். ஒழுக்கம், நன்மை, பக்தி, இவைகளை எரிக்கும் தீ, பொருள்தான். அசுவபதி! கொடிய எவற்றினுங் கொடியது பொருள்தான். பொருளுடையாரைப் போற்றி மகிழ்வர். பொருளிலாரைத் தூற்றி யிகழ்வர்.

பொருளற்ற நான், அவமதிப்பிற் குரியவன். எனக்கு நண்பர்களில்லை. பொருளைத் தேடமுடியாத எனக்குச் சுற்றமில்லை. பொருளில்லாத எனக்குப் புகழில்லை. துன்பத்திற்கே உடையவனுகிய என்னிடம் நீ இப்படிப் பேசலாமா?

செல்வமில்லாத கணவனை மனைவியும் மதிப்ப தில்லை. தாய் வெறுப்பாள். அவனிடம் பக்தியிருக் கிறதா! அது ஏன்! செல்வம்தான் வேண்டும். பிதா இகழ்வர். சுற்றம் அவனைச் சுற்ருது. சபையில் அவனுக்கு இடமில்லை. பந்தியில் இடமில்லை. திருக் கோயிலிலும் அவன் ஒதுக்கப்படுகிருன். பொருளற்ற வன் பொது இடங்களுக்குப் போகக் கூடாது. அவன், தன் கருத்தையே சொல்லக் கூடாது. அவனுக் கென்று ஒரு விருப்பமும் இருக்கக் கூடாது.

“மத்ராதிபதி! அறிவும் கல்வியும் எடுபடாது. எத்தனைப் புலவர்கள் பொருளில்லாமையால் தம் புல மையை வெளிப்படுத்த முடியாமல் இருக்கிருர்கள். புலவர்களுக்கும் பொருளிருக்கவேண்டும். அப் பொழுதுதான் அவர்களைப் பாராட்டுவார்கள். அரச வையில் முதலிடம். கடகம், மோதிரம், வாகுவலயம், முத்தாரம், பீதாம்பரம் இருந்தால் “வருக” என்பார் கள். இன்றேல், விரட்டுவார்கள். பல்லக்கும் அத னைச் சுமக்கின்றவர்களும் இருக்கவேண்டும். இன் றேல் அப் புலவனை யார் மதிப்பார்கள். எங்கோ ஒரு கற்றவர் அன்பு பாராட்டுவார். பயன்? வாழ முடி யாதே!

உடன் பிறந்தவர்களானுலும் பொருளில்லை யானுல் உயர்வு இல்லை. பொருளற்ற சகோதரனை யார் விரும்புகிருர்கள்? தன் சகோதரன் என்றே சொல்லமாட்டார்கள். உபகாரமும் செய்ய மாட்டார் கள். மாருக அபகாரமே செய்வார்கள். உபசரிக் கின்றவர்களையும் தடுத்துவிடுவார்கள். அந்தச்

சகோதரனைத் தூற்றுவதே தொழில். ஒன்று, லோபி, என்பார்கள்; அல்லது ஊதாரி என்பார்கள். உண்பதும் அதிகமே என்பார்கள். பொருள் இருந்தால் என் சகோதரனைப் போல் யார்? அவன் அறிவுச் செல்வம். கலைக் கடல். எனக்கு அப்பொழுதே தெரியும், அவன் சிறந்த அறிவாளி என்று—என்பார்கள். பொருள் தேடாத ஒருவனை உம் சுத்த சோம்பேறி. உதவாக்கரை. என்று தூற்றுவார்கள்.

துன்னியார் குற்றமுந் தூற்றும் மரபினார்
என்னைகொல் ஏதிலார் மாட்டு.

எவன் பொருளை யடைந்திருக்கவில்லையோ அவன் ஆராய்ந்த சொற்களைச் சொன்னால் யார் கேட்பார்கள்? 'பெரிய அறிவாளிதான்'-என்று பழிப்பார்கள்.

நற்பொருள் நன்குணர்ந்து சொல்லினும் நல்கூர்ந்தார்
சொற்பொருள் சோர்வுபடும்.

அன்பரே! உலக இயல்பு, பொருளில்லாதவனை இகழ்வது. பொருளுடையானைப் புகழ்வது.

இல்லாரை எல்லாரும் எள்ளுவர் செல்வரை
எல்லாரும் செய்வர் சிறப்பு.

குடிகேடனையும் புகழ்வார்கள். ஏன்? பொருளிருக்கிறது. யோக்கியனாக இருந்தால்மட்டும் போதாது. செல்வமும் இருக்க வேண்டும். கற்றவனாக இருந்தால் காணாது. கை நிறையப் பொருள் வேண்டும். கொடைக் குணம் இருந்தால் சாலாது. குன்றன்ன செல்வம் தேவை.

பொருள் நனிஉளனென்றி யாரும்
புகலுமோர் வார்த்தை வேண்டும்
இருகையுங் கடகம் வேண்டும்
இலங்கு குண்டலங்கள் வேண்டும்
வருவிர லாழிவேண்டும் மார்பிசை
மதாணி வேண்டும்
உருவ முத்தாரம் வேண்டும்
உயர்ந்த பட்டாடை வேண்டும்.
சிவிகை முன்னூர்தி வேண்டும்
செழும்பொருட் செலவு வேண்டும்
குவிகை ஏவலரும் வேண்டும்
கோலமார்ந் திருக்க வேண்டும்
கவிகை தாங்குநரும் வேண்டும்
கையுறை சிறப்பு வேண்டும்
அவிகையில் விளக்கம் வேண்டும்
அரசவை குறுகு வோர்க்கே.

—மகா வித்வான் மீனாட்சி சுந்தரம் பிள்ளை.

அசுவபதி! இவைகளில் என்னிடம் என்ன இருக்கின்றன? என்னை யார் மதிப்பார்கள்? கற்றோரும் இப்பொருளுக் கடிமையாகி மதி மயங்குகிறார்களே என்பதுதான் என் வருத்தம்; என்னைப் பார்; நன்றாகப் பார். அங்க ஈனன். மருமகள் மதிப்பாளா? விழியில்லாத மாமனாரை யடைந்தாள்-என்று பிறர் அவளை நையாண்டி செய்யமாட்டார்களா! அது அவளுக்கு மனக்குறையாக இருக்காதா! உடலிருந்தும் வலுவிருந்தும்தகுதியிருந்தும் பொருள்தேடாமல், எவன் சகோதரர்கள் உழைப்பில் உண்டு கொழுக்கிறானோ அவன் புகழ் இருண்டதைப் போல் என் கண்கள் இருண்டன. வாழ்வு இருண்டது. உன் ஒப்புரவுக்கு நன்றி. மறுக்கிறேன் என்று எண்ணாதே. கானகத்தின் துன்பம் சாவித்திரிக்குப் பழக்கமில்லை. அவள் அதனைத் துய்க்கப் பிறந்தவளல்ல. நான்

மனமாரச் சொல்கிறேன்; வேண்டா. என் மகளானல், காட்டில் தருவேனு? அசுவபதி! நன்ருகச் சிந்தி. இளமை நலம் மிக்க அக் குழந்தையை ஏன் வருத்த வேண்டும்? ஆகவே, நீ வேறு அரசிளங் குமரனுக்கு அவளை மணமுடி'' என்று துயருடன் கூறினுன்.

துயுமத்சேனனின் சொற்களைக் கேட்ட அச் சபையில் பலர் கண்ணீர் விட்டனர். சிலர் தலை யசைத்தனர். முனிவர்கள் மெல்லெனச்சிரித்தார்கள். முனிபத்தினிகள், நகரப் பெண்மணிகளைப் பார்த் தார்கள். அவர்களுக்கு வெட்கமாக இருந்தது. சத்தியவான், தன் தந்தை கூறியன முற்றும் உண்மையே என எண்ணினுன். சாவித்திரி, எங்கே தன் திருமணம் நின்று விடுமோ என்று அஞ்சினுள். இறைவனை வேண்டினுள்.

அப்பொழுது நாரத பகவான் அங்கு வந்தார். யாவரும் எழுந்து வணங்கினர். எல்லோருக்கும் வாழ்த்து வழங்கினுர். அவர் ஆணைக்குப் பின், யாவரும் அமர்ந்தார்கள். ''உம். என்ன? சாவித்திரி திருமணமா? நல்லது. ஏன் தயக்கம்? துயுமத்சேனு! நடக்க வேண்டியதுதானே ?'' என்று வினுவினுர்.

அசுவபதி, நாரதரைத் தொழுது, துயுமத் சேனரை நோக்கி, ''துயுமத்சேனரே! பொருள் கண்டு உகப்பவர்கள் யானும், என் பெண்ணும் அல்ல. பொருளுக்கு எங்கள் புத்தியை அடிமை யாக்கவில்லை. எங்களுக்குப் பொருள்தேவையுமில்லை.

நீங்கள் காட்டிலிருக்கிறீர்கள்; உங்களுக்கு அரசில்லை; விழியில்லாதவர் என்று எல்லாந் தெரிந்தபின்தான், இந்த ஏற்பாட்டுடன் வந்தோம். உண்டாவனவும், அழிவனவுமான, இன்ப துன்பங்களைச் சாவித்திரி அறிந்திருக்கிருள். நல்ல உறுதியுடன்தான் இங்கு வந்திருக்கிருள். சுயமாகவே சத்தியவானைக் கணவனுக வரித்திருக்கிருள். கற்புக்கரசியாம் அவள், இனி, வேருெருவனை மணக்கமாட்டாள். சத்தியவான் மனைவியாகிய சாவித்திரியைத்தான் அழைத்து வந்துளேன். ஏற்றுக்கொள்ளும். அவள் என் மகளாக வரவில்லை. நல்ல நட்பினுலும், அன்பினுலும் வந்திருக்கிற என்னைப் புறக்கணிக்காதீர். இது தெய்வங்களினுல், ஏற்றுக்கொள்ளப்பட்ட ஒன்று. ஆகவே ஆணையிடும். திருமணம், நாரதப் பெருமான் முன்னிலையில் நடைபெறட்டும். அதற்கு வேண்டிய மங்கலப் பொருள்கள், தயாராக இருக்கின்றன'' என்று வேண்டிஞன்.

துயுமத்சேனனை நாரதர் பார்த்து, "தவக்குன்றே! மயங்காதே. விவாகங்கள், முன்னமேயே நிச்சயிக்கப் படுகின்றன. தடைப்படுத்த நமக்கு அதிகாரமில்லை. சாவித்திரி சற்குணவதி. கற்பின் பொற்பு. பொறுமைக்கணி. அன்பின் பெட்டகம். அழகுக் குவியல். பாக்கியம் மிக்கவள். அவள் பார்வை சென்ற இடம் தழைக்கும். அவள் நின்ற இடம் செழிக்கும். சாவித்திரி உனக்கு மருமகளாக வருவது உன் தவமே. அதிசயமான கற்பையுடைய அவள், கொழுநனைக் கடவுளாக எண்ணுகிறவள். கிடைத்ததைக் கொண்டு உவப்பவள். தனக்கென்று ஒன்றுந்

தேவையில்லாதவள். சத்தியவானுக்கு ஏற்றவள். ஆகவே, திருமணம் நடக்கட்டும்'' என்ருர்.

துயுமத்சேனனுக்கு மகிழ்வால் கண், நீர் பெருக்கியது. மாளவியும் சைப்யையும் மகிழ்ந்தனர். சத்தியவானும் சாவித்திரியும் பார்த்துக் கொண்டனர். ''அசுவபதி! உன் விருப்பம் இது; நிறைவேறட்டும். கானகத்தில் உள்ள என்னைக் கவுரவித்து, இத்தனைச் சிறப்புக்களைச் செய்த உனக்கு இறைவன் திருவருள் செய்க. மகளின் விருப்பத்தை மாற்ருமலும், தடுக்காமலும், அருவருப்பில்லாமலும், மகிழ்வுடன் நிறைவேற்றுந் தந்தை, உன்னைவிட யாரிருக்கிருர்கள். விரைவாக இத் திருமணம் நடைபெறட்டும்'' என்று துயுமத்சேனர் மொழிந்தார்.

சத்தியவானையும், சாவித்திரியையும், மங்கல நீராட்டினர். புத்துடை கொடுத்தார்கள். மலர்மாலை அணிவித்தார்கள். மணக்கோலம் புதுக்கினுர்கள். விரைவாகச் செய்த மணவறையில், அமரவைத்தனர். பௌரோகிதர் மந்திரங்களை ஓதினுர். தீ வளர்த்தார்கள்; பொரியிட்டனர். நாரதர் வாழ்த்துரை வழங்க, மங்கல வாத்தியங்கள் முழங்க, அந்தணர்களும், முனிவர்களும், வேத மந்திரங்களைச் சொல்லி வாழ்த்த, யாவரும், மஞ்சளரிசியைப் பெய்ய, சாவித்திரியின் மலர்க்கரங்களை, அசுவபதி கொடுக்கச் சத்தியவான் பற்றினுன். திருமணம் இனிது நிறைவேறிற்று. யாவரும் மகிழ்ந்தனர். இனிய விருந்துண்டனர். பாணர்கள் பாடினுர்கள். நங்கையர் ஆடினர்.

பன்னரு மியற்கை அச்சுவப் பதியும்
பாரொரு அரசனு மறையோர்
சொன்னநற் றினத்தில் சத்தியவானுந்
தொடுகழற் காளையோ டரிய
பொன்னனையாளை யோர்தவிசிருத்திப்
பொருவறு முனிவரர் மறைகள்
பன்னுநன்முறையே திருமண முடிப்பப்
பகரருங் களிசிறந் தனரால்.

காளை-சத்தியவான். எசமானனுல், பூட்டப் பெற்ற வண்டியோடு மகிழ்ச்சியாகக் காளை, சாலையில் சென்றுகொண்டிருக்கும். தனக்கென்று சுதாவாக, உரிமையை வைத்துக் கொள்ளாமல், வண்டி தன்னைக் காளையிடம் ஒப்புவித்து, அது இழுத்த இழுப்புக்கெல்லாம் உடன் சென்றது. எசமான் வந்து அவிழ்த்ததும் அத்தகைய வண்டியைத் தனியாக விட்டுத் திரும்பியும் பாராமல் காளை செல்லும். அது போல் முற்றுந் தன்னைத் தன்னிடம் ஒப்புவித்த சாவித்திரியை எசமானுகிய இயமன் வந்த போது, விடுத்துச் செல்லப் போகிருன் என்பது தோன்ற தொடுகழற் காளை-எனப்பட்டது.

பொன்னனையாள்-சாவித்திரி. பொன், உலோகங்களில் சிறந்தது. சாவித்திரி, பெண்களில் சிறந்தவள். மாற்றறியாத செழும் பசும் பொன். தீய குணங்கள் கலக்காத தூய்மையுடையவள் சாவித்திரி. தங்குவது தங்கம். எல்லாப் பொருள்களும், இரசத்தில் கரையும். தங்கம் கரையாது. துன்பம் வந்தபோது திண்மையில்லாதவர், நெறி பிறழ்வர். சாவித்திரி அசைக்க முடியாத கற்புநலங் கொண்ட

வள். பொன், தட்டி, ராவி, இழுத்து அடித்தாலும், அணிகலனுகி ஒளி தந்து பிறர்க்கு அழகைத் தரும். சாவித்திரி-துன்பம் அடுக்கி வந்த போதும் கற் பொளியுடன் இவ்வுலகுக்கே நன்மைதரப்போகிற வள். அதனுல், 'பொன்னனையாள்' எனப்பட்டது.

நூல் வாங்கிடாது............நோக்கு நெஞ்சே.

நகரங்களில் மனிதர்களுக்குக் கற்பிக்க ஆசிரி யர்கள் இருக்கிருர்கள். பாவம்! கானகத்தில் யார்? அதுவும் விலங்கினங்கட்கு யார் சொல்லித் தருபவர்? மயில்கட்கு முறையான நடம் பயில வேண்டும் என்று வெகு நாட்களாக அவா! என் செய்வது? யாரிடம் பயில்வது? சாவித்திரி வந்த பின் அக் குறை நீங்கியது. சாவித்திரி நடப்பதைப் பார்த்தே, மயில்கள் நடனங் கற்றுக்கொண்டன. சாவித்திரி நடன ஆசிரியர் பணியை ஏற்றுக்கொண்டாள். தவச் சாலேயே நடனச் சாலே.

ஏதோ வாய்க்கு வந்ததைப் பேசிக் கூச்சலிட்டுக் கொண்டிருந்த கிள்ளேகள் மொழிகளேச் சாவித்திரி யிடமிருந்து கற்றுக்கொண்டன. மென்மையாகவும், சிறிய சிறிய சொற்களாகவும், அவள் பேசுகின்ற பேச்சை உற்றுக் கவனித்து அவைகள் மொழிபயின் றன. சாவித்திரிக்குத் தெரியாமலேயே அவள் மொழியாசிரியை யானுள்.

வழிபாட்டு நேரத்தில், சாவித்திரி பக்திப் பாடல்களேப் பாடுவாள். மாமன் கட்டளேயிட்ட போதும், இரவு காலங்களிலும் இனிமையாகப் பாடு

வாள். முனிவர்கள் பெரும் பாலும் கூடி, அறிவுரை களைப் பேசுவார்கள். அப்பொழுது இறைவனைப் பற்றிய பாடல்களை மாமன் ஆணையால் சாவித்திரி பாடுவாள். அந்த இனிய இசை, வனம் பெருக் கெடுத்தோடும். மரஞ் செடி கொடிகளெல்லாந் தழைக்கும். அவ்வின்னிசையைக் கேட்ட குயில்கள், ஆகா! நமக்குக் கற்றுத்தரவே இவ்வம்மை காட டைந்தார் போலும் என்று அவளிடம் இசை கற்றன. முறையான இசைக்கு அவைகள் எங்கு போவது? இசையாசிரியையாகவும், சாவித்திரி பணிபுரிந்தாள்.

பெரியவர்களுக்கு முன்னேயும், மாமன், மாமி இவர்களுக்கு முன்னேயும் சாவித்திரி உட்கார மாட்டாள். †நின்று கொண்டே யிருப்பாள். முனிவர் கள் எத்தனை வற்புறுத்தினுலும் அமர மாட்டாள். "அம்மா! நீ என்ன எங்கள் குழந்தைதானே? சின் னஞ் சிறியவளாகிய நீ ஏன் நிற்கிருய்? எங்கள் மனம் மகிழ நீ உட்கார். நாங்கள் அருவருப்பு கொள்ள மாட்டோம். நீ நிற்பது எங்களுக்கு வருத் தத்தைத் தருகிறது." என்று எத்தனை சொன்னு லும் உட்கார மாட்டாள்.

"இருக்கட்டும் அதனுலென்ன? சற்று நிற்பதால் கால் கடுக்காது. பெரியவர்களிடம் நின்ருல், இய மனிடம் நிற்க வேண்டிய வேலையிராது. அவரவர்கள்

---

†அல்லும் பகலும் நின்றுகொண்டே யிருப்பவளான சாவித்திரி—என்று மூலத்தில் வருகிறது.

பொன்னுக்கும், பொருளுக்கும் யார் யாரிடமோ வெல்லாம் நிற்கிருர்களே? நான் மகான்களிடம் நின்ருல் என்ன பிழை? தருக்கள் நின்று கொண்டேயிருக்கின்றனவே? நடராஜப் பெருமான் ஒரு காலில் நிற்கிருரே? நான் இரு காலிலுந்தானே நிற்கிறேன்? இருக்கட்டும்; எனக்கு வருத்தமில்லை.'' என்று இனிமையாகவும் நயமாகவும் சொல்லிவிடுவாள்.

நின்று பழகியவள் சாவித்திரி. உணவு உண்ணும் பொழுதும், வழிபடும்போதும் பெரியவர்கள் இல்லாத போதும் கானகத்திற் புதிதாகக் கிடைத்த தோழிகளோடும் உட்காருவாள். மறந்தும் சான்ருேர்களுக்கு முன் அமரமாட்டாள். நாரைகள் இதனைப் பார்த்தன. நிற்கக் கற்கலாம், என்று நின்று பார்த்தன. உம்! முடியவில்லை. சாவித்திரியைப் போல் நெடுநேரம் நிற்க முடியவில்லை. பாவம்! கால்கள் தொய்ந்துவிட்டன. பணிவுக்கு ஆசிரியர் சாவித்திரியைத் தவிர யார்?

இப்பொழுதும் மிகுதியான மாறுதலில்லை. இவர்களும் நிற்கிருர்கள். நாடகச் சாலைகளிலும், காட்சிச் சாலைகளிலும் அரைப் பொழுது, முக்கால் பொழுது நிற்கிருர்களே? சாவித்திரியால் முடியுமா? பெரியவர்கள் முன் இவர்கள் நிற்காவிட்டால் என்ன? பெரியவர்களை நிற்க வைக்கிருர்களே? கணவனையும் மாமன் மாமியையும், இவர்கள் நிற்கவைக்கும் அழகே தனிதான். உட்கார்ந்து பழகியவர்கள் இவர்கள். யார் தான் வரட்டுமே? உம்! அசைவார்களா? ஆகா! அதியற்புதமான பெண்கள்.

காற்றுக்குக் கூடச் சாவித்திரியால் துன்பமில்லை. விரதத்தாலும், நியமங்களாலும், தவத்தாலும் மெருகு ஏறிய சாவித்திரியின் உடலில் உராய்ந்து உராய்ந்து காற்றானது பல நற் குணங்களைக் கற்றது. மிருதுத் தன்மையைக் கற்றது. மென்மைக்கும், குணங்கட்கும் கல்லூரியேது? அது சாவித்திரிதான். "அம்மா! என்னை ஆடவனென்று எண்ணாதே, தேவி! நான் உன் சகோதரன். உன் புகழையும், அழகையும் நான்தான் திசை யெங்கும் பரப்பினேன். சத்திய வானுக்கு நான் உன்னைப்பற்றிச் சொல்லியிருக்கிறேன்" என்று சொல்வது போல் காதில் மென்மையாக அலையும். "வேற்று ஆடவன் நம் உடலைத் தீண்டுகிறானே, என்று என்னை எரித்துவிடாதே." என்று திருவடிகளில் காற்று சூழ்ந்து வரும்.

"தாயே! நம் தந்தை சிவபெருமானால் பட்ட உதையை அவன் மறந்துவிட்டான். என் துணையை விரும்பி அடிக்கடிக் கேட்கிறான். என் மேற் பிழையில்லை. என்னை மன்னித்துவிடு. அவன் மிகப் பொல்லாதவன். தண்டக்காரன்; எருமை மாட்டான்; அதனோடு பழகிய அவனுக்குஅதன்புத்திதான் இருக்கும். பத்தினிப் பெண்கள் சாபத்திற்கு ஆளாகாதே என்று சொன்னேன்; கேட்கவில்லை. †என்னை முன்னிட்டுத் தான் தங்கள் காதலர் உயிரைக் கவரப் போகிறானும். அவன் தங்களால் அவமானப் படப்போகிறான். படட்டும். இயமன் பற்றிய உயிரை விட்டு விட்டான் என்ற பழிச்சொல் சிவநாமம் உள்ளவரை நிற்கப்

---

†பிராணவாயு.

போகிறது. கல்யாணி! என்மேற்பிழையில்லை'' என்று கொஞ்சுவது போல் சாவித்திரியின் இரண்டு காது ஓரங்களில் உள்ள குழல்களை மெல்லியதாகக் கலைக் கும். அப்படிக் கலைந்த குழல்களைச் சாவித்திரி சரி செய்யக் கைகளால் தள்ளுவாள். அது காற்றுக்கு அஞ்சாதே என்று அபயமளிப்பதைப் போலிருக்கும்.

சாவித்திரியின் கைகளுக்குக் கட்டுப்படாமல், விளையாட்டுப் பிள்ளைபோல் பறக்குங் கூந்தலை உற் றுப் பார்ப்பான் சத்தியவான். ''என்ன அப்படிப் பார்க்கிறீர்கள்?'' என்று கேட்பாள் சாவித்திரி. ''சாவித்திரி! இந்தக் குழலுக்கு எத்தனை அட்ட காசம்? நீ அடக்கியும் அடங்காமல் அலைகிறதே? உம். அதனைத் தண்டிக்க வேண்டும்.'' என்பான். 'எப்படித் தண்டிப்பீர்கள்?' என்றால், ''தேவி! உன் மென்மையான கரங்களுக்கு அது அடங்காது. என் னிடம் விடு. என் முரட்டுக் கரங்களால் அதைப் பிடித்து அடக்கிப் படியவைக்கிறேன்.'' என்பான். ''உம்? ஆசைதான். அந்த வேலையை உங்கட்குத் தருவேனா?'' என்று ஓடிவிடுவாள்.

செடி கொடிகளுக்குக்கூடச் சாவித்திரியால் துன்பமில்லை. அவள் கால் பட்டு முள் வளையாதே? சிலர் கால் பட்டுக் கல் தூளாகின்றதே! நடந்தால், பூமி யதிர்கின்றதே! சாவித்திரி நடந்தால் பூமி மகிழ்வாள். அத்தனை மென்மை. விலங்கினங்கட்குக் கூடத் துன்பமில்லை சாவித்திரியால். எந்த ஒரு பொருளுக்கும், எந்த ஒரு உயிருக்கும், சாவித்திரி யால் சிறு துன்பமும் உண்டாகவில்லை. மனவருத் தங்கூடக் கிடையாது. மாறாக மகிழ்ச்சிதான்.

ஆனுல், ஒரு உயிர்க்கு மட்டும் அளவிறந்த துன்பம். மனத்தாங்கல் அதிகம். "ஐயோ! எல்லோரும் இவளிடம் என்னென்னவோ கற்றுக் கொள்கிருர்கள்'. நமக்கு இவள் ஒன்றுங் கற்றுத் தரவில்லையே? இவளுக்கு நம் பாஷை தெரியாதா? உலகப் பெண்மணிகளை இவள் பார்த்ததில்லையா?" என்று ஏங்கிப் பெரு மூச்சுவிடும் கூளிகள். தங்களைப் போல், கத்தவில்லையே-என்று அவைகட்குக் குறை. சாவித்திரி பேசினுல் அதில் சுரங்கள் இழைந்து பொழியும்; கனிச்சாறு வடியும்; தமிழைப்போல் இனிமையாகப் பேசுபவள் அவள். அவள் எங்கிருந்து கத்துவது?

கணவன் சன்னமாக அழைப்பான். இவள் வீடே அதிரும்படி'ஏன்'—என்று சத்தம் போடுவாள். சில குழந்தைகள் பிறக்கும்போதே செவிடாகப்பிறக் கின்றன அல்லவா? அது,இவர்கள் சத்தத்தால்தான். சில வயதானவர்களுக்குக் கண் தெரியாது. கோயில் களில் வெடி வெடிப்பார்கள். 'தாத்தா! வெடி கேட் டாயா? கோயிலில் திருவிழா.' என்று பேரப்பிள்ளை சொன்னுல், 'வெடியாடா அது? அடாடா! நான் உங்கம்மா பேசினுள் என்று நினைத்தேனே?' என் பார்கள். சில இரவுகளில் வானத்திலிருந்து, எரி கட்கள் உதிரும். அது, இவர்கள் பேசும் சத்தத்தால் தான். புண்ணியவதிகள்!

கூளிகளுக்குத்தான் குறையாகப் போய் விட்டது. சத்தமாகக் கத்துவது எப்படி? என்று சாவித்திரி கற்றுத் தரவில்லையே? என்று வருந்தின.

வெகு கூளிகள் நகரங்களுக்கு வந்துவிட்டன. இங்கே நிறைந்த ஆசிரியர்கள் இருக்கிருர்கள் என்று மகிழ்ச்சி. பல பெண்களுக்குப் பெருமை "உம் என்ன சாவித்திரி, சாதாரணப் பெண்ணுக்குத் தெரிந்தது கூட உனக்குத் தெரியவில்லையே? இவள் என்ன காவிய நாயகி? கத்தி பேசத் தெரியா தவள்?" என்று பெருமைப்பட்டார்களாம்.

ஒரு பெண் தேவதைக்குச் சாவித்திரியிடம் பகை. அவள் வந்தபின் இவள் ஓடியே போய்விட்டாள். சே! எனக்கு இருக்க இடம் இல்லாமற் செய்தவள். இவள் இருக்கும் திசைக்கே வரக்கூடாதென்று போய் விட்டது அத்தேவதை. திருமாலுக்கும் கொஞ்சம் மனவருத்தந்தான். என்ன இருந்தாலும் கொழுந்தி யல்லவா ? மூத்தவளான அவளை விரட்டிவிட்ட சாவித்திரியிடம் எப்படி அன்பிருக்கும்? சாவித்திரி யிடம் பகை கொண்டவள் தூக்க நாயகி ஒருத்தி தான். நல்லவர்களுக்குப் பகை இருக்கவேண்டு மல்லவா ? அதற்காக.

தூக்க அழகி-என்றே சிலர் பட்டப்பெயர் வாங்கு கிருர்கள். தூக்கம், தூக்கம், தூக்கம். காலை பத்து நாழிகைக்கு எழுந்து விடுவார்கள். மாலை இரண்டு நாழிகைக்குத்தான் படுப்பார்கள். பாவம்! பகலில் எட்டு நாழிகைதான் தூங்குவார்கள். என்ன செய் வது? மூதேவிக்குப் பிரியமானவர்களும் இருக்க வேண்டுமல்லவா ?

அரண்மனையில் ஆயிரம் தோழிகள் இருந்தார் கள். இங்கு மாணவர்களாக மயில்களும், குயில்களும்,

கிள்ளைகளும் எப்பொழுதும் சூழ்ந்து உடன்வரும்' புறவினங்கள் பக்கங்களில் பறந்து வரும். மான்கள் இவளைப் பார்த்துக்கொண்டே ஓடிவரும். இந்தக் கலாசாலைத் தேர்வில் தோல்வியுற்றது ஒன்றுதான். சாவித்திரிபோல் நடக்கத் தெரியாமல் தோல்வியுற்றதுஅன்னம். அதுதான் எல்லோருக்கும் பின்னே வரும். சாவித்திரி வந்தபின் கானகம் வானகமாக மாறிற்று. அடுத்த காடுகளில் இருந்த முனிவர்களும் இங்கு வந்துவிட்டார்கள். எங்கும் மகிழ்ச்சி.

யாறுகள் மெல்லென ஓடும். ஆசிரியர்க்கு முன் செல்லும் மாணவனைப்போல் விடிய நான்கு நாழிகைக்கு, எழுந்து அந்தக்குளிர்ந்த நீரில் மூழ்குவாள். மாற்றுடைகளை அணிந்து தன் வழிபாடுகளை முடித்துக்கொள்வாள். விடிவதற்குமுன்னே நறுமலர் பறித்துத்தொடுத்து வைப்பாள். அறுகு திருத்தி வைப்பாள். வில்வம் எடுத்து வைப்பாள். மஞ்சள் பூசித் திருநீறுங் குங்குமமுந் தரித்த சாவித்திரியைக் கண்டு நல்ல சகுனம் என்று கதிரவன் தோன்றுவான்.

மாமன், மாமி திருவடிகளில் வந்து நின்று கைகளைக் கூப்பி. சிவா! சிவா! என்று சிவநாமங்களை மெதுவாகச் சொல்லுவாள். சிவப்பெயரைக் கேட்ட வண்ணம் எழுந்த அவர்களுக்குக் காட்சியாக நிற்பாள் சாவித்திரி. மீனுட்சியோ என்று கும்பிடக் கையெடுத்து விடுவார்கள்.

மாமனுரைக் கைகளைப்பற்றி யாற்றிற் கொண்டு போய் நீராடச்செய்வாள். மாமி, கணவன், மாமன் உடுத்திய உடைகளை ஒலிப்பாள். இதில்தான்

சாவித்திரி கணவனை மீறிவிட்டாள். கணவனை மிஞ்சிய பத்தினியவள்! சத்தியவானுக்கும் சாவித்திரிக்கும் போட்டிதான் இதில். தாய் தந்தையர்க்குத் தானே பணிவிடை செய்வேன் என்பான். என் கணவனை யான் கவனித்துக்கொள்வேன் என்பாள் சைப்யை. கூடாது. யான் மூவர்க்குங் குற்றேவல் செய்வேன் என்பாள் சாவித்திரி. துயுமத்சேனனுக்கு அளவிறந்த மகிழ்ச்சி. "சைப்யை! யான் இப்பொழுது சிவபெருமானாகிவிட்டேன். சிவபெருமானுக்கும் மூன்று கண்கள். எனக்கும் நீங்கள் மூன்று கண்களாக இருக்கிறீர்கள். எனக்குப்போய் இருகண் இல்லை என்கிறார்களே?" என்பான். தோய்த்து உலர்த்திய உடைகளைத் தருவாள் சாவித்திரி.

வழிபாடு செய்யும்போது உடனிருப்பாள். சந்தனமிழைத்துத் தருவாள். தேவைகளைக் குறிப்பறிந்து தருவாள். வழிபாடு முடிவதற்குள் கனிகளையும், பாலையுஞ் சித்தஞ் செய்வாள். வழிபாடு முடிந்து வந்ததும் அவர்களை வணங்கி வாழ்த்துப்பெறுவாள். இனிமையாகக் கனிகளைத் தருவாள். கணவன் விறகும் சமித்தும் கொணரக் கானகம் புறப்படுவான். அதற்குள் அவனுக்குத் தேவையானதைச் செய்து முடிப்பாள். இனிய முகத்தோடு விடை கொடுப்பாள்.

எப்பொழுதும் இனிமையாகவே பேசுவாள். கடுகடுப்பு அவள் முகத்தில் இல்லை. கோபமே வராது. மலர்ந்த முகம். புன்னகை இழையோடும் இதழ்கள். கருணை ததும்பும் கண்கள். தூய்மையாக இருப்பாள். மெதுவாகத்தான் பேசுவாள். படபடப்பில்லை.

எல்லா வேலைகளையுந் தானே செய்வாள். தன் கை யால் சமையல் செய்வாள். செய்த சமையலை ஆறிப் போவதற்குமுன் படைப்பாள்.

மாமிக்கு ஒரு வேலையும் வைக்கமாட்டாள். சொல்லிச் செய்யமாட்டாள். அவர்கள் நினைத்ததைச் செய்து முடிப்பாள். உணவு பரிமாறும்போது அருகி லிருந்து, இனிமையாகப் படைப்பாள். உணவு வட் டித்துவிட்டு, வெளியே வந்து, அடுத்தவர்களுடன் பேசுவதோ,வேடிக்கைபார்ப்பதோ கிடையாது. தாய் போல் ஊட்டுவாள். சமையல் செய்யும்போதும் படைக்கும்போதும் சிவநாமங்களைச் சொல்லிக் கொண்டே இருப்பாள்.

தன் கையால் படுக்கை விரிப்பாள்; கால்களை மெல்லப் பிடிப்பாள். இப்பொழுது கால்களைப்பிடிக்க வேண்டா. கழுத்தைப்.... போதாதா? உம். அதற் கெல்லாம் ஆசைப்படக்கூடாது—அவர்கள் உறங் கியபின் உறங்குவாள்; எழுவதற்குமுன் எழுவாள். விருந்தினர்களை அன்போடு எதிர்கொள்வாள். ‘மறு படியும் வரவேண்டும்’ என்று இன்னுரை வழங்கு வாள். யாவர்க்குமே சாவித்திரியிடம் அன்பு. அவளைப் பாராட்டாதவர்கள் இல்லை. கற்பின்பொற்பு! கற்பின் சிகரம்! கற்புக்கணி! கற்பின் செல்வி! கற்புக் கரசி! என்று சொல்லிச் சொல்லி மகிழ்வர்.

கற்புத் தேவதை சொல்லியது, ‘சாவித்திரி என் உயிர்’ என்று. அருந்ததியும் அநசூயையும் அவ ளோடு உறவாடுவார்கள், அருவமாக. கற்புக்கனலாக

இருந்தாள் சாவித்திரி. குழந்தைகள் யாராவது பெரியவர்களை வணங்கினுல் "சாவித்திரிபோல் நற்குணவதியாயிரு" என்று வாழ்த்துவார்கள்.

வனத்திடை மாமி மாதுலன் தனக்கு மாசறு
தன் மணவனுக்கு
நினைத்தது நினையா முன்னரே யியற்றி நேரிழை
வழி படல் குறித்து
தனித்தனி புகழ்ந்து கற்பினுக்கிவளே அருந்ததி
தானெனச் சரித்தாள்
முனிப்பெருந்தன்மை நாரதனுரைத்த முறைப்படி
நாளகன்றனவே.

மூன்று வேளையும், மாமன் மாமி திருவடிகளில் வீழ்ந்து தொழுவாள்; கணவனை வழிபடுவாள். பல முறை வழிபாட்டறையில் சென்று இறைவனை வணங்குவாள்; அழுவாள்; தொழுவாள்; ஐயனே! என்பாள்; கால காலா என்று கதறுவாள்; பக்தியில் திளைப்பாள்.

இத்தனை இருந்தும் எண்ணம் கணவன் ஆயுளின் மேல் இருந்தது. நாட்களை எண்ணிக் கொண்டேயிருந்தாள்; நல்ல விரதங்களை அநுஷ்டித்தாள்; சோமவாரம், சுக்கிரவாரம், பிரதோஷம், சிவராத்திரி, கிருத்திகை, சஷ்டி முதலிய விரதங்களையும் தீபாவளி விரதத்தையும் அநுஷ்டித்தாள்; அதை யடுத்து வரும் கந்தர் சஷ்டி விரதமிருந்தாள்; சுமங்கலிகளுக்கு மாங்கல்யம் வளரும் சாவித்திரி விரதம் இருந்தாள்; ஒவ்வொரு மாதங்களிலும் வரும் திரயோதசியில் விரதமெடுத்துக்கொண்டு பிரதமை

யில் பாரணை செய்வாள். இப்படிப் பன்னிரண்டு சாவித்திரி விரதமிருந்தாள்.

கணவன் ஆயுள் வளர்வதற்கு என்னென்ன விரதமோ அத்தனையும் இருந்தாள்; இறைவனிடத்தில் வேண்டுவாள்; பல நாழிகை தன்னை மறந்திருப்பாள்; மொழிகுழற அழுது உருகுவாள்; சாவித்திரி தேவியை உபாசிப்பாள்; "அம்மையே! என் நாயகரின் உயிரைக் காப்பது நின் கடன். அவர் ஆயுள் வளர நீ திருக் கண்பார். உன் திருவடியையல்லாது நான் வேறு எங்கு முறையிடுவேன்?

"உலகீன்ற பச்சைக் கொடியே! உன் சரண மலரை யன்றித் தஞ்சமேதம்மா! சுமங்கலியே, என் துயரை நீ போக்கவில்லையானால் கருணாகரி என்று உன்னைப் புகழ முடியுமா! எனக்குப் பொன்னோ, பொருளோ, தேவையில்லை. உன் இன்னருள்தான் வேண்டும். அம்மா! கைலையில் எனக்கு இடம் வேண்டா. கணவனைக் காப்பாற்று. தேவ பதவியும் மால் பதவியும் ஏன்? மாங்கல்ய பிச்சையைக் கொடு. மங்களாகரி! பக்தியில்லாதவள் நான். புத்தியில்லாதவள் நான்; நல்ல நினைவுகள் இல்லாதவள்; தவமறியாதவள்; குணத்தாற் குறைந்தவள்; சாவித்திரி! உன்னை வழிபடுவதற்கும் தகுதியில்லாதவள். தாயே! அதற்காக, என் கணவனைக் காப்பாற்றாமல் விடாதே. பாவியாகிய என்னைத் தண்டிப்பாய் பாரமேசுவரி! என்னைக் கொல்லு; குத்து; நரகத்திலிடு; ஏற்றுக்கொள்கிறேன். பரிபூரணி! என் கணவனுயிரைக் கொண்டு, என்னை அமங்கலியாகச்

செய்யாதே அம்மா! மொழி பயின்ற நாள் தொடங்கி, உன் நாமமன்றி வேறறியேன். நீ காக்கவில்லை யானால், நான் பிழைப்பனு? என்னைக் கைதூக்கி விடுவார் யார்?

"வேத நாயகி! கூற்றுவனை யுதைத்தது, நின் திருவடியல்லவா? இப்பொழுது கூற்றுவனை யுதைக்க வேண்டா. 'எமனே! அங்கே போகாதே. சத்திய வான் நமது அன்பன்! என்று ஒரு மொழி சொல்லக் கூடாதா? காரணி! அதனுற் குறை யென்ன? கருணை குறைந்து, கரைந்து விடுமா? அப்பா, சிவபெருமான் தண்டிப்பாரா? நான் அறியாதவள் என்பது அவருக் குத் தெரியாதா? தாயே! எனக்குக் கொடுக்கும் போதுதான் நீ வன்னெஞ்சம் அடைய வேண்டுமா? வேண்டாமம்மா! வேண்டா! தாங்க முடியாதவள் நான். தீயவளாயினும் நான் நின் சேயல்லவா?

"அம்மா! அடிக்கின்ருயா? நீ அடித்துவிடு. உதைக்கின்ருயா? உன் மலரடியால் உதைத்துவிடு. நன்னெறி படராத நாயேனை உதைக்கவும் அடிக் கவும் உனக்கு உரிமை யிருக்கின்றது. ஆனுல், அம்மா! அந்தத் தண்டக்காரனிடம் காட்டிக் கொடுக் காதே. அவன் தரும் தண்டனையை, என் நாதர் தாங்கமாட்டார். அவர் பரம சாது; குணக் களஞ் சியம்; நின்னடியில் அன்புடையவர். அம்மா! சிவ கணங்களை விட்டுத் தண்டித்துவிடு. தெற்கே யுள்ளவனை அனுப்பாதே. தெற்கே யிருந்து வந்த, தேரேறித்தானே ஒருவன் அப்பாவின் மீது பாணம் போட்டான்? இவனும், தெற்கிருந்துதான் வருகிருன்.

"விலாசினி! எனக்கருள்செய்ய யார் ஆணையை எதிர் பார்க்கிருய்? எந்தை சதாசிவத்தின் வாயு ரையை நோக்குகிருயோ? அம்மா! உண்மையாகச் சொல்; உன் ஆணையில்லாமல், அப்பா யாரையா வது காப்பாற்றி யிருக்கிருரா? நீ காப்பாற்ருவிட்டால் அவர் அணைத்திருக்கிருரா? இல்லை தேவரீர் இருக் கும் போது, யாரையாவது தண்டித்திருக்கிருரா? தேவி! அவர் உன்னில் அடக்கம். சத்திநி பாதம் விளைந்த பின்தானே, அம்மா! சிவாத்துவிதம் தரு கிருர்? திருவருளுக்கு நீ அதிகாரி. நீயே திருவருள். நீ வக்கரமானவளல்லவா? அந்த வக்கர புத்தி எங்கே போகும்? முப்பத்திரண்டு அறங்களைச் செய் யும் போதும், யாரையாவது கேட்டுக்கொண்டா செய்தாய்? குழந்தையாகிய எனக்குக் கொடுக்கும் போது தாஞ, இந்த நியதிகள் எல்லாம்? இரு வினை யொப்பு இல்லை. மலபரி பாகம் இல்லை. அதஞ லென்ன? அதற்காக? என் மஞ்சளை எடுத்துக் கொள் கிருயா? என் குங்குமத்தை யழித்துவிடுகிருயா? என் மாங்கல்யத்தைப் பறித்துவிடுகிருயா? நான் பாவி! பாவி! பாவி! என் கணவனைத்தானே காப்பாற்று என்கிறேன்? நீ அறம் வளர்த்த நாயகி யல்லவா? குற்றம் புரிவது என் இயற்கை. அதனைத் தடுத்து ஆட்கொள்வது உன் இயற்கை யல்லவா? குற்ற வாளி என்று தெரிகிறதம்மா! நான் தான் என் மாட்டாமையைச் சொல்லுகிறேனே! பிறகு என்ன? ஐயோ! என் கணவன் உயிரைக் காலன் வவ்வ, யான் எப்படித் தாங்குவேன்? சண்டி! இயமனைக் கண்டிக்க உனக்கு சக்தி யில்லையா? ஐயோ! என்

செய்வேன்? என்னைக் காப்பாற்றுவாரில்லை. வேறு தெய்வமும் இல்லை. உன்னாற் பிறந்தேன். உன் நாமஞ்சொல்லி வளர்ந்தேன். உன் திருவடி வணங்கி வாழ்ந்தேன். உன் கருணையின்மையால் அழி கிறேன், அழிகிறேன்; தேவி! அழிகிறேன்; பராசக்தி!"

இழைக்கும் வினைவழியே யடுங்காலன் எனைநடுங்க
அழைக்கும் பொழுதுவந் தஞ்சே லென்பாய் அத்தர் சித்த
மெல்லாம்
குழைக்குங் களபக்குவிமுலை யாமளைக் கோமளமே
உழைக்கும் பொழுதுன்னையே அன்னையே என்பன்
ஓடிவந்தே.
பரமென் றுனையடைந்தேன் தமியேனுமுன் பத்தருக்குள்
தரமன் றிவனென்று தள்ளத் தகாது தரியலர்தம்
புரமன் றெரியப் பொருப்புவில் வாங்கிய போதிலயன்
சிரமொன்று செற்றகையான் இடப்பாகஞ் சிறந்தவளே.

—அபிராமியந்தாதி.

சாவித்திரியின் நெஞ்சமெலா முருகச் சாவித்திரி நின்று அழுவாள். கல்லுங் கரைந்து, நீராயோடும். விழிநீர் வெள்ளமிசை வீழ்ந்து வெகுநேரம் வேண்டு வாள்; தன்னையறியாள்; தன் நலமுணராள்; சொன்னதையே திருப்பித் திருப்பிச் சொல்லுவாள்; அம்மா! அம்மா! என்று கதறுவாள்; பித்தியைப் போல், பிதற்றுவாள்; வெறித்து நோக்குவாள். 'உம். எனக்குத் தேவியருள மாட்டாள்.' எனச் சலிப்பாள்; நெடுமூச்செறிவாள்; கைகளை யுதறுவாள்; உண் பதை நெடுநேரம் மறந்துவிடுவாள். உறங்குவதற் குள் விடிந்துவிடும்.

நடந்து கொண்டே யிருப்பாள்; நிற்பாள்; வீழ்வாள்; புரளுவாள்; துடிப்பாள்; தலையைத் தரையில் இடிப்பாள்; வல்வினையேன் செய்த வல்வினை—என்று நொடிப்பாள்; சிவகாமி தோத்திரங்களைப் படிப்பாள்; மகிழ்ச்சி யுள்ளவளைப் போல் நடிப்பாள். சாவித்திரியின் துயரம் சிறிதா! வஞ்ச மொன்றறியா அப் பைங்கிளி, நாள் தேயத் தேய உடல் தேய்வதானாள். உணவைக் குறைத்துக்கொண்டாள்; உறக்கத்தை விட்டுவிட்டாள். அதிகம் பேசுவதில்லை. நெஞ்செலாம் பதற, அம்மையைத் தொழுவாள். எதற்காகவாவது காலம் நிற்குமா? கரைந்துவிட்டது. பன்னிரு மாதங்கள் சென்றுவிட்டன. பாவம்!

கணவனுக்கோ, மற்றவர்க்கோ தன் துயர் தெரியாமல் வாழ்ந்தாள்; அவர்களிடம் மகிழ்ச்சியாக இருப்பாள்; எப்பொழுதும்போல் வேலைகளைச் செய்வாள்; அறம் புரிவாள்; விருந்துபசரிப்பாள்; வேற்றுமை யிருக்காது. சாவித்திரி துன்பப்படுகிறாள் என்று யாருக்குந் தெரியாது. நெஞ்சிலேயே புதைத்துக் கொண்டாள். ஏதோ, தேவியை வழிபடுகிறாள்; பக்தியில் திளைக்கிறாள்; என்று தெரியுமே யொழிய, உண்மை தெரியாது. வெளியிற் சொல்லுஞ் செய்தியா அது? சொல்லியாவதென்ன? மற்றவர்க்குந் துன்பம்!

பதி பக்தியிற் சிறந்த சாவித்திரியை யாவருந் தொழுதார்கள். அவளைத் தெய்வமாக வணங்கினார்கள். அம்மா! என்று அழைத்தார்கள். அவளைக் கண்டவுடன் கன்னத்தில் போட்டுக்கொண்டார்கள்.

அவள் போகும்போது ஒதுங்கி நிற்பார்கள்; வணங்கி நிற்பார்கள். பார்த்துக்கொண்டே யிருப் பார்கள். ஒருவருக்கொருவர் அவள் புகழைப் பேசு வார்கள். பேசும்போது வினை குறைவதை உணர் வார்கள். வெகு பேர் தெய்வத்தைத் தொழுவதை விட்டுவிட்டார்கள். சாவித்திரியையே, தெய்வ மாக வழிபட்டார்கள். அடியார் பூசையைவிடச் சிறந்தது எது?

பல பெண்கள் திருந்தினுர்கள். கற்பின் சிறப்பை யுணர்ந்தார்கள். கணவனைக் கடவுளாக வழிபட் டார்கள். எதிர்த்துப் பேசுவதில்லை. சண்டையிடுவ தில்லை. அப்படி யாராவது பூசலிட்டால், சாவித்திரி இடை நின்று, ஒற்றுமைப் படுத்திவிடுவாள். "குழந்தை தானே! அறியாதவள். பெண் தானே? இரங்கக் கூடாதா? தாயாரைப் பிரிந்து உங்களைத் தஞ்சம் புகுந்தாளே? தந்தையைப் பிரிந்து வந் தாளே? ஆதரிக்கக் கூடாதா? ஒரு பெண்ணுக்குக் கணவனை யன்றி யார்? நீங்கள் வெறுத்தால் அவள் எங்கு போவாள்? போகட்டும், மன்னித்து விடுங் கள்!" என்று இனிமையாகச் சொல்லுவாள். சாவித்திரி சொல்லிவிட்டால் தட்ட முடியுமா?

"தங்கச்சி! தங்கச்சிலையே! பெண்களாகிய நமக் குத் தாய் பகையிருக்கலாம்; தமர் பகை யிருக்கலாம். தந்தை பகையாகலாம். கொண்கனைப் பகைக்க லாமா? சுமங்கலி, என்ற பெயரை அவரல்லவா தந்தார்? அந்தப் பெயருக்குள்ள பெருமை அப்பா அம்மா வைத்த பெயருக்கு ஏது? அடித்தாலும்,

அணைத்தாலும் அவர்தானே அம்மா? பாரத நாட்டுப் பெண்களுக்குக் கற்புதானே அணிகலன்? கற்பால் வாழ்ந்தவர் பலர். நமக்குக் கணவனே தெய்வம். கணவனே புண்ணிய நதிகள். கணவனே சிவ தலங்கள். கணவனே தெய்வநாடு. கணவனை வழி படுவதே தவம். எவள், கணவனை வழிபடுகிறாளோ, அவளுக்கு வேறு அறம் வேண்டா. ஆடவர்களுக்கு அப்படியா? எத்தனையறம்? எத்தனை வழிபாடு? கற் புள்ளவளைத் தேவர்கள் பாராட்டுகிறார்கள். கணவ னோடு அன்பாயிரு.''

என்று போதிப்பாள். பொதுவாகவும் பல பெண்களுக்கு அடிக்கடி அறிவுரை பகர்வாள். நல்ல நல்ல கதைகளைச்சொல்வாள். அதனாற் குழந்தைகட் குப் பிரியம். அறவுரைகள் பகர்வதால் பெரியவர்கள் விரும்புகிறார்கள். இனிமையாகப் பேசுவதால் யுவதி கள் விரும்புகிறார்கள். நெறியில் நிற்பதால் இளைஞர் கள் வணங்குகிறார்கள். செயல்களைத் திறம்படச் செய்வதால் மூதாட்டிகள் விரும்புகிறார்கள். மெய் தொட்டுப் பணிவிடை செய்வதால் மாமியார் விரும்பு கிறாள். தெய்வமாக வழிபடுவதால் மாமனார் விரும்பு கிறார். பணிவிடைகளால் பர்த்தாவை வசியப்படுத் தினாள். உபசரணையினால் விருந்தினரைத் திருப்தி செய்வித்தாள். வழிபடுவதால் தெய்வங்களை உருக வைத்தாள். கருணையினால் எல்லா உயிர்களையுமே திருப்திப் படுத்தினாள்.

இவற்றாலெல்லாம் சாவித்திரி புகழ் பெருகியது. அவளை மானுடமாக நினைப்பாரில்லை. சொல்பவர்களை

அடித்துவிடுவார்கள். தெய்வமே என்று போற்றினர் கள். அவள் உயிருடன் இருக்கும்போதே அவள் உருவத்தை வைத்து வழிபட்டார்கள். வழிபாட்டறை யில் அவள் சிலைதான். அவளைப் போற்றுதார் இல்லை. அவள் புகழ் பரவாத திசையில்லை. நகரெங் கும் பரவியது. எங்கிருந்தும் பலர் வந்த வண்ண மாக இருந்தனர். சாவித்திரி எங்கள் காட்டில்தான் இருக்கிருள் என்று பெருமை. அவள் பெயரைக் குழந்தைகளுக்கு வைத்தார்கள். வீடுகளுக்கு வைத்தார்கள். பசுவைச் சாவித்திரி-என்று அழைத் தார்கள். தாங்கள் செய்யும் தருமங்களைச் சாவித்திரி பேரால் செய்தார்கள். கோயில்களில் சாவித்திரி பேரால், அருச்சனை, விழா, அபிஷேகம், நடை பெற்றன.

> உள்ளத்தால் பொய்யா தொழுகின் உலகத்தார்
> உள்ளத்து ளெல்லாம் உளன்.

கயவர்கள் எங்கு இல்லை? எப்பொழுது இல்லை? உம். ஒரு பெண்மணிக்கு என்ன இத்தனைப் புகழ்? என்று தூற்றினர்கள்? தூற்றுவதில் இன்பம் கண் டனர். பெருமைக்கு வழிபடுகிருள் என்ருர்கள். எல்லாம் மாய்மாலம் என்ருர்கள். எல்லாம் ஏமாற்று வித்தையப்பா என்ருர்கள். சாவித்திரிக்கும் அது தெரிந்தது. அதனுலென்ன. 'கடவுளே! அவர்களை மன்னித்துவிடு.' என்று வேண்டுவாள். சாவித்திரிக் குப் பிரியமானவர்களிடம் அவளை இகழ்வார்கள். அவர்கள் மனம் புண் படுவதைக் கண்டு சிரிப்பார் கள். 'உம். இப்படியே கைலாசம் போகப் போகி ருளா? போடா!' என்பார்கள். தொழுபவர்களை

வைவார்கள். நையாண்டி செய்வார்கள். தடுப் பார்கள். 'பெண்ணை ஏண்டா வணங்குகிருய்?' என் பார்கள்.

சாவித்திரி கொடுக்கும் கனிகளுக்காகவும் கை யுறைகட்காகவும் வணங்குகிருர்கள். இல்லையானுல் ஏன் வணங்குகிருர்கள்? என்பார்கள். இதனுற் சிலர், வெளிப்படையாக வணங்குவதில்லை. பார்வையாற் ருெழுது, நெஞ்சத்தால் உருகுவார்கள். ஆரும் அறியாமல் அறையில் உரு வைத்துப் போற்றுவர். சாவித்திரியின் திருவடிகளில் தொழுதால் பிரதிப் பிரயோசனங் கருதித் தொழுகிருர்கள், என்பதா லேயே சில தீவிர பக்தி கொண்டவர்கள் மற்றவர் கள் எதிரில் தொழுவதில்லை. அதையுணராதவர்கள் சாவித்திரியை வணங்காதவன் என்று ஏசுவார்கள். பக்தியில்லாதவன், இவ்வளவு பெரிய கற்புக்கரசி, நம் கானகத்திலிருக்கும்போது அவளை வணங்கா மலும் அவளைப் பார்க்காமலும் இருக்கிருனே? என்ன ஆணவம்? என்று பேசுவார்கள். சாவித்திரியிடமே சொல்லுவார்கள். பாவம்! அவள் என்ன செய்வாள்? புன்னகைப்பாள். உண்மையான பக்தி யுள்ளவர்கள் இதற்கொன்றும் மனம் உடைவதில்லை. அந்தரங்க மாகவே சாவித்திரியை வழிபடுவார்கள்.

சத்தியவானுக்கு அளவிறந்த மகிழ்ச்சி. கற்புத் தேவதையே, தனக்கு மனைவியாக வந்து வாய்த்த தாக எண்ணுவான். மனம் பூரிப்பான். தான் முன் செய்த தவம், சாவித்திரியை மனைவியாகத் தந்தது என்று உவகையுறுவான். எத்தனை பேர் வினையை மனைவியாகக் கொண்டு அல்லற்படுகிருர்கள்? நம்

பாக்கியம், இவள் பாரியையானது என்று மகிழ் வான். அன்பாகப் பேசுவான். மனைவியைக் கடிந்து கொண்டதே கிடையாது.

அவள் வேலைகளில் துணையாயிருப்பான்; தான் உட்கார்ந்துகொண்டு மனைவியை வறுத்தெடுக்க மாட்டான்; வெளியில் போய் வரும்போது சாவித் திரிக்காக மணமுள்ள தழைகளையும், மலர்களையும் கொண்டு வருவான்; அன்போடு தருவான்; தன் கைகளாற் சூட்டுவான். சாவித்திரி! இந்த மலருக் குப் பெருமையைப் பார்த்தாயா? உன் குழலில் குடி யிருக்கிறதாம்; மற்றமலர்களை நகையாடுகிறது. உம். நான்கூட ஒரு நாளைக்கு உன் கூந்தலில் மலராக மணக்கப் போகிறேன். முடியுமா சாவித்திரி? சூட்டிக் கொள்வாயா? "கடவுளே! என் சாவித்திரியின் குழ லில் சூட்டிக்கொள்ளும் மலராக என்னைப் படைத்து விடு! என்று வேண்டுவேன்." என்று இனிய உரை களைச் சொல்லுவான்.

சாவித்திரி மகிழ்ச்சியால் கண்ணீரோடு கணவன் கழலடியை வணங்குவாள். "அன்பரே! இப் பாத தாமரை என் கூந்தலுக்கு உகந்ததல்லவா? தங்கள் திருவடியைச் சூட்டிக்கொள்ளும் பெருமை எனக் குக் கிடைத்ததே! என்னைவிடப் பேறு பெற்றவர் யார்? தங்கள் முகத் தாமரை எனக்கு அருளைக் கொடுக்கிறது. தங்கள் விழித்தாமரை தன் கருணை யால் என் கவலையைப் போக்குகிறது. தங்கள் கரத் தாமரை எனக்கு அன்பைத் தெரிவிக்கிறதே? யாருக் குக் கிடைக்கும்?" என்று அடக்கமாகப் பேசுவாள்.

சத்தியவான் மனைவியை மலைகளுக்கும் யாறுகளுக்கும் அழைத்துச் செல்வான். சோலைகளில் தங்குவான். குன்றுகளில் குலாவுவான். இருளடர்ந்த வனத்தின் உள்ளே சாவித்திரியோடு இன்புற்றிருப்பான்.

மான்களைக் காட்டுவான்; மரைகளைக் காட்டுவான்; குயில்களைக் கூப்பிடுவான்; கிள்ளைகளைப் பேசச்சொல்வான்; மயில்கள் நடனத்தைக் கேலி செய்வான். "சாவித்திரி! உன் வித்தையில் இவைகளுக்கு ஒன்றுமே வரவில்லையே?" என்பான். பொழில்களிலும், நீரூற்றுக்களிலும் நெடுநேரம் காதலால் தங்களை மறந்திருப்பார்கள். சந்திர ஒளியில் தங்கியிருப்பார்கள். சாவித்திரியைப் பாடச்சொல்லிக் கேட்பான். 'அது என்ன இசை?' என்பான். 'நான் பாடுகிறேன்' என்று வேண்டுமென்றே கர்ரு-புர்ரு-என்று பாடுவான். "சாவித்திரி! உன்னைப்போல் எனக்குப் பாடத் தெரியவில்லையே?" என்பான். சாவித்திரி கல கல வென்று கைதட்டி நகைப்பாள். "உம். என் காதலருக்கா பாடத் தெரியாது? 'நாம் பாடினுல் கின்னரர்களுக்கு அவமானமா யிருக்குமே' என்று பாடுவதில்லை. எனக்குத் தெரியாதா? தங்கள் குரல் தேன் தேனுகத் தித்திக்குமே?" என்பாள்.

"சாவித்திரி! சொல்லாதே; சொல்லாதே. உன் கூந்தலில் வண்டுகள் இருக்கின்றன. பிறகு என் தொண்டையைத் தேனென்று மொய்க்கப் போகின்றன" என்பான்.

9

“போங்கள் கிண்டல்தான்” என்று சொல்லித் தன் கணவன் உடலைத் தழுவிக்கொண்டே, அவன் மடியில் படுத்தாள் சாவித்திரி. கண்களை மூடிப் பரவசமானாள். “காதலரே! நான் உங்கள் மடியில் படுக்கிறேனே? அது போல் இன்னொரு பெண்மணி உங்கள் மடியில் படுப்பாளா?” என்று கேட்டாள்.

“சாவித்திரி! இது என்ன? உன்னை யன்றி என் மடியில் படுப்பவர் யார்? யார் என்னைத் தீண்டுவார்? கற்பரசி! ஏன் இந்த ஐயம்?” என்றான்.

“பொய்தானே சொல்லுகிறீர்கள். ‘வாய்மைக் கடவுள்’ என்று, எல்லோரும் உங்களைப் பாராட்டு கிறார்கள். நீங்களானால் மனைவியிடமே, கூசாமல் பொய் சொல்கிறீர்களே? என்னிடம் சொன்னா லென்ன? நான் தடுக்கவா போகிறேன். உங்களைத் தடுக்க நான் யார்? அவளை என் தமக்கையாக வழிபட மாட்டேனா? உங்கள் உடம்பைத் தழுவியவளை நான் பாராட்டமாட்டேனா? யாரும், உங்கள் மடியில் படுத்ததில்லையா? நமக்குள் மறைவு ஏன்?” என்றாள்.

சத்தியவான் அயர்ந்துவிட்டான். இது என்ன? ஐயப்பிசாசு? அது எளிதில் போகாதே? என்று துடித்துவிட்டான். “சிவ சிவா! என்ன கண் மணி! நீ இப்படிப் பேசுகிறாய். என் மடியில் யாரும் படுத்ததில்லை; சந்தேகத்தை விடு. அது வேதனையாக இருக்கிறது.”

“உண்மையாக? யாருமா படுத்ததில்லை?”

"யாருமே படுத்ததில்லை. உன் தலையில் அடித்துச் சத்தியம் செய்யட்டுமா?" என்று தலையில் தட்டினான்.

"போதுமா? இப்பொழுதாவது நம்புவாயா? மாட்டாயா?"

"போங்கள் வலிக்கிறது" என்று தலையைத் தடவிக் கொண்டாள். "சரி பொய் சொல்லவில்லையே?"

"இல்லை, இல்லை, இல்லை; யாருமே என் மடியில் படுத்ததில்லை."

"நல்லது; மகிழ்ச்சி. இப்பொழுதுதான் எனக்கு மூச்சு வந்தது. இதற்கு ஏன் இவ்வளவு பதட்டம்? அது சரி நீங்கள் யார் மடியிலும் படுத்ததில்லையா?"

"ஐயையோ! இது என்ன சாவித்திரி? அபாண்டம். வெளியில் சொல்லாதே. அப்பா அம்மாவுக்குத் தெரிந்தால் அவ்வளவுதான்."

"ஊஉம்; வெளியில் தெரியக் கூடாதா? யாருக்கும் தெரியாமல் படுக்கிறீர்களா? சரிதான்; கள்ளர் தான். நீங்கள் வணங்கும் கடவுளும் கள்ளர்; நீரும் கள்ளர். அப்படியானல் நான் ஏன் இங்கே? நான் போகிறேன்; நீர் அவள் மடியிலேயே படுத்துக் கொள்ளும்" என்று எழுந்துவிட்டாள்.

சத்தியவானுக்குக் கை கால் ஆடவில்லை. போகின்ற அவள் கையைப் பற்றி இழுத்தான். உதறிக்கொண்டு போய்விட்டாள். வேகமாக ஓடி

அவள் பின்னலைப் பிடித்தான். "ஐயையோ! வலிக்கிறது; விடுங்கள். இப்படித்தான் இழுப்பதா? போங்கள் யார் மடியிலோ படுக்கிறீர்களே? அவள் பின்னலைப் பிடித்து இழுங்கள்" என்று சிணுங்கினுள்.

"உஸ்! என்ன இது விளையாட்டு? வா." என்று இழுத்துக்கொண்டு வந்து உட்கார வைத்தான். உட்காருவதுபோல் அவன் மேலேயே விழுந்துவிட்டாள் சாவித்திரி. "உம் இப்பொழுது சொல்லுங்கள் என்னை ஏன் இழுத்துக்கொண்டு வந்தீர்கள்?"

"நான் போய் எந்த பெண்ணின் தொடையிலாவது தலை வைத்துப் படுப்பேனு? இது உனக்குத் தெரிய வேண்டா? வீண் பழி சுமத்துகிருயா?" என்ருன் சத்தியவான்.

"இல்லை நீங்கள் ஒரு பெண்ணின் மடியில் படுக்கிறீர்கள்."

"நானு? இல்லவே இல்லை"

"ஒரு நாளும்?"

"ஊஉம் ஒரு நாளுங் கிடையாது"

"பொய்தானே சொல்கிறீர்கள்? நான் பக்கத்திலேயே இருக்கிறேன். நீங்கள் அவள் மடியில் படுத்து மகிழ்ச்சியாகத் தன்னை மறந்து கண்களை மூடி, அடேயப்பா! இருக்கிறீர்களா இல்லையா?" என்று கேட்டாள்.

"இது என்ன சாவித்திரி! நீ யிருக்கும்போதா?"

"ஆம் நான் இருக்கும்போதும் இல்லாத போதும்; ஏன் திருமணம் ஆவதற்கு முன்பே நீங்கள் அப்படித்தான் இருந்தீர்கள்."

"கிடையாது சாவித்திரி! உன்னை யாரோ ஏமாற்றி இருக்கிறுர்கள்" என்றுன். பாவம்! அவன் முகம் பரிதாபமாக இருந்தது. விழிவிழி என்று விழித்தான். என்ன வில்லங்கம் இது? என்று நொடித் தான்.

சாவித்திரி தலை யசைத்துக்கொண்டே "சரி போகட்டும். நீங்கள் தினமும் எங்கு படுக்கிறீர்கள்?

"ஏன் ஆசிரமத்தில்தான்?"

"ஆசிரமத்தில் எங்கே?"

"எங்கே படுப்பது? தாழ்வாரத்தில்தான்?"

"தாழ்வாரத்தில்தான்; தாழ்வாரத்தில் எங்கே? என்று கேட்கிறேன்?"

"என்ன சாவித்திரி? தரழ்வாரத்தில் எங்கே படுப்பது? ஆகாசத்திலா படுப்பார்கள்? தரையில் தான்" என்றுன் கோபமாக.

"உம் அப்படி வாருங்கள் வழிக்கு. கோபம் ஏன்? செய்வதையும் செய்துவிட்டுக் கோபம் வேரு? எனக்குத் தெரியாதென்று நினைத்தீர்களா? உக்கும்?"

சத்தியவான் "என்ன தெரியும் உனக்கு? சொல் பார்ப்போம்?"

"சொல்கிறேன், சொல்கிறேன்; தரையில்தானே படுக்கிறீர்கள்?"

"ஆ...ம்...? அதற்கென்ன?"

"அதற்கொன்றுமில்லே. தரை பெண்ணு? ஆணு?"

"உம்....?"

"ஏன் விழிக்கிறீர்கள்? சொல்லுங்கள்?"

"பெண் தா........ன்?"

"அப்பொழுது நாள்தோறும் தரைமகள் மடியில் தானே, தலே வைத்துப் படுக்கிறீர்கள்? நான் பக்கத்தில் இருக்கிறேனே என்று நினைத்தீர்களா? இப்பொழுது சொல்லுங்கள்? நீங்கள் ஒரு பெண் மடியில் தலே வைத்துப் படுக்கிறீர்களா? இல்லேயா?

"ஆஃ ஆஃ ஆ! ஆ! நல்ல வேடிக்கை! நீ இதைச் சொல்லுகிருயா? படுத்தேன். படுத்தேன். படுத்துக்கொண்டே யிருக்கிறேன். ஒப்புக்கொள்கிறேன். தப்புதான்." என்று பெருஞ் சிரிப்புச் சிரித்தான் சத்தியவான். அவளே வாரி எடுத்து அணைத்துக்கொண்டான். "ஆகா! எத்தனே இனிமையாகப் பேசுகிருய்? என் தவந்தான், உன்னே மனைவியாகப் பெற்றது" என்று அன்புடன் பேசினன்.

சாவித்திரி, அவனைத் தழுவி முகவாயைப் பற்றிக் கொஞ்சலாக "பயந்துவிட்டீர்களா? என்னமோ ஏதோ? என்று எண்ணிவிட்டீர்களா? அஅ!" என்று நகைத்துக்கொண்டே கேட்டாள்.

சத்தியவான் அவள் கைகளைப் பற்றி "அன்பே! நீ நன்ருகப் பேசுகிருய். பேச்சில் வல்லவள். தேனு கத் தித்திக்கப் பேசுகிருய். உனக்கு என்ன தருவேன்?"

"யாருக்குந் தராததைத் தரவேண்டும். தருவீர்களா?"

"என்ன அது?"

"தங்கள்...ஊஉம்....வெட்கமா யிருக்கிறது."

"பரவாயில்லை. சொல்"

"தங்கள்....தங்கள்.....மணிவாய்.......ஊஉம்........ போங்கள்." தலைகுனிந்துகொண்டாள்.

"ஓகோ! பெற்றுக்கொள். உன்னைத் தவிர யாருக்குத் தரப்போகிறேன். முத்து முத்தாகப் பேசுகின்ற உன் வாய்க்கு...." என்று அவள் விரும்பியதை விரும்பிய வண்ணம் தந்தான்.

கல கலவென்று சிரித்து மகிழ்ந்தனர். தருக்கள் மலர் சொரிந்தன. மான்கள் இணைந்து சென்றன. புறவிணை குகூகுகூ-என்று கூவின. கிளைகளில் கிள்ளைகள் காதல் மொழி பேசின. அங்கிருந்த

மாதுளைக் கனியைப் பறித்து உடைத்துக் கொடுத்தான் சத்தியவான். "கற்கண்டே! இந்த மாதுளையைப் பார்த்தால் உனக்கு என்ன தெரிகிறது?" என்று கேட்டான்.

சாவித்திரி "உம்; எனக்கு ஒன்றும்படவில்லை. நீங்கள் சொல்லுங்கள்." என்றாள். "நெஞ்சத்தினிக்கும் இன்பமே! காதலின்பத்தை அடைய வேண்டுமானால் சற்று துன்பத்தை அடையவேண்டும். தலைவனும், தலைவியும் காதலித்தால் முதலில் பகை வரும். அது சற்று அழுத்தமாக இருக்கும். பகையை வெல்வது கடினம். பிறகு அலர் பழி வரும். அது சற்று எளிதாக இருக்கும். கடக்கக் கூடியதாக இருக்கும். ஊன்றிப் பார்த்தால் பழி ஒன்றுமில்லை; என்பது தெரியும். பகையும், பழியும் கடந்தால், காதலின்பம் கிடைக்கும்.

"இதனைப் பார். இதன் ஓடு கடினமாக இருக்கிறது. பகை. உள்ளே ஒரு தோல் புரை புரையாக ஓடுகிறது. பழி. அதன் பின்னே பார்த்தால், நிறமும் சுவையுமுள்ள மணிகள் கிடைக்கும். அது காதலின்பம். இனி பேரின்பம் இதில் தெரியும். பேரின்பத்தை அடையவிடாமல் செய்வது, மும்மலங்கள். மாயை, ஆணவம், கன்மம். சாவித்திரி! இந்த மாதுளையின் மேலே மினுமினு வென்று ஒரு நிறமிருக்கின்றதே அது மாயை. மயக்க வல்லது. ஓடு, கடினமானது. அது ஆணவம். ஆணவம் சற்று கடினந்தான். வினை புரையோடிப்போகும். அது மெல்லிய தோல். மும்மலங்களும் நீங்கினால்

பேரானந்தம் அடையலாம். உள்ளே யிருக்கும் மணிகள் பேரின்பம். அஞ்சுகமே, பார்த்தனையா! இறைவன் படைக்கும் அதிசயத்தை! எத்தனை உண் மைப் பொருள்களை எங்கெங்கே வைத்துளான்.''

என்று அழகழகாகப் பேசினன் சத்தியவான். சாவித்திரி, மெய்மறந்து கண்களை மூடிக் கேட்டுக் கொண்டிருந்தாள். ''ஆகா! எத்தனை அழகான கருத்துக்கள்! ஆண்டவரே, தங்கள் அறிவு ஆழ மானது. தங்கள் உரைகள் மெய்ம்மையானவை.'' என்று மகிழ்ந்தாள்.

''தேவி! எங்கே ஒரு பாடலைப்பாடு.'' என்று கேட்டான் சத்தியவான். கல்லிலும் குழியிலும் குதித்துச் சலசல வென்று இன்னிசையோடு ஓடியது நதி. வண்டுகள் தொளைத்த தொளைகளில் காற்று புகுந்து குழல் வாசித்தது. இரண்டு கிளைகள் ஒன்ருேடு ஒன்று உருய்ந்து தண்ணுமை ஒலியை உண்டாக்கியது. கிக்கீ-கிக்கீ-பல பறவையினங்கள் இனிய ஒலி செய்தன. இவைகளை இசைக்கருவி களாகக் கொண்டு சாவித்திரி தேனினும் இனிமை யான குரலில் பாடினள். சத்தியவான் மெய்ம் மறந்து கேட்டான்.

எடுப்பு

சாவித்திரி—ஆதி

உன்னுடன் நான் பேசலாமா தென்றலே
என்னுடன் நீ பேசினல்
இழிவு வருமோ சொல்வாய்

தொடுப்பு

மின்னுடன் உடன்று வெற்றிகொள் இடையாள்
மன்னுடன் உடன்று மனத்துயர்க் குடையாள்

முடிப்பு

சென்ற பொழுதுநீ சேர்ந்தவனுனைய்
திரும்பிய பின் தமிழ் சேர்ந்தவனுனைய்
பொன்று மென்னுள மவர்க்கென்று மோதானுய்
போற்றினேன் மீளச் சாற்றிவா தேனுய்.

மலைகள் உருகின; நதிகளாக ஓடின. கன்றுகள் களித்தன. உடல் புளகித்தது. தேனிருல் உடைந்து ஒழுகியது. தென்றல் இனிமையாக வீசியது. "ஆகா! எத்தனை இன்பம்!" என்று மகிழ்ந்தான் சத்திய வான்.

சத்தியவான், "சாவித்திரி! இது என்ன ராகம்?"

"நான் தான்?"

"நான்தானென்ருல்?"

"நான்தான்; சாவித்திரி?"

"என்ன சாவித்திரி? ராகத்தின் பெயர், என்ன என்ருல், சாவித்திரி என்கிருயே? இராகமா சாவித் திரி?"

"ஆம். சாவித்திரி-என்று ஒரு ராகம்."

"ஓகோ! அப்படியொரு ராகமா? அது எதில் பிறக்கிறது?"

“இது 15-வது மேளகர்த்தா, அரிகாம்போதியில், ஜன்னியம். ஔடவ-ஔடவம். அதாவது, பண்ணின் திறம்-பண்ணின்-திறம். போகும் பொழுதும், ஐந்து சுரங்கள்; வரும் பொழுதும், ஐந்து சுரங்கள். சகமபநிச்—ச்நிப மகச. என்பது ஆரோண, அவரோணம். இதில் 2-ஆவது காந்தாரம். 1-ஆவது மத்திமம், பஞ்சமம், 1-வது நிஷாதம் வரும்.

“சிவபெருமான் திருநாமங்கள் ஐந்து. தென்றலை வென்றவர் அவர். அதனுல், ஐந்து சுரங்களுடைய ராகமாகப் பாடினேன்” என்ருள் சாவித்திரி.

சத்தியவான், “கண்ணே! நீதான் என்ன இனிமையாகப் பாடுகிருய்! நீ தென்றலைப் பற்றிப் பாடியதும், தென்றல் வீசுகிறதே?” என்ருன்.

சாவித்திரி, “தென்-என்ருலே இனிமை. அல் தொழிற் பெயர் விகுதி. இனிமையைச் செய்வது தென்றல். தெற்கே இருந்து வருகிறது. தமிழோடு சேர்ந்து வருகிறது. பொதிய மலையிலிருந்து சந்தனத்தை, ஏந்தி வருகிறது. எம்மம்மை குமரியின் திருவடியில் தழுவி வருகிறது. ஆகா! இனிமையான தென்றல், என் உடலைத் தழுவி மனதை மகிழ்விக்கிறது.” என்ருள்.

சினத்தோடு எழுந்துவிட்டான் சத்தியவான். கண் சிவந்துவிட்டது. நெற்றி சுருங்கியது. கைகளைப் பிசைந்தான். உதடுகள் துடித்தன. சொற்கள் படபடத்தன. நடுங்கி விட்டாள் சாவித்திரி; மெய் விதிர்த்தாள்; பயந்தாள்.

"அட! கள்ளி! மாயக்கள்ளி! திருகுக் கள்ளி! சதுரக் கள்ளி! கொடிக் கள்ளி! மயக்குக் கள்ளி! கணவனை ஏமாற்றி எத்தனை நாள், இந்த நாடகம், ஆடுகிருய்? போ. என்முன் நில்லாதே; போய் விடு. உன்னைப் பார்க்கவும் விருப்பமில்லை.' என்று கொதித்தான் சத்தியவான்; துள்ளினுன்.

பயந்து நடுங்கினுள் சாவித்திரி. என்ன பிழையோ! என்று மருண்டாள். கண்களில் நீர் ஆருக ஒழுகியது. கணவன் கை பற்றினுள். உதறி விட்டான். "ஆருயிரே! ஏன் கோபம்? என்ன பிழை செய்தேன்? பொறுத்தருளுங்கள்; தெரியாமல் பிழை செய்தேனே? சொல்லுங்கள். ஏன் கோபம்?" என்று கெஞ்சினுள்.

"சே! நீ ஒரு பெண்ணு? கற்புடையவளா நீ?'

"பிராண நாயகா! என் கற்பிலா ஐயம்? இதைக் கேட்டு உயிரோடிருக்கிறேனு? தங்களை யன்றிப் பிறரை மனத்திலும் நினைப்பேனு?"

"பொய் சொல்லாதே. மனதாலும் நீ பிற ஆட வனை விரும்பியதில்லையா?"

"இல்லை சுவாமி! இல்லை. அடியாளை நம்புங்கள்"

"ஆகா! பெண்கள் தான் எத்தனை மோசக்காரி கள்? எத்தனை அழகாகப் பொய் சொல்லுகிருய்? நான் இருக்கும்போதே நீ வேருெரு ஆடவனுடன் கூடி மகிழ்கிருய். அவன் உன் உடம்பைத் தழுவு கிருன். நீ, ஆகா! என்ன ஆனந்தம் என்கிருய்.

கேட்டால் இல்லை என்கிறாயே? பொய் யொழுக்கம் பெண்களுக்கு உடன் பிறப்புப்போலும்?' என்றான்.

சாவித்திரி, "என்ன தீவினை? என் காதலர் என்னை ஐயுறுவதா? தங்கள் திருவடி சாட்சியாக நான் யாரையும் விரும்பியதில்லை. கனவிலும் இல்லை. என் அன்புக்குகந்த உங்களை யன்றி என் உடலைத் தீண்டுவார் யார்? இறந்த பின்னும், பிற ஆடவர்கள் தீண்ட மாட்டார்கள். சுவாமி! ஏன் இந்த ஐயம்?"

சத்தியவான், நகைத்தான். "சாவித்திரி! ஏன், அஞ்சுகிறாய்? போகட்டும். இப்பொழுது, வீசுவது என்ன காற்று?"

"தென்றற் காற்று?"

"அது இனிமையானது தானே?"

"ஆ....ம்....?"

"உனக்கு அதன் மீது அன்பல்லவா?"

"உம்....அன்பு....தான்...?"

"உன் உடம்பைத் தென்றல் தழுவுவதாக நீ தானே சொன்னாய்."

"ஆம் சுவாமி! அதனாலென்ன?"

"தென்றல் ஆணா? பெண்ணா?"

"ஆ....ண் தான்....?"



"தென்றலாகிய ஆடவனேடு, நீ களித்தா யல்லவா? உம். சொல்." என்ருன்.

சாவித்திரி "அஃஆ! நல்ல வேடிக்கை! நன்ருக ஏமாற்றிவிட்டீர்கள். தவறு தான். இனித் தென்றலில் இருப்பதில்லை. போதுமா?"

சத்தியவான், "வேண்டாம். வேண்டாம். நீ தென்றலில் இரு. நான் தரையில் இருக்கின்றேன். சரி வா. நேரமாகிவிட்டது" என்று மனைவியின் கையைப் பற்றி எழுந்து வந்தான் சத்தியவான்.

சத்தியவான் ஆயுள், இன்னும் நான்கு நாட்கள் இருந்தன. நாட்களை எண்ணிக்கொண்டிருக்கின்ற சாவித்திரி இதனை நன்கு உறுதிப்படுத்திக்கொண்டாள். நான்காவது நாள் பாரணை செய்யும் விரதமாகிய சாவித்திரி விரதத்தை எடுத்துக்கொள்ள எண்ணினுள். நான்கு நாட்கள் தானே? என்று நினைக்கும்போதே, அவள் கண்கள் நீரைப் பெருக்கின. நெஞ்சம் உலர்ந்தது. என் செய்வாள்? பாவம்! மருத்துவத்தில் தீரும் நோயா? மந்திரத்திற் கிசைந்து, இயமன் போவானு? செல்வப் பெருக்கினுல், ஆயுள் வளருமா? 'என்னை எடுத்துக்கொள்.' என்ருல், சத்தியவானை விட்டுவிடுவானு? கெஞ்சினுலும் போகான். போற்றினுலும் போகான். பயத்தினுற் போகான். கடக்க முடியாத துன்பம் அது. தாண்ட முடியாதது. தவிர்க்க முடியாதது. பார்த்துக்கொண்டிருக்கும்போதே வரும். அதிலிருந்து கரையேற்றுவது இறைவன் திருவடிகள்தான்.

"மலினபவ சலராசி யேறவிடும் உறுபுணையும்."

—அருணகிரிநாதர்

ஆகவே, இயமனைக் கடக்க இறையருள் வேண் டும். அந்த எம் பெருமானை யன்றி நமக்குத் துணை யாவார் இவ்வுலகில் இல்லை என்ற நிச்சயத்துடன் மாமனார் மாமியார் திருவடிகளில் வணங்கினாள். வணங்குகின்ற மருகியைத் துயுமத்சேனர் வாழ்த் தினார். "குழந்தை! என்ன வேண்டும்? உன்னால் எங்களுக்கு அளவிறந்த பெருமை. எங்கள் மகிழ்ச் சிக்கு எல்லை இல்லை. இந்த வனமே உன்னால் புகழடைந்தது" என்றான்.

சாவித்திரி, "பிதாவே! மாங்கல்யத்தை வளர்க் கும் சாவித்திரி விரதம் இருக்க எண்ணுகிறேன். ஆணையிட வேண்டும். வேறொன்றும் தேவை யில்லை." என்றாள்.

துயுமத்சேனர் கேட்டார். மனம் நெகிழ்ந்தது. சாவித்திரியின் கைகளைப் பற்றினான். கண்களில் ஒற்றினான். கண்ணீர் சிந்தினான். "மகளே! எங்களுக்கு இன்பமாக வந்து சேர்ந்தாய். எனக்கு அன்பால் விழியானாய்; விரதமிருப்பதற்கு என்னைக் கேட்க வேண்டுமா? வேடிக்கை பார்க்கப் போவ தற்கே கேட்காத உலகம் இது. அதிலும் என் போன்று விழி இழந்தவர்களை யார் அநுசரிக் கிறார்கள். நீ உத்தமி. உன் எண்ணம்போல் இரு. தவத்தில் இருக்கும் யான் உன் விரதத்தை நன்கு நிறை வேற்று-என்ற பொருத்தமான வார்த்தை யைச் சொல்வேன். அல்லாமல், விரதத்தை விட்டு விடு-என்று சொல்வேனா? செல்வமே! விரதம் இருப் பதற்கு வேண்டிய, சக்தியைச் சிவபெருமான் கொடுக்கட்டும்" என்றான்.

சைப்யை, மருகியை அணைத்தாள். தலையைத் தடவிக் கொடுத்தாள். "ராஜபுத்ரி! ஒரு யாண்டு காலமாகவே, நீ விரதத்தில் தான் இருக்கிருய். நீ யில்லாத விரதமே கிடையாது. இப்பொழுது தொடங்கியிருப்பது மிகக் கடினமானது. மூன்று நாட்கள் உணவில்லாமல், இருப்பது எளிதல்ல. நீ மிகவும் இளைத்திருக்கிருய். அன்பாற் சொல்கிறேன். பழச்சாறு மட்டும் எடுத்துக்கொள்.' என்று ஆயிரந் தாய்களின் அன்பைத் திரட்டி உருக்கமாகச் சொன்னுள்.

சாவித்திரி, "அம்மா! உங்கள் வாழ்த்து இருக்கும்போது ஏன் அச்சம்? காரியம் நிறைவேறுவதற்கு முயற்சியே காரணம். விடாமுயற்சியினுல்தான் எண்ணியது கை கூடும். என் காரியம் மிகப் பெரியது. அதற்கு இதைவிடக் கடினமான விரதம் இல்லையே என்று வருந்துகிறேன். ஆகவே கவலை வேண்டா. செய்து முடிப்பேன். நீங்கள் வாழ்த்துங்கள்" என்று அடக்கமாகச் சொன்னுள். "பணியுமாம் என்றும் பெருமை".

இருந்தநாள் நான்கே யன்றியோர் வருட
மிறத்தல்கண் டிளங்கொடி முனிவர்
தருந்திறல் விரத மியற்றுவா னமைத்தே
தக்கசா வித்திரி கௌரி
திருந்துபவாத நான்முறை வழுவாள்
செய்தனள் தினமொரு மூன்றும்
அருந்திலள் துயிலாள் பிறருடன் பேசாள்
அன்பொடு களித்தனளம்மா.

திரயோதசி. காசியப குமாரனுகிய ஞாயிறேன் கிழக்கே உதித்தான். அவன் உடம்பெங்கும் சிவந்தது. சினம் மூண்டது. தகித்துக்கொண்டு புறப்பட்டான். 'பிரமபுத்திரராகிய, இயமன், இக் கற்புக் கரசிக்குக் கவலே யளித்தான். பெண்களுக்குத் தீங்கு செய்யாதே என்பதற்காகத்தான் கீர்த்தி, லட்சுமி, திருதி, மேதை, புஷ்டி, சிரத்தை, கிரியை, புத்தி, லஜ்ஜை, மதி, என்கின்ற பத்துப் பெண்களேத் தட்சப் பிரசாபதி கொடுத்தார். இருந்தும், இரக்கமனமில்லாமல் இச் சாவித்திரியை நோக வைக்கிருன். இருக்கட்டும். ஏதாவது தீங்கு செய்கிருனு பார்ப்போம்.' என்று, கோபமாகப் புறப்பட்டான்.

சாவித்திரி, மிகுந்த நியமங்களோடு விரதத்தைத் தொடங்கினுள். வில்வம், அறுகு, வெள்ளெருக்கு, தும்பை, கொன்றை, வெள்ளுமத்தை, நொச்சி, வெட்சி, கரந்தை முதலிய மலர்களேச் சேகரித்தாள். அட்சதை எடுத்து வைத்தாள். நாள் தோறும் சந்தனம் புதிதாக இழைத்துக்கொள்வாள். மிகப் பலவான கனிகளே ரிஷிபத்தினிகள் நிவேதனத்திற்காக நாளும் கொணர்ந்தளித்தனர். வழிபாட்டு நேரம் போக அம்மையை உருகிப் பாடுவாள். தரையில் படுப்பதில்லே. உண்ணு நோன்பு மட்டுமல்ல, உறங்கா நோன்பும் கொண்டாள்.

பயங்கரமானதும் மற்றவர்களால் அணுக முடியாததுமான, அந்த விரதத்தைச் சாவித்திரி இனிமையாக அனுசரித்தாள். நாள் கழியக் கழிய அவள் உள்ளத்தில் பயம் மிகுந்தது. கணவனேக் காணவே

அஞ்சினுள். நினைத்தாலே துடித்தாள். வெள்ளம் மிகுவதுபோல் உணர்ச்சி கூடி, தேவியின் திருவடி களிற் கதறினுள். உள்ளம் வெடித்து விடும்போல் அழுதாள். கண்டார் கண்கள் கரைந்தன. சாவித்திரி யோடு வெகுபேர் விரதமிருந்தனர். சாவித்திரியுடன் நீங்காதிருந்து தொண்டு செய்தனர்.

மலர்களினுல் அருச்சித்தாள்; தூப மிட்டாள்; தீபங் காட்டினுள்; கற்பூரங் கொளுத்தினுள். "தாயே! என் துன்பம், இக் கற்பூரம்போல் கரைய வேண்டும். உன் பாத தாமரையில் வீழ்ந்தேன். என்னை ஈன்றவள் நீ; தாய் வெறுக்கின் சேயேன் எங்கு செல்வேன்? எவரிடம் முறையிடுவேன்? என்னைக் காக்குந் திறன் வேருெருவருக்கும் உண் டோ? அம்மா! பாவியைச் சோதிக்கத் திருவுளங் கொண்டனையா? நின் சோதனையை எளியேன் தாங்கு வேனு?ஏழைமதி படைத்த என்னைத் தாங்குதல் நின் பரமல்லவா? அம்மா! தேவி! ஈசுவரி! என்று நின் திருநாமங்களைச் செபிப்பதன்றி வேறு தவமறியேன். இயம தூதர்கட்குடைந்து நின் திருவடி சார்ந்தேன். என் கணவன் உயிரை அவர்கள் கவர்வார்கள். யான் ஏங்கி நிற்பது, நினக்கழகா? ஏன்று கொள்வது நின் கடனல்லவா? கோபத்திற் பல்லைக் கடிப்பதால், அவர்கள் தெத்துப் பற்கள் இறுகிக்கொண்டு பயங் கரமாக இருக்கும். அவர்களுக்கு எதிராக நீ வா அம்மா! குழந்தை யல்லவா நான்?

"இறுகிய சிறுபிறை எயிறுடை யமபடர்
எனதுயிர் கொளவரின்
யானேங்குதல் கண்டெதிர் தானேன்று கொளுங்குயில்"
—அருணகிரிநாதர்.

கல்லேன்; கற்ற வண்ணம் நில்லேன்; உருகா தவள்; சற்றும் நின் பதத் தன்பு இல்லாதவள்; யாரி னும் பொல்லாதவள்; மலரிட்டு வழிபடேன்; மாலை புனேயேன்; அவமே திரிந்துழன்றேன்; நின் கோயில் வலம் வந்ததில்லை; கும்பிட்டதில்லை; குழைந்தறி யேன்; பாமாலை புனைந்தறியேன்; கோயிலைக் கூட்டியதுமில்லை; மெழுகியதுமில்லை. இரும்பு நெஞ்சகப் பாவி; பணியறியேன்; பத்தியறியேன்; பேதையேன் யான். பாடா நாவிற் பாவி யான்!

நின் திருத்தாள் சூடாத சென்னியைச் சுமந் தேன். யான் வாடா தருளல் நினக்கு வண்மையல் லவா? வாசா மகோசரமாய் நின்ற மனோன்மணி! நின்னைத் துதிக்க எனக்கு ஒண்ணுமா? இருவிழி நாசிமுனை வைத்தார் சித்திரம் போல் நின்றார் உள் நோக்கிய யோகியர்க்கன்றி, நீ எளிவந்தவளா? அவர்கள் ஏகாந்தத்தில் வெளிப்படும் விமலியல்லவா நீ? குண மொன்றில்லாதவள் யான். தவமறியேன். பவமுடையேன். கருணை செய்ய மாட்டாயா?

'எழுதிய படமென இருளறு சுடரடி இணைதொழு மவுனிகள்
ஏகாந்த சுகந்தரு பாசாங்குச சுந்தரி'

—அருணகிரிநாதர்.

வஞ்சகர்க் கெட்டா வாமையே! துயரிழந் தெய்த்த என் முகம் பார். மூன்று கண்களை வைத் துக்கொண்டு, ஏன் பராமுகஞ் செய்கிறாய்? என் முறையீடு நின் செவிக் கேறவில்லையா? என் மேற் குறையா? குறையா வளத்தினளே! மறலிக்கு என் மணாளனைக் காட்டிக் கொடுக்காதே! மரணத்தைத்

தவிப்பவள் நீ. கரணங்களை ஓயச் செய்பவள் நீ. மலங்கெடுப்பவள் நீ. நீ தானே திரோதையாக வருகிறாய்? வினை கெட அருள்பவள் நீயே! உன்னையன்றி வேறு துணை யறியேன். காவாது விட்டாலும் யான் பிழைக்க மாட்டேன். அழிவேன்; யான் அழிவதில் உனக்கென்ன ஆனந்தம்? பெருகி ஓடும் கருணை வெள்ளத்தில் அள்ளித்தர வேண்டா. தொட்டுத் தெளிக்கலாம் அல்லவா? கிள்ளித் தெறித்தாலும் போதுமே? அதுவுமா குறைந்து விடும்? பாவிதான். அதற்காகப் பரதவிக்க விடுவாயா?

'கரணமு மரணமு மலமொடு முடல்படு கடுவினை கெடநினை
காலாந்தரி கந்தரி நீலாஞ்சனி நஞ்சுமிழ்'

தேவ தேவி! இராஜேசுவரி! அந்தரி! சுந்தரி! அமலி! விமலி! ஆயி! மகம்மாயி! நீ ஒருத்தியே, உமையவளாகவும், சரசுவதியாகவும், மகாலட்சுமியாகவும் வருகிறாய். சிவனாக வருவது நீதான். அந்தச் சிவனுக்குச் சக்தியைத் தருவதும் நீதான். நீ மஹேச்சுரனாகிறாய். நீ சதாசிவனாகிறாய். நீயே, தாணுவாகிறாய். திருமாலாகவும், பிரமனாகவும் நீ வருகிறாய். இந்திரனாக வந்து ஆளுகிறாய். வாயுவாக வீசுகிறாய். அக்கினியாக வந்து எரிக்கிறாய். சூரியனும் நீயே! சந்திரனும் நீயே! நட்சத்திரங்களும் நீ. அட்ட மருத்துக்களும், சப்தரிஷிகளும் நீ. எல்லா உலகங்களும் எல்லாப் பொருள்களும் நீ யாகிறாய். நீ படைக்கிறாய். நீ துடைக்கிறாய். நீ காக்கிறாய். நீ அருளுகிறாய். நீ மறைக்கிறாய். சிறப்பைத் தருபவள் நீ. மரணத்தைத் தருப

வள் நீ. இயமனுகவந்து கொல்கிருய். நீயே இயமன். உன்னை யன்றிக் காலனில்லை. அம்மா! அந்த நெடுங் கூற்றன் வந்தால் என்முன்னே தோன்றி நிற்பாய். அது போதும். ஏழுலகங்கட்கும் அருளும் கருணை எங்கே? கடல் நிலை பெறுவது உன்ஞலல்லவா?''

'கரைபொழி திருமுக கருணையிலுலகெழு கடல்நிலைபெறவளர்
காவேந்திய பைங்கிளி மாசாம்பவி' —அருணகிரிநாதர்.

என்று உருகியழுதாள்; நெடுநேரம் நிஷ்டை கூடியிருந்தாள்; சிவயோகத்தில் நின்று சிவகாமி யைத் துதித்தாள்; பக்தியில் தன்னை மறந்தாள்; பரவசமானுள்; பார்மிசை விழுந்தாள்; தொழுதாள்; கும்பிட்டாள்; வணங்கினுள்.

ஓம்அகிலசக அண்டநாயகி நமோநம
,, அங்காளி ,,
,, அசலநெடுங்கொடி ,,
,, அனுபவை ,,
,, அந்தரி ,,
,, அபிராமி ,,
,, அமலை ,,
,, அம்பணகரதலி ,,
,, அம்பிகை ,,
,, அம்பை ,,
,, அம்மை ,,
,, அரவபூணரி ,,
,, அரிசோதரி ,,
,, அறக்கிரி ,,
,, அறம்வளர் சுந்தரி ,,
,, ஆதிசோதி ,,
,, ஆதியந்தமுமான சங்கரி ,,
,, ஆத்தாள் ,,

ஓம் ஆயி நமோநம
,, ஆரணி ,,
,, ஆலலூணி ,,
,, ஆறு சமயத்தி ,,
,, இமகிரிதருமயில் ,,
,, இமவரைதருங் கருங் குயில் ,,
,, இமவான் மடந்தை உத்தமி ,,
,, உமையவள் ,,
,, உமாமகேசுவரி ,,
,, காபாலி ,,
,, கலியாணி ,,
,, காமாரி ,,
,, காயத்ரி ,,
,, காரணி ,,
,, காளகண்டி ,,
,, காளி ,,
,, கிரிமயில் ,,
,, குணவதி ,,

ஓம் குண்டி நமோ நம
,, குமரி ,,
,, குலிச குடாரி ,,
,, கொற்றி ,,
,, கோகுல சத்தி ,,
,, கௌரி ,,
,, சங்கரி ,,
,, சடிலதரி ,,
,, சடைச்சி ,,
,, சடையழகி ,,
,, சண்டி ,,
,, சண்டினி ,,
,, சத்தி ,,
,, சந்த்ரசேகரி ,,
,, சயிலநாரி ,,
,, சயை ,,
,, சர்வேசுவரி ,,
,, சாமுண்டி ,,
,, சாவித்திரி ,,
,, சிங்கமேறி ,,
,, சிமயவரையின்ற மங்கை ,,
,, சிவகாம சுந்தரி ,,
,, சிவகாமி ,,
,, சிவபத்தினி ,,
,, சிவை ,,
,, சிற்சுக சுந்தரி ,,
,, சுந்தரி ,,
,, சூராரி ,,
,, சூலி ,,
,, செம்பொன் மணியள் ,,
,, ஞான பூரணி ,,
,, டாகினி ,,
,, தமனியதநுதரி ,,
,, திரிசூலி ,,
,, திரி நயனி ,,
,, திரிபுர தகனி ,,
,, திரிபுரை ,,
,, திரிபுவனேசை ,,

ஓம் திரிபுவனத்தி நமோ நம
,, திரிபுவனி ,,
,, திரியம்பகி ,,
,, துர்க்கை ,,
,, தேவி ,,
,, தேன் மொழியாள் ,,
,, தமிழச்சி ,,
,, தமிழ் மொழி ,,
,, தமிழ் மணி ,,
,, தமிழ் நாயகி ,,
,, தவ நாயகி ,,
,, தமிழ் கொஞ்சு பைங் கிளி ,,
,, தமிழ்க் காரணி ,,
,, தமிழீன்ருள் ,,
,, முத்தமிழானுள் ,,
,, நடநி ,,
,, நாக பூஷணி ,,
,, நாக பூஷணத்தி ,,
,, நாரணி ,,
,, நிட்களி ,,
,, நித்திய கல்யாணி ,,
,, நிரஞ்சனி ,,
,, நிருமலி ,,
,, நிருவாணி ,,
,, நிர்க்குணி ,,
,, நீலி ,,
,, நெடியவள் ,,
,, பகவதி ,,
,, பஞ்சபாணி ,,
,, பத்ரகாளி ,,
,, பயங்கரி ,,
,, பயிரவி ,,
,, பரசிவை ,,
,, பரமகலியாணி ,,
,, பரம்பரி ,,
,, பராசக்தி ,,
,, பராபரை ,,
,, பவதி ,,
,, பநிமலை ,,

ஓம் பார்ப்பதி நமோ நம
,, பார்வதி ,,
,, பிங்கலை ,,
,, பிடாரி ,,
,, புவநேசை ,,
,, பூரணி ,,
,, பெரியநாயகி ,,
,, மகமாயி ,,
,, மங்கலை ,,
,, மங்களாயி ,,
,, மந்தரி ,,
,, மந்த்ர ரூபி ,,
,, மரகதநிறந்தருங்கிளி ,,
,, மலைமகள் ,,
,, மலை மங்கை ,,
,, மனோன்மணி ,,
,, மாதங்கி ,,
,, மாலினி ,,
,, மாலின்பினுள் ,,
,, முக்கண் கொடி ,,
,, முக்கோணத்தானத்தாள் ,,
,, மோக சவுந்திரி ,,
,, மோகி ,,
,, மோடி ,,
,, மௌன சுந்தரி ,,
,, யாமளை ,,
,, யோகி ,,
,, ராஜத லட்சண லட்சுமி ,,
,, ருத்ரி ,,
,, யோக பதிவிரதை ,,
,, வயிரவி ,,
,, வராகி ,,
,, வரை மகள் ,,
,, வயமகள் ,,
,, வாணி ,,
,, வாலை ,,
,, வாமி ,,
,, விஷமூணி ,,

ஓம் விநாயகி நமோ நம
,, விமலி ,,
,, வேத நாயகி ,,
,, வேத ஞானி ,,
,, வேத தந்தரி ,,
,, ஜகரட்சணி ,,
,, வேதச் சொரூபி ,,
,, மூலஞான மங்கை ,,
,, மரகதவல்லி ,,
,, மடலூடெழுத அரியவள் ,,
,, பச்சைப் பட்சி ,,
,, பச்சைக் கொச்சைக் குயில் ,,
,, தில்லைவன மான் ,,
,, ஞானதனத்தி ,,
,, ஞான பத்தினி ,,
,, அசி ஞானரம்பை ,,
,, சித்வெளி ,,
,, சாரலிறைவி ,,
,, வநிதை ,,
,, இளவஞ்சி ,,
,, கொச்சை மாது ,,
,, கலைக் கொம்பு ,,
,, இன்பரச சத்தி ,,
,, கிரியா சத்தி ,,
,, ஞான சத்தி ,,
,, ஆயாள் ,,
,, எழுதிட அரிய எழிலாள் ,,
,, மாலவன் சோதரி ,,
,, நகைமுக விநோத ஞானமின் ,,
,, நினைவோர்சித்தமொடகலாமற் புகுநிழலாள் ,,
,, நீலரூபி ,,
,, பச்சைப் புயல் ,,
,, பரவை வண அரி ,,
,, பழையவடிவி ,,

ஓம் பூவணி நமோ நம
,, பூமகள் ,,
,, பூங்குழலி ,,
,, பூதேவி ,,
,, பூங்கோதை ,,
,, பூம்பாவை ,,
,, பழைய மாயவி ,,
,, மஞ்சுநிறம்புனைபவள் ,,
,, தயாபரி ,,
,, சுருதி யுடையாள் ,,
,, சூதாங்கி ,,
,, கொண்டல் ,,
,, எழிலி ,,
,, இந்திரை ,,
,, ஷண்முகி ,,
,, பஞ்சமுகி ,,
,, சதுர்முகி ,,
,, வநச நாயகி ,,
,, முத்திக்கொரு வித்து ,,
,, மனோகரி ,,
,, பத்தர் கணப்ரியை ,,
,, பகிரதி ,,
,, நாதாந்த ரூபி ,,
,, சேவகி ,,
,, பரிபுரி ,,
,, பரிவாதினி ,,
,, பாரமேசுவரி ,,
,, சத்திபாணி ,,
,, சத்தி தரி ,,
,, குடில மங்கை ,,
,, குலிசை ,,
,, பைந்தொடி ,,
,, விபுதை ,,
,, மோகினி ,,
,, மாளவி ,,
,, மாயை ,,
,, நாடகப் பிரியா ,,
,, ரூபவதி ,,
,, கனகாங்கி ,,
,, குங்குமவர்ணி ,,

ஓம் கோகில ப்ரியா நமோ நம
,, வகுளாபரணி ,,
,, ரத்னாங்கி ,,
,, வனசபதி ,,
,, தான ரூபி ,,
,, தான்யரூபி ,,
,, மானவதி ,,
,, காயகப்ரியா ,,
,, சேனாவதி ,,
,, ஆடகாம்பரி ,,
,, நீலாம்பரி ,,
,, பீதாம்பரி ,,
,, சித்தாம்பரி ,,
,, ஜங்காரத்வனி ,,
,, நடபைரவி ,,
,, கௌரி மனோகரி ,,
,, வருணப்ரியா ,,
,, மார ரஞ்சனி ,,
,, மார சகாயி ,,
,, மாரசம்மாரி ,,
,, சரசாங்கி ,,
,, நாக நந்தினி ,,
,, யாகப் பிரியா ,,
,, யாக பூஷணி ,,
,, ராகவர்த்தினி ,,
,, காங்கேய பூஷணி ,,
,, கமலவர்த்தனி ,,
,, கமலநாயகி ,,
,, வாகதீஸ்வரி ,,
,, சூலினி ,,
,, நவநீதம் ,,
,, பாவளி ,,
,, பவப்ரியா ,,
,, வராளி ,,
,, சுவர்ணாங்கி ,,
,, ஷட்வித மார்கிணி ,,
,, திவ்யமணி ,,
,, நாமநாராயணி ,,
,, கமனச்சிரயா ,,
,, ஸ்யாமளாங்கி ,,

ஓம் விஸ்வாம்பரி நமோ நம
,, ஏமவதி ,,
,, நீதிமதி ,,
,, தர்மவதி ,,
,, தர்ம சம்வர்த்தினி ,,
,, காந்தாமணி ,,
,, ரிஷபப்ரியா ,,
,, ரிஷபாருடணி ,,
,, லதாங்கி ,,
,, ஜோதிஸ்வரூபிணி ,,
,, தாதுவர்த்தனி ,,
,, நாசிக பூஷணி ,,
,, முத்தாம்பரி ,,
,, மூலநாயகி ,,
,, யோகாம்பிகை ,,
,, லோக ரட்சகி ,,
,, மங்கையர்க்கரசி ,,
,, புனிதவதி ,,
,, கற்புக்கரசி ,,
,, பாரதி ,,
,, நாதகாளி ,,
,, ஞானமணி ,,
,, சிவஞானி ,,
,, தங்கமணி ,,
,, ஆரூர்நாயகி ,,
,, சீமந்தனி ,,
,, காமினி ,,
,, வாக்காள் ,,
,, நர்த்தனப்ரியா ,,
,, மகா சுகவதி ,,
,, ஸ்ரீமணி ,,
,, கட்கதாரிணி ,,
,, சுசீலா ,,
,, சோம சுந்தரி ,,
,, சுகசுந்தரி ,,
,, சாந்தஸ்வரூபி ,,
,, சகலஸ்வரூபி ,,
,, மதுபதி ,,
,, சகலகலாவல்லி ,,
,, இன்னிசை ,,

ஓம் ஆதிரை நமோ நம
,, காரணி ,,
,, பவகாரணி ,,
,, மார்க்கவி ,,
,, சங்கமேந்தி ,,
,, போக சக்தி ,,
,, இயக்கி ,,
,, குலிசபாணி ,,
,, குலகன்னி ,,
,, கொன்றை சூடி ,,
,, செய்யாள் ,,
,, சானவி ,,
,, வனமாலி ,,
,, கொற்றவை ,,
,, கோசலை ,,
,, கோமதி ,,
,, கோமளேசுவரி ,,
,, கேதாரீசுவரி ,,
,, ஞான வல்லி ,,
,, இக்கு வில்லி ,,
,, விசயநாராயணி ,,
,, அகிலாண்டவல்லி ,,
,, அகோரப்ரியா ,,
,, அசுவினி ,,
,, அலங்காரி ,,
,, விஷை ,,
,, அமிர்தலட்சுமி ,,
,, கின்னநேசப்ரியா ,,
,, நாகமணி ,,
,, அசோதை ,,
,, சாந்தவபாஷிணி ,,
,, பாமகள் ,,
,, பாடினி ,,
,, பண்ணி ,,
,, சுபாஷிணி ,,
,, கிஞ்சுகபாஷிணி ,,
,, கிள்ளைத் தெள்விளி ,,
,, அஞ்சனை ,,
,, அணுரூபி ,,
,, அண்டர்மாதேவி ,,

ஓம் சாதரூபி நமோ நம
,, வைசயந்தி ,,
,, அநந்த சொரூபி ,,
,, அநலி ,,
,, இசை சோதி ,,
,, அநுபவி ,,
,, அந்தகாரி ,,
,, அம்பணத்தி ,,
,, அம்பலத்தாடி ,,
,, அம்புயை ,,
,, அம்புசாட்சி ,,
,, நீரசாட்சி ,,
,, வனசாட்சி ,,
,, பங்கசாட்சி ,,
,, சலசாட்சி ,,
,, சீவாட்சி ,,
,, கமலாட்சி ,,
,, பத்மாட்சி ,,
,, கௌமாரி ,,
,, அயிராணி ,,
,, ஆரணி ,,
,, அர்த்தநாரி ,,
,, அலைமகள் ,,
,, கலைமகள் ,,
,, அரிப்ரியை ,,
,, அறக்கொடி ,,
,, பாலினி ,,
,, சுடலையாடி ,,
,, ஆதிகவி ,,
,, ஆநந்தவல்லி ,,
,, ஆத்திசூடி ,,
,, ஆரியை ,,
,, சசிரேகை ,,
,, ஆநந்தை ,,
,, பூர்வி ,,
,, சகன்மோகினி ,,
,, சகதாம்பிகை ,,
,, க்ருஷ்ணவேணி ,,
,, விநோதிநி ,,
,, கைலையாளி ,,

ஓம் அம்ருதவர்ஷணி நமோ நம
,, விசாலாட்சி ,,
,, வீணாதாரிணி ,,
,, மீனாட்சி ,,
,, அங்கயற்கண்ணி ,,
,, சுகுந்தகுந்தளாம்பிகை ,,
,, மட்டுவார் குழலி ,,
,, சுரும்பார் குழலி ,,
,, ஏகநாயகி ,,
,, ஈறிலி ,,
,, உருப்பசி ,,
,, திலகவதி ,,
,, ப்ரகாசினி ,,
,, ஊர்மிளை ,,
,, ஸ்யாமளை ,,
,, வேகவாகினி ,,
,, தரங்கிணி ,,
,, சண்பகவல்லி ,,
,, கம்பாநதிதேவி ,,
,, தூநீரதாரிணி ,,
,, உத்தூளணாங்கி ,,
,, பஸ்ம தாரிணி ,,
,, கருணாகரி ,,
,, சாரமதி ,,
,, புவன காந்தாரி ,,
,, புவனேசுவரி ,,
,, ரதிபதிப்ரியா ,,
,, பாகீரதி ,,
,, மகாமாரி ,,
,, கிள்ளைத்வனி ,,
,, மயூரத்வனி ,,
,, மயிலாங்கனி ,,
,, குஞ்சரத்வனி ,,
,, குலபூஷணி ,,
,, குமுதவல்லி ,,
,, குயின்மொழி ,,
,, முக்கண்ணி ,,
,, கூவென்ற மென் மொழியாள் ,,

ஓம் ருத்ரப்ரியா நமோநம
,, ஸ்வர பூஷணி ,,
,, பாலசந்த்ரிகா ,,
,, ஓம்காரி ,,
,, ஓம்கார நாயகி ,,
,, க்ருபாகரி ,,
,, க்ருபாட்சி ,,
,, க்ருபானந்தி ,,
,, க்ருபாநிதி ,,
,, க்ருபதாரிணி ,,
,, க்ருபவர்ஷணி ,,
,, கோதை ,,
,, கோமகள் ,,
,, பூரண களா நிதி ,,
,, மகாநந்தி ,,
,, கௌதமி ,,
,, கௌமாரி ,,
,, சகலமங்கலை ,,
,, மங்களாகரி ,,
,, சடாரி ,,
,, சதாநந்த ப்ரியை ,,
,, சத்திய நாயகி ,,
,, சத்தியப்பிரியை ,,
,, சத்தியாங்கி ,,
,, சத்தியரூடி ,,
,, சத்தியவசனி ,,
,, சத்தியவதி ,,
,, சத்தியவாணி ,,
,, அம்சபூஷணி ,,
,, சர்வகாரணப்ரியா ,,
,, சாயாதேவி ,,
,, சானவி ,,
,, சித்திராங்கி ,,
,, கந்தர்வ மனோகை ,,
,, சிம்மவாகினி ,,
,, பானுகிரணி ,,
,, சலசவாசினி ,,
,, சயாபரணி ,,
,, சுடர்க்கொடி ,,
,, சுதாகரப்ரியா ,,

ஓம் சிவப்ரியா நமோநம
,, செல்வமணி ,,
,, சிவசூடாமணி ,,
,, சிவகாந்தாரி ,,
,, தீரநாயகி ,,
,, சௌந்தர்யலகரி ,,
,, சௌவீரி ,,
,, பவானி ,,
,, பாவளி ,,
,, தமனியப்ரபை ,,
,, தராபதி ,,
,, தாரகேசுவரி ,,
,, தாரகநாயகி ,,
,, திரோதை ,,
,, மதுகரி ,,
,, ஓங்கார கோஷிணி ,,
,, நச்செள்ளை ,,
,, உண்ணாமுலை ,,
,, பாலகுசாம்பிகை ,,
,, மந்தாரி ,,
,, இந்துமதி ,,
,, சுமங்கலி ,,
,, தவப்ரியா ,,
,, கங்கணாலங்காரி ,,
,, விசுவரூபி ,,
,, பிராம்மணி ,,
,, வசுகரி ,,
,, இராஜ ராஜேசுவரி ,,
,, வராகி ,,
,, வாமனி ,,
,, சர்வாங்கி ,,
,, தவளாம்பிகை ,,
,, ஞானாம்பரி ,,
,, ஏமாம்பரி ,,
,, நிமலை ,,
,, ஸ்ரீகண்டி ,,
,, வடிவழகி ,,
,, பத்ம காந்தி ,,
,, காந்திமதி ,,
,, நமோகரி ,,



ஓம் சிவாய மனோகரி நமோ நம
,, ரவிஸ்வரூபிணி ,,
,, ரத்னகாந்தி ,,
,, சுகஸ்வரூபிணி ,,
,, எழில்நாயகி ,,
,, திரிவேணி ,,
,, குருப்ரியா ,,
,, அருள்நாயகி ,,
,, கமலமூர்த்தி ,,
,, ககன மோகினி ,,
,, மைத்ரேயி ,,
,, பரிபூரண ஸ்வரூபி ,,
,, கீர்த்தி ,,
,, வந்தனதாரிணி ,,
,, கனகாம்பரி ,,
,, கீர்த்திப்ரியா ,,
,, தபோவாசினி ,,
,, சீவாஞ்சனி ,,
,, பானுமதி ,,
,, ஸ்வேதாம்பரி ,,

ஓம் திலகப்ரகாசினி நமோ நம
,, ரீங்காரி ,,
,, மித்திர ரஞ்சனி ,,
,, நளின காந்தாரி ,,
,, நாதாம்பரி ,,
,, பினாகி ,,
,, பத்மபாவனி ,,
,, ஆருதாரி ,,
,, சிவயோகி ,,
,, சிங்காரி ,,
,, சித்சொரூபி ,,
,, சிதாநந்தி ,,
,, சித்பரை ,,
,, சிரோமணி ,,
,, வரகசாயி ,,
,, வரமாலி ,,
,, ஆபத்பாந்தவி ,,
,, அனாதரட்சகி ,,
,, சாவித்திரிதேவி ,,
,, சாவித்திரிதேவி ,,
,, சாவித்திரிதேவி ,,

என்று கோடி நாமங்களைச் சொல்லி அருச்சித்தாள்; பல முறை விழ்ந்து பணிந்தாள்; மெய்யுருகினாள்; மூன்று நாட்களும் கழிந்தன. இயமன் சாவித்திரிக்கு இடர் செய்வனேல் அவனை எரித்து விடுவேனென்று சூரியன் உதித்தான். தவசீலர்கள் எல்லாம் சாவித்திரியையே பார்த்துக்கொண்டிருந்தனர். இன்று பிரதமையல்லவா? சாவித்திரி பாரணை செய்வாள் என்று பலரும் கனிகளைச் சேகரித்தனர். சாவித்திரி, தேவியைத் துதித்தாள்.

சுரக்கும் இன்னருள் கண்டு சாவித்ரி
துணையடி வந்தனன் நம்பி
சுரக்கும் வல்வினைக் கபடியென் துன்பம்
கருணையாற் றடுத்தியோ ஏதோ

இரக்கும் என்முகம் பார்த்தருள் இமவான்
இளம்பிடி கணவனு ருயிரைப்
புரக்கும் படியலால் வேண்டுவ னல்லேன்
பொழுதிது இரங்குவை யம்மா.

விரதத்தை முடித்தாள். மாமனையும் மாமியையும் வணங்கினுள். அவர்கள் திருவடியைக் கழுவிய நீரைப் பாரணையாக உண்டாள். முனிவர்களையெல்லாம் தனித்தனியாக வணங்கினுள். அவர்கள் யாவரும், ''சாவித்திரி! நீ சௌமங்கல்யத்தைச் செய்யக் கூடிய விரதத்தில் இருந்தாய். உன் விரத பூர்த்தி இன்றல்லவா? சுபமங்கலமாயிரு. எங்கள் தவசக்தியை உனக்களிக்கிறோம். நீ என்றும் சாவித்திரி தேவிபோல் தீர்க்க சுமங்கலியாயிரு. குழந்தாய்! யாரொருவர் உன் பெயரைச் சொல்கிறார்களோ, உன்னைத் தியானம் செய்கிறார்களோ, நீ அனுஷ்டித்த இந்தச் சாவித்திரி விரதத்தை இருக்கிறார்களோ அவர்கள் சுமங்கலிகளாக இருப்பார்கள். எண்ணியது பெறுவார்கள். இது எங்கள் சத்தியமான வசனம். சாவித்திரி! இயமன் நீ இருக்கும் திசைக்குக்கூட வரமாட்டான். மரணபயம் இல்லை. நீ சந்தோஷமாக உணவை யருந்து. இளைத்திருக்கிறாய்'' என்றார்கள்.

சாவித்திரி அவ்விதம் ஆகட்டும் — என்று மனதில் நினைத்து, ''பெருமைக்குரியீர்! யான் இரவு கண்டன்றி உண்ணேன். அப்படிச் சபதம் செய்துளேன். அதுவரை காத்திருப்பேன். அமருங்கள்'' என்று இனிமையாகச் சொன்னுள்.

## வழிக்குத் துணை

அப்பொழுது சத்தியவான் மரங்களைப் பிளப்பதற்குக் கோடரியும், விறகுகளை யொடிப்பதற்குக் கயிறும், கனிகளைக் கொணர்வதற்குக் கூடையும் எடுத்துக்கொண்டு கானகம் புறப்பட்டான். சாவித்திரி, அவனை விதிப்படி வழிபட்டாள். "நாயகரே! யான் இன்று உம்மைப் பிரியேன். என் விருப்பம் நிறைவுறும்பொருட்டு உம்முடன் இருப்பேன். கானகத்தின் அழகைக் காணுமாறு என்னை அழைத்துச் செல்லும். வேண்டுகின்ற என்னை மறுத்துச் செல்லவேண்டா" என்று வேண்டினுள்.

> எண்ணுமுப் பகலு நீங்கிநான் கெனுநாள்
> எய்தலு மேந்திழை தனது
> பண்ணுடைக் கேள்வன் தனக்கிது பகர்வாள்
> பார்தொழு பைங்கழ லரசே
> கண்ணகல் வனத்திற் செல்வது கருத்தேற்
> கானகங் காணுமா றுன்பின்
> நண்ணுவன் அருள்செய் துடன்கொடு சேர்தல்
> நலமெனக் கணவனு நவில்வான்.

பார்தொழு பைங்கழல் அரசே! என்று சத்தியவானைச் சாவித்திரி அழைக்கிருள். இளஞ் சிருனையிருந்தபோதே கானகம் வந்தவன் சத்தியவான். இளவரசுப் பட்டமும் இல்லை. மறமிருந்தும் பகை வெல்லுந் திறமிருந்தும் தந்தையா ராணையின்மையால் தன்னுட்டைத் திரும்பப் பெறும் நோக்கமின்றித் தவத்தில் நின்ருன் சத்தியவான். அவனைத் தான் பார்தொழு பைங்கழல் அரசே! என்கிருள் சாவித்திரி. பாரைத் தான் தொழுது கொண்டிருந்

தான். பார் தொழவில்லை. ஆனால் இனி இன்று முதல் பார்—மன்னர்கள் உம்மைத் தொழுவார்கள். ஏன்? வீரகண்டாமணி கட்டிய திருவடிகளையுடையவரா யிருப்பீர்! உமது நாடு உமது ஆட்சியில் வந்து சேரும். என்ற குறிப்புந் தோன்றப் பார்தொழு பைங்கழல் அரசே! என்றாள். இன்னும் கற்பின் மிக்க சாவித்திரிக்குக் கணவன் என்று சராசரமும் தொழும்; நிலமகளுந் தொழுவாள் என்று, பார்தொழு பைங்கழல் அரசே! என்றது.

பதியின் மரணதினம் இன்று என்று தெரிந்த சாவித்திரி, கட்டைபோலானாள். துக்கம் மிகுதியா யிற்று. கடந்த இரவானது துன்பத்துடன் கழிந்தது. இதுதான் அவளுக்குக் கடைசி இரவோ-என்று எண்ணி ஏங்கினாள். நாரதரால் குறிப்பிடப்பட்ட அந்தப் பர்த்தாவின் மரண தினம் இன்று என்று நன்றாக நிச்சயத்துக்கொண்டாள். கொதிக்கின்றதும் ஜ்வலிக்கின்றதுமான அக்கினிக்கொப்பான விரதத் தைப் பூர்த்தி செய்து அணுக முடியாதவளாக இருந் தாள். போர்க்கருவியில்லாமலேயே போருக்குப் புறப்பட்டவளைப்போல் இருந்தாள். எது நடக்கக் கூடாதோ எது பயங்கரமானதோ எது தவிர்க்க முடி யாததோ எது தேவர்களால் வழிபடப்பெறும் நாரத ரால் உரைக்கப்பட்டதோ அந்த மரணம் எப்பொழுது நிகழும்? என்று எதிர்பார்த்துக்கொண்டிருந்தாள். அந்தக் காலத்தையும், அந்த முகூர்த்தத்தையும், எதிர் நோக்கியிருந்தாள். அதனையே சிந்திப்பவ ளானாள்.

அவள் கண்களுக்கு வேறு பொருள்கள் தெரிய வில்லை. கணவனையே பார்த்துக்கொண்டிருந்தாள். அவள் காதுகளுக்கு வேறு ஒலிகள் கேட்கவில்லை. கணவன் உரைப்பதும் அவனிடமிருந்து வரும் ஒலிக் குறிப்புக்களையும் உற்று நோக்கிக் கொண்டிருந்தாள். அவள் மனம் வேறு எதையும் நினைக்கவில்லை. அவள் யாருடனும் பேசவும் இல்லை. சிவ நாமங் களையே சொல்லிக்கொண்டிருந்தாள். "இன்று எக் காரணத்தைக் கொண்டும் அவரை நான் பிரிவ தில்லை. காட்டுக்குப் போகுமிடத்தில் எங்கு என்ன நிகழுமோ? ஆகவே அவரை நிழல்போல் தொடர் வேன்" என்று உறுதிப்படுத்திக்கொண்டாள். 'யானும் கானகம் வருவேன்' என்ருள்.

மனைவியைக் கண்டு வியந்த சத்தியவான், இவள் உபாசிக்கின்ற தேவியைப் போலவே யிருக் கிருள் என்று நினைத்து, "கண்ணே! நீ இளைத்திருக் கிருய். இதற்கு முன் நீ காட்டிற்கு வந்ததில்லை. வழியுந் துன்பமானது. எப்படி நடப்பாய்? இரவு கண்டன்றி உண்ணேன் என்கிருய்? ஆகவே வேண்டா. நில்; யான் விரைந்து வருவேன்" என் ருன். அதற்குச் சாவித்திரி "இன்று நீர் ஒருவராகச் செல்லலாகாது. நான் உம்முடன் வருவேன். உம் மைப் பிரிவதை என்னுற் பொறுக்க முடியாது. எனக்கு வாட்டமில்லை; களைப்புமில்லை; விரும்பு கிறேன்; வேண்டுகிறேன்; தடுக்காதீர்கள்; அழைத் துச் செல்லுங்கள்; யான் வருவது உங்களுக்குத் துணையாகும்" என்ருள். "ஒகோ! வழிக்குத்

துணையா? அப்பா, அம்மாவைக் கேட்டுக்கொள். அந்தக் குற்றம் வரக் கூடாதல்லவா?'' என்று சத்தியவான் சொன்னான்.

பெரிய விரதமுள்ள சாவித்திரி, மாமனாரையும் மாமியாரையும் வணங்கினாள். "யான் காட்டைப் பார்க்க விரும்புகிறேன். அழைத்துச் செல்லுமாறு, உங்கள் பிள்ளைக்குக் கட்டளையிடுங்கள். அவர் பழங்களை எடுக்கச் செல்லுகிறார்'' என்று வேண்டினாள். துயுமத் சேனர், கேட்டார். "குழந்தாய்! நீ கானகம் போக வேண்டுமா? நாளை போகக் கூடாது? இன்று பாரணை உணவு செய்யவில்லை. இளைத்தும் களைத்தும் உள்ள நீ கானகத்திற் செல்வது துன்பம். தடுப்பதற் காக வருந்தாதே. திருமணமாகி வந்த பின் நீ உனக் காக ஒன்றையும் கேட்டதில்லை. வழிபாட்டிற்கு மலர்களைக்கூட யாசித்ததில்லை. யாதொன்றையும் கேட்டுப் பெறாத நீ, இன்று கானகம் செல்ல விரும்பு கிறாய்; விடை கேட்கிறாய். எப்படித் தடுப்பேன்? சுமங்கலி யாகிய நீ, மலரைக் கூட உன் கணவனிடம் கேட்டதில்லை. அவரவர்கள் பொன்னுக்கும் பொரு ளுக்கும் கணவனை ஏவுகிறார்கள்; வறுத்தெடுக் கிறார்கள்; உயிரெடுக்கிறார்கள். நீயோ ஒன்றுமே கேட்டதில்லை. என்ன தர்மம்! அம்மா! உன்னைத் தடுக்க எனக்குச் சக்தியில்லை. 'வேண்டாம் நில்' என்று வேண்டுகிறேன். நாளை போகலாம்'' என்றான் உருக்கமாக.

''பிதாவே! எனக்கு நீங்கள் பூஜிக்கத் தக்க வர்கள். எனக்கு இன்பத்தையும் சௌமங்கல்யத் தையும் தரும் கணவனைத் தந்தீர்கள். நீங்கள் பெரிய தெய்வம். உங்கள் சொல் வேதத்திற்கு

நிகரானது. உங்கள் சொல்லேத் தாண்டுதலாகிய பாவத்தைச் செய்யமாட்டேன். தன்னே யீன்றவனும் வளர்த்தவனும் தந்தை. தன் கணவன் அல்லது மனேவியின் தந்தையும் தனக்குத் தந்தைதான். உபகரித்தவன் ஒரு தந்தை. கல்வி யுரைத்தவன் தந்தை. இவர்களுக்கு அவன் மகன்—மகளாகிருன். தனக்கு மூத்த சகோதரன் ஒரு தந்தை. இவர்கள் சொற்களே மீறக் கூடாது. அப்படியாளுல், நீங்கள் எனக்குத் தந்தை. நான் உங்களுக்குச் சேய். தன் இளேய தம்பியும் தனக்குக் குழந்தை தான். அவனேக் கவனிப்பதில் அசிரத்தை கூடாது, அன்பைச் செலுத்துகின்ற போது, ஆலோசனே கூடாது. அதற்காக அடுத்தவர்கள் உரை தேவை யில்லே. தன் குழந்தையைக் காக்க ஆலசியம் ஏன்? காலத்திளுற் செய்யாத நன்மை கெடும். எனவே யான் உங்கள் குழந்தை. எனக்கு நன்மை செய்ய இது காலம். குழந்தைகள் விரும்புவதைக் கொடுக் காமலிருக்கலாமா? நான் உரிமையினுல் கேட் கிறேன். இப்பொழுது இவரைப் பிரிவது சரியல்ல. இவரைத் தடுத்து நிறுத்தவும் முடியவில்லே. பெரிய வர்கள் காரியமாகப் போகிருர். அக்னிகோத்ரத் திற்கு வேண்டியவைகளேக் கொண்டுவரப் போகிருர். வேறு செயலாகப் போளுல் தடுக்கலாம். யானும் இங்கு வந்து ஓரியாண்டாயிற்று. இதுவரை வெளி யில் போனதில்லே. இன்றுதான் போகிறேனே? பூத் திருக்கும் காட்டைப் பார்க்க அழகாக இருக்கும். அதிலும் இன்று, அவருடன் இருக்கப் பெரிதும் விரும்புகிறேன்'' என்று சாவித்திரி கூறினுள்.

சைப்யை மருகியை அணைத்துக்கொண்டாள்: "செல்வமே! இதற்கு எங்களைக் கேட்க வேண்டுமா? கணவனோடு செல்ல, ஆணையெதற்கு? சென்று வா? குழந்தையைக் கணவனுடன், போய் வருமாறு சொல்லுங்கள்" என்று, கணவனிடமும் கூறினாள்.

துயுமத்சேனர், "மகனே! சத்தியவான்! சாவித்திரியை அழைத்துக்கொண்டு போ. விரைவில் வா. குழந்தையை அதிகம் காட்டுக்குள் அழைத்துச் செல்லாதே. வேடிக்கை பார்ப்பதற்காக, உயரமான மலைகளில் ஏறாதே. இங்கும் அங்கும் அலையாதே. கிடைத்த பழங்களைக் கொண்டு விரைவில் வந்து விடு. அவர் அலையத் தக்கவளல்லள். அம்மா! சாவித்திரி! கணவனுடன் போய் வா. அதிக நேரம் நீட்டிக்காதே. எனக்கு இப்பொழுது சத்தியவானைப் பிரிய முடிகிறது. உன்னைப் பிரிய இயலவில்லை. உன் குரலைக் கேட்டுக்கொண்டே இருக்க விரும்புகிறேன். கண் இல்லாதவன் எனக்குச் சத்தியவான் கண்; அதன் ஒளி நீ. நீயின்றி நாங்கள் யாருமில்லை. எங்களுக்கு எதுவுமில்லை. சுகத்தைச் செய்பவளான உன்னை விட்டுச் சத்தியவான் எப்படித்தான் பிரிந்து நாள்தோறும் கானகம் போகிறானோ? பாவம்! அவன் தர்மத்தை விடாதவன். சரி. நீ சூரியன் சாய்வதற்குள் வந்துவிடு. விளக்கு வைக்க நீ இங்கிருக்க வேண்டும். கால விரையஞ் செய்யாதீர்கள்."

சாவித்திரி கேட்டாள். 'திரும்பி வருவதா? அதுவும் நடக்குமோ? என் மாமனார் தவ சீலர். அவர் வாக்கு பொய்க்காது. ஆகவே நாங்கள் வந்தாலும்

வந்து விடுவோம். பார்க்கலாம்' என்று நினைத்து, "பிதாவே! உங்கள் உறுதியான வாழ்த்துக்களினுல் என் நாயகர் வருவார். அவருடன் யானும் வருவேன். என் விருப்பம் எப்பொழுது பூர்த்தியாகும் என்று தெரியவில்லை. எவன் தன் மூத்த சகோதரனைத் தந்தையாக எண்ணுதவனே, அவன் புகழ் ஓடுவதைப் போல், என் வினைகள் ஓடட்டும். சர்வ நிச்சயமாக வருவேன் என்று எண்ணுகிறேன். அது அப்படியே ஆகட்டும்" என்ருள். பூஜ்யர்களின் உரைகள் எல்லாம் பொய்க்கக் கூடாது; என்று மனதில் வேண்டிக்கொண்டாள்.

துயுமத்சேனர் "நல்லது; உள்ளே போய், வழிபாட்டறையில் திருநீறிட்டுக்கொண்டு போய் வா" என்ருர். சாவித்திரி அம்பிகையைத் தொழுதாள். திருநீற்றுக் காப்பிட்டாள். மீளவும் பெரியவர்களை வணங்கினுள். விடை பெற்ருள். கணவனுடன் புறப்பட்டாள். சத்தியவான் பல இடங்களையும் காட்டிக்கொண்டே சென்ருன். சிரிக்க முடியாத சாவித்திரி சிரிப்பவளைப்போலவே இருந்தாள். கணவனை விட்டு நீங்காமல் நெருங்கிச் சென்ருள். பக்கத்திலேயே நடந்தாள். அவன் கைகளைத் தன் கைகளால் அழுத்தமாகப் பற்றிக்கொண்டாள். பயத்தாலும் உணர்ச்சியாலும் கைகள் நடுங்கின. வியர்த்தன. "என்ன இது சாவித்திரி?" என்ருன். 'ஒன்றுமில்லை' என்ருள். "ஒகோ! விரதத்தால், நீ பலமிழந்துவிட்டாய்; அதனுல் உன் கைகள் நடுங்குகின்றன" என்ருன். "சாவித்திரி! நீ அரண்மனையை விட்டு வந்தபின் நல்ல உணவில்லை. பாவம்! என்னை மணந்ததனுல்

நீ இப்படியானாய்? உனக்கு நல்ல உணவுகளைக் கூடக் கொடுக்க முடியாதவனாக இருக்கிறேன்'' என்றான் சத்தியவான்.

சாவித்திரி அவசரமாக அவன் வாயைப் பொத்தினாள். ''என்ன இது? என்ன பேச்சு? அமிர்தம் போலே, எனக்குத் தாங்கள் கிடைத்திருக்கிறீர்கள். அதைவிட என்ன? மற்றவர்களுக்குக் கிடைக்காததல்லவா அது?'' என்றாள். நான்கு பக்கங்களிலும், நன்கு பார்த்துக்கொண்டு செல்லும் சாவித்திரிக்குக் கணவன் காட்டும் காட்சிகள் கண்ணுக்குத் தெரியவில்லை. ஆம். ஆம். என்று தலையாட்டிக் கொண்டே நடந்தாள். அப்பொழுது அவள் கயவர்களைப் போலே இருந்தாள். நினைப்பது ஒன்று, பேசுவது ஒன்று, செய்வது ஒன்றாக இருந்தாள். பாவம்! என்ன செய்வாள்? அவள் துன்பம் பெரியது!

சத்தியவான் ஒரு யாண்டுக்குப் பிறகு புதிதாக இப்பொழுது சாவித்திரியுடன் நடக்கிறான். பாவம்! அவனுக்குக் களிப்பு. அவன் உல்லாசமாக நடக்கிறான். பேசிக் கொண்டும், சிரித்துக் கொண்டும், அடிக்கடி மனைவியைப் பார்த்துக்கொண்டும்; உவகையாக நடக்கிறான். அவன் கேட்கும் கேள்விகளுக்கு, மனைவி பதில் சொல்கிறாளா? இல்லையா? என்பதைக் கூட அவன் கவனிக்கவில்லை. அப்படியொரு மகிழ்ச்சியில் செல்கிறான்.

''சாவித்திரி! விசித்திரமான இக் காட்டைப்பார். என்ன அழகாயிருக்கிறது? விசாலமான கண்களை

யுடையவளே! தோகையை விரித்த மயிலைப் பார்; அதன் ஆட்டத்தைப் பார்; நன்ருக உற்றுப் பார்; உனக்கு ஏதாவது தெரிகிறதா? ஆடும் மயில் மேல் ஆறுமுகன் அமர்ந்திருப்பது போல் தெரியவில்லை? அப்படிக் கற்பனை பண்ணி அந்த மயிலைப் பார்; அந்த முருகன் கையில் ஞான வேலும், அது மரணத்தைத் தவிர்ப்பது; பூரண ஞான சத்தியது. சேவலும் கொண்டிருக்கிருன். குக்குடங் கூவினுல், புவனகிரி சுழலும். ஆதிசேடன் அஞ்சுவான். இயமன் நடுங்குவான். சாவித்திரி! மனிதர்கள் ஒரு காலத்தில் தனித்தும் பயங்கரமானதுமான தொலையா வழியில் எருமை மாட்டானுடன் செல்லப் போகிருர்கள். துணையற்ற வழியது. அந்த வழிக்குத் துணை வடிவேலும் மயூரமும். இப்பொழுது நமக்கும் அவைதான் துணை. உனக்குத் தெரிகிறதா?'' என்ருன்.

சாவித்திரி அப்படியே ஆகுக; என்று நினைந்து, ''காதலரே! நீங்கள் சிறந்த பக்தியுடையவர். காட்டு மயிலைப் பார்த்ததும் வேலும் முருகனும் நினைவுக்கு வருகிறது. நான் சிறியவள் எனக்கு என்ன தெரிகிறது. நீங்கள் சொல்லிக் கொடுப்பதைத் தெரிந்து கொள்கிறேன். மயிலைப் பார்ப்பவர்கள் எல்லாம் இப்படியா நினைக்கிருர்கள்? சிவ சிவா! அதன் பீலியைப் பிடுங்கத்தான் நினைப்பார்கள். நல்லவர்கள் அப்படி நினைப்பார்கள்; அல்லாதவர்களோ?'' என்ருள்.

சத்தியவான், ''சாவித்திரி! நீ அழகாகப் பேசுகிருய். மயிலைத் தின்பதற்காகக் கொல்லுவார்கள் என்கிருய்? அப்படித்தானே ? ஊன் வளர்க்க ஊனை

உண்ணுகிருர்கள். அவர்களுக்கு நரகந்தான். அவர்கள் நரகத்தில் விழுந்துவிட்டால் தப்புவதேது? அவர்களை விடுதற்கு நரகம் வாய் திறக்குமா?

உண்ணுமை யுள்ள தறநிலை யூனுண்ண
அண்ணுத்தல் செய்யா தளறு.

மயிலைக் கண்டால், சேவலைக் கண்டால், ஆட்டைக் கண்டால், முருகன் நினைவு வர வேண்டாவா? முருகா—என்று கும்பிடவேண்டும்.

சாவித்திரி! அன்பே! உன்னைப்போல் தூய்மையாக ஓடும் நதியைப் பார். இந்த நதியில் முழுகிஞல் பிறவித்துன்பம் தொலையும். எத்தனை அழகாக ஓடுகிறது. கணவன் வீடு செல்லும் பத்தினிப் பெண்களைப்போல் ஓடுகின்றது. அவர்கள் சும்மா போவார்களா? எதையும் கையுறையாகக் கொண்டு போவார்கள். அது போல் மலையிற் பிறந்த நதி, கடலைநோக்கிப் போகிறது; மலைச் செல்வங்களாகிய அகிலுஞ் சந்தனமும் யானைகளையும் கொண்டு போகின்றது; முத்தும் பவளமும் கொண்டு செல்கின்றது; நெல்லை வரன்றிக் கொண்டு போகின்றது. தாய் வீட்டிலிருந்து கணவன் வீட்டிற்கு யாவற்றையும் எடுத்துச் செல்லப் பெண்களுக்குத்தான் எத்தனை ஆசை? அப்பா! ஒன்று விடாமல் எடுத்துச் செல்வார்கள். அந்தத் தாயும் சலிக்காமல், மூட்டை கட்டுவாள். இங்கு மலைத் தாயும் மகளுக்கு எப்படி மூட்டை கட்டுகிருள் பார்.

இன்பமே! நதிகளை இறைவஞக நினைந்து முழுகவேண்டும். இறைவன் தானே தண்ணீராக

வந்து அருள்கிறார். அப்படி முழுகினால்தான் பிறவி நோய் போகும். 'சென்றாடு தீர்த்தங்களானான் கண்டாய்.' என்றார்கள். சிலர் 'கர்மம்' என்று முழுகு கிறார்கள். சிலர் 'சனியன்' என்று தண்ணீர் கொட்டிக் கொள்கிறார்கள். அவர்களுக்கு என்ன வரும்?'' என்று இனிமையுந் தெளிவும் நிறைந்த சொற்களைச் சொல்லிக்கொண்டு நடந்தான்.

சாவித்திரி, எல்லா நிலைமைகளிலும் பர்த்தாவை நன்கு பார்த்துக்கொண்டே நடந்தாள். நாரதர் சொன்ன காலத்தால் சத்தியவான் இறந்து விட் டானோ? என்று எண்ணினாள். அவர் வாக்கில் வைத்த நம்பிக்கையினால் சத்தியவான் மரண மடைந்து விட்டான்; என்றே உறுதிப் படுத்திக் கொண்டாள். அவன் ஆவியுடன் போகிறோமோ? என்று ஐயுற்றாள். தன்னைக் கிள்ளிப் பார்த்துக் கொண்டாள். தன் மனதை இரண்டாகப் பிரித்து காலத்தை இரண்டாகப் பிரித்து காலத்தை எதிர் பார்த்தும் சத்தியவானை அனுசரித்தும் மெல்ல நடந்து கொண்டிருந்தாள். அவன் சொல்வதற்கெல்லாம் 'அப்படியா; ஆம்; சரி; உம்' .என்று கேட்பவளைப் போலே, சொல்லிக்கொண்டிருந்தாள்.

அரவுடை மணியு மாரமும் வரன்றி
யருவிகள் வருவன வொருபால்
விரவிய வமையினிறுத் கலைந்தாரி
விண் மழை போல்வன வொருபால்
கரமெனக் காந்தட் செம்மலர் அலர்ந்து
காட்டெரி கடுப்பன வொருபால்
குரவணி குழலார் எயிற்றியர் மகிழ்வாற்
குரவையாட் டயர்வொலி வொருபால்.

இருவரும் பழங்களைப் பொறுக்கினார்கள்; சமித்துகள் ஒடித்தார்கள்; தருப்பை கொய்தார்கள்; தழைகளையும் துளிரான குழைகளையும் சேகரித்தார்கள்; அங்கும் இங்கும் திரிந்து தேனையும் தினையையும் எடுத்துக் கொண்டார்கள்; அங்குள்ள மலைச் சாதியினர் பலரும் தங்கள் தங்கள் விருப்பத்தால் கையுறை வழங்கினார்கள். அவர்கள் அன்பையும் பரிவையும் கண்டு வியந்து மகிழ்ந்து மேலே நடந்தார்கள்.

குறப்பெண்கள், குளித்து முழுகி நனைந்த கூந்தலுக்கு அகிற் புகை யிட்டார்கள். அப்புகையை மேக மென்றஞ்சிக் குரங்குகள் மரமேறிப் பாய்ந்தன. மயில்கள் தோகை விரித்தார்த்தன. காட்டுத் தீயைக் கண்டு யானைகள் பிளிறின. இயமன், சத்தியவான் உயிரைக் கொண்டு போவானோ பார்க்கலாம் என்று கோபத்துடன் முருக்க மரங்கள் சிவந்து பூத்தன. பல வகையான பறவைகள், இவர்களுக்குக் குடைபோல் பறந்து மேலே வந்தன. சில பறவைகள் தண்ணீரில் முழுகி நனைந்த சிறகை விரித்து, உதறிச் சாரலை உண்டு பண்ணின. இரட்டையிரட்டையாக மானும், கடமையும், புலியும், சிங்கமும் சென்றன. பொருள் பொன்றினால் தீயவர்கள் நட்பை விடுவார்கள். ஆபத்து நெருங்கினால் நண்பனைக் காட்டிக் கொடுத்துவிடுவார்கள். அதுபோல், 'இந்தக் கற்புத் தேவதையால் இயமனுக்கு என்ன தீங்கு விளையுமோ! என்ன பழிவருமோ? அவனும் யானும் தெற்கேதான் இருக்கிறோம். அவனால் நமக்குந் துன்பம். கற்புள்ள பெண்களுக்குத் தீங்கு செய்யலாமா? இவன் எக்கேடாவது கெடட்டும்'

என்று தென்றலானது, தெற்கே யிருந்து, வடக்கே சென்றது.

இத்தகை சிறப்பாற் சிறந்துளபுறவத்
திறையுட னேகியெத் திசையும்
† பத்தியினுலவிப் பைங்கழுநீரும்
பானலும் மலர்ந்தவான் சுனையும்
தத்திய தரங்கக் குண்டுநீர் மலிந்த
தருக்குல நெருங்குகான் யாறும்
வித்தக னுணர்த்த நோக்கின ளன்றே
விளம்புகற் பருந்ததி யனையாள்.

சாவித்திரிக்கு இயற்கைக் காட்சியானது உமா தேவியையும் சிவபெருமானையும் நினைவூட்டியது. செங்கழுநீரும் ஆம்பலும் மலர்ந்த சுனை உமாதேவி யையும், தழையையும், மலரையுமுடைய தருக்களும், ஆறும் சிவபெருமானையும் நினைவூட்டின. அப்படியே தொழுதாள். காட்சிகளை யெல்லாம் சத்தியவான் காட்டுகிறான். உணர்த்துகிறான். ஆனால் இவள் உணரவில்லை; பார்க்கிறாள். அதைத்தான் 'வித்தக னுணர்த்த நோக்கினள்' எனப்பட்டது.

இருவரும் ஒரு சிறு குன்றில் ஏறி அமர்ந்தனர். "சாவித்திரி! எங்கே பார்க்கிறாய்? என்ன நினைக் கிறாய்? மாமன் மாமியை நினைத்துக்கொண்டாயா? ஓரியாண்டாயிற்றே? உன் தாய் தந்தையரை எண்ணினாயா? இருக்காதா? அவரவர்கள் ஒருமாதத் திற்கு மூன்று முறை தாய் வீடுபோய் வருகிறார்களே? நீ பாவம்! ஏன் இப்படி வாளா இருக்கிறாய்? என் மீது

---

†. பத்தி-வரிசை.

கோபமா?" என்றுசத்தியவான் சாவித்திரியின் முகத்தைத் திருப்பினுன். சாவித்திரி அவன் முகத்தைத் தன் இருகைகளாலும் ஏந்தி, அவனேயே பார்த்துக் கொண்டிருந்தாள். அப்படியே தழுவி அவன் மார்பில் சாய்ந்தாள். மிக மென்மையாக "ஒன்றுமில்லை. உங்கள் பக்கலில் இருப்பதே, எனக்குப் பேரின்பம். மற்றவைகள் அதற்கு முன் தெரியவில்லை" என்ருள்.

சத்தியவான் நடுங்குகின்ற அவளை அணைத்துக் கொண்டான். "தேவி! நீ மிகவும் விடாப்பிடியாக இன்று என்னுடன் வந்தாயே? ஏன்? அப்பா சொல்வதைத் தட்டும் அளவுக்கு அஞ்சாமை வந்து விட்டதே? உம். நினைத்ததைச் சாதிக்க வேண்டும். அப்படித்தானே?எல்லாம் உடன்பிறந்தகுணங்கள்"

சாவித்திரி, "நாயகரே! அப்படியொன்றுமில்லை. இன்று யான் உங்களைத் தனித்துவிட விரும்பவில்லை. வினையானது ஒருவன் பிறக்கும்போதே விதிக்கப் படுகிறது. இன்று மகத்தான செயல் நடக்கலாம். நீங்கள் சொல்லியதைப்போல் குணங்கள் உடன் பிறப்பவைதான். சகோதரர்களைப்போல் துணிவு-அஞ்சாமை இவைகள் இயற்கையாக ஏற்படவேண்டும். இடையில் வருவன இடையில் போகும். அது போல் இடையில் பொருள் பற்றி வரும் சகோதரர் களும் பொருள் தீர்வுழிப் போய்விடுவார்கள். இதை அறிஞர்கள் சிந்திக்க வேண்டும்" என்ருள்.

சத்தியவான் "பெண்ணமுதே! குணங்களைப் போல் சகோதரர்கள் என்ருல் தீய குணங்களும் இருக்கின்றனவே?" என்ருன்.

"ஆம் சுவாமி! நற்குணங்களைப்போல் நல்ல சகோதரர்களும், துர்க்குணங்களைப்போல் தீய சகோதரர்களும் வாய்க்கிருர்கள். அது அவரவர் வினையைப் பொறுத்தது. எல்லோரும் இராமரையும், பரதரையும்போல் இருக்கிருர்களா? ஒரு பெண்ணிற்காகத்தானே போரிட்டு மாண்டார்கள், சுந்தனும், உபசுந்தனும்? அவர்கள் சகோதரர்கள் தானே? பொருள், எத்தனை சகோதரர்கள் உள்ளத்தைக் கெடுக்கிறது? பொருளாசை சகோதரனை விஷம் என்று கூடச் சொல்லவைக்கிறது. பொருளால் சகோதரனைப் பகைவனுகக் கொள்கிருர்கள். சகோதரன் நின்ற இடத்தில் நிற்பதில்லை. 'அவனு? சண்டாளன்' என்பார்கள்- தர்மமும் நீதியும் அவர்கள் பார்ப்பதில்லை. பொருளால் பிணங்கி யழிந்தார்கள் விச்சுவாவசுவும், சுப்ரதீபனும். எங்கோ சில சகோதரர்கள் தானே சகோதரர்களைக் குழந்தைகளாகப் பார்க்கிருர்கள்?" என்ருள் சாவித்திரி.

"மாதரசே! பொருள் என்றதும் நினைவு வருகிறது. செல்வம் உடையவர்களிடம் மிகுதியாக வேலை யில்லாமல் போகக் கூடாது. எதற்கு வந்தானே? என்ன கேட்டுவிடுவானே? என்று அஞ்சுவார்கள். காரண மிருந்தால்தான் போக வேண்டும். இதன்படி ஒருவன் செல்வரிடம் செல்லாமலிருந்தால் அவர்களிடம் பயன் பெறும் சிலர் இவனைத் தூற்றுவார்கள். பொருளுடையாரும் வெறுப்பர். "எல்லோரும் என்னைப் பார்க்க வருகிருர்கள்? இவன் வரவில்லையே? ஒன்றும் இல்லாமல்

துன்பப்படுகிருன்? என்னிடம் அது இது வேண்டும்; என்று கேட்கவில்லையே? என்ன அகங்காரம்? எத்தனை அவமதிப்பு''? என்று எண்ணுவார்கள். அவரைச் சூழ்ந்தவர்களும் 'ஆமுங்க. அவன் அப் படித்தான். அரட்டை; சொல்பேச்சு கேட்காதது. விட்டுத்தள்ளுங்க.' என்பார்கள். தன்னை நாடி வரு வதற்கு வேண்டிய சூழ்வினைகளைச் செய்வார்கள். அவனுக்கு உதவும் உபகாரிகளைத் தடுத்து விடுவார் கள். அறிவமுதே! பொருளில்லார்க்கு எவ்வகை யிலுந் துன்பமே?

ஒன்றும் வேண்டல ராயினும் செல்வர்பால்
உறுமி டியவர் சார்ந்தால்
இன்று வந்தமையாதினைக் கருதி
மற்றிவரென உளத்தெண்ணிக்
கன்றுமாறுபல் குறிப்புரை நவிற்றுவர்
காதலினவர்பாற் போய்
மன்ற வந்தது சிறுமையே யவர்க்கன்றி
மற்றிலை யறிபாவாய்.

—மகாவித்துவான் மீனாட்சிசுந்தரம் பிள்ளை.

என்று பேசிய சத்தியவானைச் சாவித்திரி நோக் கினாள். "எல்லோருமா அப்படி? வள்ளல்கள் இருக் கிருர்களே? யயாதி இல்லையா? சிபி இல்லையா? இவர்களெல்லாம், தங்கள் செல்வத்தைப் பிறர்க்கு வழங்கியவர்கள் தானே?'' என்ருள். "ஆம், அது உண்மை. செல்வத்தின் மீது வைத்த ஆசையைத் தெய்வம் வரைக்கும் கொண்டு போகிருர்கள். கட வுளுக்கும், பொன்னையும் மணியையும் இட்டு நிரப் பிச், செல்வச் சாமியாக ஆக்கி அதனைக் கண்டு

சிலர் செல்வச் செழிப்புள்ள கோயில்கட்குப் போவதும், அப்படிப் போவதைப் பெருமையாக எண்ணுவதும், அப்படியான கோயில்கட்கே திருப்பணி செய்வதும், அந்தத் திருப்பணிக்கு யாவரும் வாரி வழங்குவதும், கடவுளே! மிக்க விந்தை! ஊர் மூலேயில் ஓட்டைக் கோயிலில் பிள்ளேயார் இருந்தால், யார் கவனிக்கிருர்கள்? நடுவில்தான் இருக்கட்டுமே? அப்பொழுது மட்டும் வணங்குவார்களா? திருப்பணி செய்வார்களா? செய்கிறேனென்ருல் பொருள் தருவார்களா? போடா வேலே இல்லே. என்பார்கள். பெண்கள் நாயகமே! பொருள் உலகத்தை மிக ஏமாற்றி விடுகிறது. அறிவாளிகளே ஏமாந்துவிடுகிருர்கள்'' என்ருன் சத்தியவான்.

இருவரும் இறங்கி, ஒரு பொழிலுக்குச் சென்ருர்கள். ''சாவித்திரி! நாம் மறுபடியும் இங்கு வரப் போகிறேமா? இதுதான் கடைசி என்று எண்ணுகிறேன்'' என்ருன். திடுக்கிட்ட சாவித்திரி, ''ஏன்? அப்படிச் சொல்கிறீர்கள்? நாம் நகரத்திற்குப் போய் விடப் போகிறேமா?'' என்று கேட்டாள்.

சத்தியவான், ''ஒரு வேளே போனுலும் போகலாம். பாக்கிய லட்சுமி, நீ வந்திருக்கிருயே? ராஜ்ய லட்சுமியும் வரும். ஓட்டைப் பானேகூடக் கொண்டு வராத எத்தனேப் பெண்கள் என்ஞல்தான் என் கணவருக்குப் பேறு கிட்டியது? என்கிருர்கள்? கற்பரசியாகிய நீ காலடி வைத்தால் காசினி வாராதா? நான் அதற்குச் சொல்லவில்லே. ஆசிரமத்திலிருந்து மறுபடியும் எங்கே வரப்போகிறேம்? ஒரு யாண்டுக்

குப் பின் இப்பெழுதுதான் வந்தோம். உனக்கோ, ஓய்வில்லை. மாமனுர் மாமியாரைக் கவனிக்கச் சரி யாக இருக்கிறது? அம்மாவா, அப்பாவையே கவனிக் கிருர்கள்? உம். என்னை நான்தான் கவனிக்கவேண் டும். யார் கவனிக்கப் போகிருர்கள்?'' என்ருன்.

சாவித்திரி, அவனுக்கு முன்னே வந்து அப் படியே தழுவிக்கொண்டாள். அன்பைக் குழைத் துக் கொஞ்சலாக, "ஊஉம். பேச்சைப் பார்! என் கண்ணுவைக் கவனிக்காமலா! உங்களைத் தானே மிகுதியாகக் கவனிக்கிறேன். நீங்கள் என் உயி ரில்லையா? இனி, நாள் தோறும் உம்முடன் காட்டுக்கு வருகிறேன். சரிதானே? இப்பொழுது என் அன் பருக்கு மகிழ்ச்சியா?'' என்ருள்.

சத்தியவான், அவள் கன்னத்தைத் தட்டி; "உம். உம். கள்ளிதான்; சரி வா. நேரமாய்விட்டது. கொஞ்சம் விறகுகளை ஒடித்துக்கொண்டு போகலாம். பழக்கூடை நிறைந்துவிட்டது'' என்று, அங்கு உலர்ந்து பட்டுப் போன மரத்தைப் பிளந்தான். சாவித்திரி, தேவியைத் துதித்துக்கொண்டு கண வனையே பார்த்துக்கொண்டிருந்தாள்.

அப்பொழுது, நாரதர் குறிப்பிட்ட அந்தக் காலம் வந்தது. சத்தியவான் கைகள் நடுங்கின. கால்கள் நிலை பெயர்ந்தன. கண்கள் இருண்டன. உடல் வியர்த்தது. மெய் சோர்ந்தது. மனந் தடு மாறியது. விறகைப் பிளப்பவனுகிய அவன், தன்னை யும், தன் தொழிலையும் உணராதவனுக நிலைகுலைந்து கீழே வீழ்ந்தான். ஓடிச் சென்று, அவனை அப்படியே

தாங்கிக் கொண்டாள். மின்னல் வேகத்தில் சாய்கின்ற அவனைத் தன் மடியில் இருத்தி அமர்ந்தாள் சாவித்திரி. சுகமாகப் படுக்க வைத்தாள். கண்களை மூடியுள்ள அவனையே பார்த்துக்கொண்டிருந்தாள். தேவியை மறக்கவில்லை.

கரங்களும் பதமு நடுங்கிய விழிகள்
கவினுறச் சுழன்றன வென்னுச்
சிரந்தனைத் தேவி மடிமிசை யிருத்தி
யேயமன் மகனிலஞ் சேர்ந்தான்
உரந்தனில் வாடாமாலை நின்றிலங்க
உயர்வலிப் பாசமுந் தண்டும்
வரங்கொள வேந்தி மாதெதிர் நின்ருன்
மறமுடைத் தென்புல மன்னன்,

'பாசமும், தண்டும், தானும் சாவித்திரியிடம் வரத்தைக் கொள்வதற்காக நின்ருன்' என்ற குறிப்புத் தோன்ற,'வரங்கொள நின்ருன்' என்றது. வந்தவன் உயிர் பறிக்க அன்று; சாவித்திரி வரம்பெறவே என்பதுந் தோன்ற வரங்கொள எனப்பட்டது.

சாவித்திரியைத் துதித்துக்கொண்டே கணவன் முகம் உடல் எங்கும் தன் முன்தானையால் துடைத்தாள். கலங்காத நெஞ்சோடு, ஐந்தெழுத்தோதினுள். கையிருப்பாக வைத்துள்ள திருவெண்ணீற்றை எடுத்து இட்டாள். தானும் அணிந்துகொண்டாள். சிவநாமங்களைச் செபித்தாள். கண்களில் கண்ணீர் இல்லை.நெஞ்சில்படபடப்பு இல்லை. பயமில்லை. நடுக்கமில்லை. உறுதியாக நின்ருள். அசையாதவளானுள். மனம் அசையாது இறைவன் திருவடியில் கணவன் உயிருக்காக நின்ருள்.

சத்தியவான் கண்களைத் திறந்தான். மனைவியைப் பார்த்தான். உயர்ந்த தன் உதடுகளை நாவினுல் நீவினுன். மெலிந்த குரலில் பேசினுன். "நியமந் தவருதவளே! கட்டையைப் பிளப்பதினுல், எனக்குத் துன்பம் உண்டாயிற்று. வேர்வை மிகுந்தது. அந்தத் துன்பத்தினுல் என் தலையில் வலியுண்டாயிற்று. நான் சிரமத்தினுற் பீடிக்கப்பட்டேன். பிரியமானவளே! அங்கங்கள் சோர்வடைகின்றன. இறைவன் திருவடிக்கிடமான என் இதயம் பரிதாபத்தை அடைகின்றது. நான் நிலைமை தப்பினேன் கல்யாணி! திசைகளனைத்தும், ஏன் இப்படிச் சுழலுகின்றன? என் மனம் சக்கரத்தில் ஏறியிருக்கிறதா? என் தலையைக் கெட்டியாகப் பிடித்துக்கொள். அங்கேயாரோ சூலத்தாற் குத்துகிருர்கள் பார். யான் நின்றுகொண்டிருக்கிறேனு? அப்படியானுல் படுக்கவிரும்புகிறேன். தூங்குவதற்கு முயற்சிக்கிறேன். தூக்கம் என் கண்களை அழுத்துகின்றது. சுகமானவளே! உன் குங்குமம் எனக்குத் தெரிகின்றது. என்னைப் படுக்கவை. நான் நினைவு தப்புவதற்கு முன் உன்னை நன்ருகப், பார்க்க விரும்புகிறேன்" என்ருன்.

பாவம்! படுத்துக்கொண்டிருப்பதை அவன் உணரவில்லை. அவனையே பார்க்கின்ற சாவித்திரி கலங்கவில்லை. வைராக்கியத்தாற் ஜ்வலிக்கின்ற அவள் உடலிலிருந்து ஒளி வெள்ளம் பாய்ந்து வந்தது. சிவாக்கினி அவனைச் சூழ்ந்து நின்றது. தவத்திற் சிறந்த சாவித்திரி நடுங்காமல் மனதை நிலைநிறுத்திக்கொண்டு சிவபஞ்சாட்சரத்தைச் செபித்துக் கொண்டிருந்தாள். மரங்கள் அசையவில்லை. காற்று

நின்றுவிட்டது. இயற்கை ஸ்தம்பித்துவிட்டது. விலங்கினங்கள் ஓடவில்லை. பறவைகள் பறக்க வில்லை. தேவர்கள் கண்கள் நிலை குத்தின. நாகர்கள் அஞ்சினர்கள். உலகம் தன்னைச் சுற்றுவதிலிருந்து ஒரு விநாடியில் நூறாயிரங்கோடியில் ஒரு பகுதி நிறுத்திக்கொண்டது. உமையவள் கைலையிலிருந்து எழுந்துகொள்ளத் துடித்தாள். பிரானைநோக்கினாள். தரும விடை தயாராக நின்றது. ஐம்பெருந் தலைவர் களும் உலகம் அழியுமோ என அஞ்சினர்கள். சிவ பெருமான் தேவியை நோக்கினர். புன்னகை செய் தார். வலக்கரத்தை யெடுத்து அபயமளித்தார்.

சிவமந்திரங்களினால் கவசத்தைத் தரித்த சாவித்திரி கணவனை உற்று நோக்கினாள். தன் கைகளால் அவன் உடம்பு முழுவதையும் தடவிக் கொடுத்தாள். "கஷ்டம்! அந்தக் காலம் இதோ வந்து விட்டது. அந்தத் தினமும் அந்த முகூர்த்த மும் அந்தக் கணமும் அந்த வேளையும் இதுதான் போலும்" என்று நினைத்துக் கொண்டாள். சிவா! சிவா! என்று துதித்தாள். சத்தியவான் வாக்கி லிருந்து சிவ நாமங்கள் வந்தன. அப்பொழுது யாருக்கும் ஏற்படாத ஒரு அதிசயம் சாவித்திரிக்கு ஏற்பட்டது. கணவனைப் பார்க்கின்ற அவள் கண் களுக்குக் கரிய இரண்டு கால்கள் தெரிந்தன. அவை கணவன் பக்கத்திலேயே இருப்பதைப் பார்த்தாள். கால்களைப் பார்த்துக்கொண்டே நிமிர்ந்து பார்த் தாள்.

அங்கே சிவப்பு மாலையும் அதுவே நிறத்தில் ஆடையுந் தரித்தவனும், மணிகளாலியன்ற திருமுடி

புனைந்தவனும், ஒளி நிறைந்தவனும், கரிய நிறத்த வனும், நெற்றியில் திருநீறும் கழுத்திலும் தலையிலும் உருத்திராக்கந் தரித்தவனும், சிவநாமங்களைச் சொல் பவனும் கையிற் பாசமுடையவனும், தருமந்தவருத வனும், சூரியனைப் போன்றவனும், பயத்தைச் செய்ப வனுமான இயமன் நின்றிருத்தான். அவன் பக்கத் தில் மிகப் பெரிய வடிவத்தை யுடையதும், கரிய நிறத்ததும், சிவந்த கண்களை யுடையதும், நஞ்சு போன்றதும் கூர்மையானதும் முறுக்கேறியதுமான நீண்டு விரிந்த கொம்புகளை யுடையதும், எடுத்து வைப்பதால் ஒலி எழுப்புகின்ற குளம்புகளோடு கூடிய கால்களை யுடையதும், பார்ப்பதற்குப் பயங்கர மானதுமான எருமை நின்றிருந்தது. இயமன் கையில் சூலத்தைக் கொண்டிருந்தான்.

பதிவிரதையாகிய சாவித்திரி பார்த்துக்கொண் டிருக்கும் போதே இயமன் பாசத்தை மூச்சிற் பிணித்து சத்தியவானை இழுத்தான். கட்டைவிரலள வுள்ள சத்தியவான் உயிரைக் கொண்டு தெற்கு நோக்கித் திரும்பிச் செல்வானுயினுன். சாவித்திரி அவன் நின்றதையும், கயிற்ருற் கணவன் உயிரை வலிந்து இழுத்ததையும், அவனைக் கொண்டு செல் வதையும் கண்டும் வெறித்து நோக்கி வாளா இருந் தாள். ஒரு இமை நேரத்தில் யாவும் நிகழ்ந்தன. சொல்வதற்கும் செய்வதற்கும் அவளுக்கு ஒன்றும் தெரியவில்லை. பிறகு தன்னுணர்வு அடைந்த சாவித்திரி குனிந்து சத்தியவானைப் பார்த்தாள். உயிர் வாங்கப்பட்டதும் ஒளி கெட்டதும் மூச்சுப் போனதும் அசைவற்றதுமான அவ்வுடல் குளிர்ந்

திருந்தது. முகத்தில் என்றும் நீங்காத புன்னகை ஒன்று மட்டுமே நிலைத்து நின்றது. சிவநாமங்களைச் சொல்வதுபோல் நின்ற இதழ்கள் சற்றுப் பிரிந்து நின்றன. கண்கள் மூடியிருந்தன.

சாவித்திரியின் தொண்டைக் குழியில் ஏதோ ஒன்று வந்து அடைத்துக்கொண்டது. பேசுவதற்குச் சக்தி யிழந்தாள். நினைக்க நேரமில்லை. காற்றைவிட மிகவேகமாக இயமன் போகிறான். தவத்தைத் தனமாகக் கொண்ட சாவித்திரி மிக்க விரைவில் தன் கணவன் தலைக்கு உயரம் வைத்து எழுந்தாள். 'யான் வருமளவும் இவ்வுடலை வனதேவதைகளும் விலங்கினங்களும் பறவைகளும் காக்கட்டும். கண்ணுக்குத் தெரியாத தேவர்கள் காக்கட்டும். தருமமும் சத்தியமும் காக்கட்டும். சிவபஞ்சாட்சரம் காத்து அருளட்டும்' என்று மனதில் வேண்டி இயமனைத் தொடர்ந்தாள்.

தவத்தையும் பத்தியையும் துணையாகக் கொண்டு மனதினும் வேகமாக ஓடினாள். அந்த வேகத்திலும் சிவநாமங்களை மறக்கவில்லை. இயமனை அணுகினாள்; வணங்கினாள். கை குவித்தாள். நடுங்கிய உள்ளத்தோடும் துன்பத்தோடும் "உம்மைத் தேவரென்று அறிகிறேன். தேவேசரே! நீர் யார்? உம்மையறிய விரும்புகிறேன். ஒளி மயமான இந்த உடம்பு மானிடர்க்கு உரியதல்ல. நீர் செய்வது என்ன? எதைச் செய்ய விரும்புகிறீர்? எனக்குச் சொல்லும். யான் பதியையே கடவுளாகக் கொண்டவள்" என்று வினவினாள்.

இயமன் அவளை நோக்கினன். 'என்ன விந்தை. இப்பெண்மணி என்னைப் பார்க்கின்ருள். பேசுகின்ருள். என்னுடன் தொடர்ந்து வருகிருள். என் வழியைத் தடைப்படுத்துகின்ருள். இவள் கேள்வி கேட்ட பின் பதில் சொல்லாமல் என்ஞல் போக முடியவில்லை. இவள் சிறந்த பதிவிரதை. வணங்குவதற்கு உரியவள். இவள் மனம் நோகக் கூடாது. நமக்குச் சாபம் ஏற்படாமல் பார்த்துக் கொள்ளவேண்டும்' என்று மனதினுல் எண்ணிச் சாவித்திரியைப் பார்த்தான். தாமரை போன்ற அவள் விழிகளில் திருவருள் தேங்கி நின்றது.

"தாண்ட முடியாதவளே! நீ பதிவிரதையாயிருக்கிருய். அப்படியே தவமுடையவளுமாகிருய். அதனுல் உன்னேடு பேசுகிறேன். உன்னுடன் பேசுவதில் எனக்கு மகிழ்ச்சி ஏற்படுகிறது. புதிய சக்தியுண்டாகிறது. சாவித்திரி! நீ என்னை எமன் என்று அறி. உன்னுடைய பர்த்தாவும் ராஜகுமாரனுமான, இத்தச் சத்தியவான் ஆயுள் முடிந்தது. பூமியில் வாழ வேண்டிய காலம் வாழ்ந்தான். நான் அவளைப் பாசத்தால் கட்டிக்கொண்டு போகிறேன். சுமங்கலி! இது என் தொழில் என்பதை யறிவாயாக" என்று பயந்தும் தெளிவாகவும் இயமன் கூறினன்.

நிற்க முடியாதவளான சாவித்திரி "பகவானே! மனிதர்களைக் கொண்டுபோவதற்கு உம்முடைய தூதுவரல்லவா வருவார்கள்? நீரே நேரில் வந்தது

யாது காரணம் பற்றி? பிரபுவே! கேட்பதற்காகக் கோபிக்காதீர்கள்'' என்று நயமாகக் கேட்டாள். தருமத்தில் நிலைத்த கூற்றுவன் நிம்மதியாக மூச்சை விட்டு சாவித்திரிக்குப் பிரியத்தைச் செய்ய விரும்பி தன் எண்ணம் முழுவதையும் சொல்லத் தொடங்கினன்.

''கடக்க முடியாதவளே! இவன் தருமந் தெரிந்தவன். சத்தியத்தில் நின்றவன். ஒழுக்கம் நிறைந்தவன். சிவ பக்தன். குணக் கடல். இவனை என் தூதர்கள் கொண்டு போக முடியாது. பாவிகளைத் தான் அவர்கள் பிடிப்பார்கள். பாவிகள் என்னைப் பார்க்க முடியாது. அவர்களிடம் யான் வரமாட்டேன். புண்ணியாத்துமாக்களுக்குத் தான் நான் வருவேன். அவர்கள்தான் என்னைப் பார்ப்பார்கள். மிகவும் கவுரவமாக அவர்களை அழைத்துப் போய் அவர்கள் புண்ணியத்திற்குத் தக்க நல்ல உலகங்களில் அவர்களையிருத்துவேன். கற்பரசி! சிவ பக்தர்களைச் சிவ கணங்கள்தான் அழைத்துப் போவார்கள். யார் ஒருவர் சிவ நாமங்களைச் சொல்கிருர்களோ, திருநீறும், உருத்திராக்கமும், அணிந்து சிவ புண்ணியச் சீலர்களாக இருக்கிருர்களோ அவர்களை யான் அணுக மாட்டேன். அவர்களைத் திசை நோக்கித் தொழுவேன். என் தூதுவர்களும் அவர்களிடம் போக மாட்டார்கள். உன் கணவன் சிறந்த சிவபக்தன். எதுவோ ஒரு சக்தி இப்பொழுது வேலை செய்கிறது. எனக்குக் கட்டளை அவ்வப்பொழுது அறிவிக்கப்படும். ஆகவே யானே வந்தேன்'' என்ருன்.

ஐயவுனைப் பணிவோனைப் பணிவோனைப்
பணிவோனை யவன்றன் பாதங்
கையதனுற் றெழுவோனைத் தொழுவோனைத்
தொழுவோனைக் கண்ணிற் கண்டால்
செய்ய வவ ரிருத்ததிக்குஞ் செலவேண்டா
வெனக்காலன் றிறற் றூதற்கே
உய்யவழைத் தவர்செவியிற் பையவொரு
கோடிபுத்தி யுரை செய்வானல்.

—சிவரகசியம்

"சாவித்திரி! திரும்பிப் போ. என்னை இது வரை பார்த்தவர்கள் கிடையாது. நீ மகா பதிவிரதை; போ. இவனுக்குச் செய்ய வேண்டிய ஈமக் கடன் களைச் செய். பர்த்தா விஷயத்தில் கடனுளியாகா திருத்தல் உன்னுல் செய்து கொள்ளப்பட்டது. நீ வரத் தக்க வரையில் வந்து விட்டாய். இனி வருவது முறையல்ல. வரவும் இயலாது. மனிதர்கள் வரமுடி யாத பகுதிகளில் நீ துன்பப் படுவாய். சிறந்தவளே! உன் மேல் எனக்கு அன்பு மிகுகிறது. செல்வாயாக" என்று நயமாகச் சொன்னுன் தருமக் கடவுள்.

கற்பினுக்கணியே தருமன் யானுனது
கணவன்வா ழுளகன் றிடலால்
நற்பெருங் குணத்தா னுதலால் யானே
நண்ணியாங் கவனுயிர் கவர்ந்தேன்
உற்பவமுளதேல் இறப்பதுண் டெவற்கு
முணர்குவை யொருவரு முணராச்
சிற்பரவுருவங் கண்டனை நினது
கற்பினைச் செப்புமா றெவனே.

மற்றைய மாதரார்கட்குக் கற்பு அணியா கின்றது. சாவித்திரி கற்புக்கு அணியாகின்ருள்.

அதனால் கற்பினுக் கணியே—எனப்பட்டது. கணவனைவிட்டுப் பிரியாத சாவித்திரி கட்டை விரலளவுள்ள தன் கணவனின் †ஆவி வடிவத்தையே பார்த்துக் கொண்டிருந்தாள். சிவநாமத்தை இடைவிடாது செபித்துக் கொண்டிருந்தாள். கூற்றுவனை வணங்கி "தருமாத்மாவே! பெண்கள் கணவனைப் பிரியலாகாது. கணவன் இறந்தபின் உயிர் வாழ்தல் தீது. அதற்குப் பின்னும் உயிர் வாழ்வதை விரும்பிக் கைம்பெண் விரதம் எடுத்துக்கொள்வது சிறந்ததல்ல. ஒரு பெண்ணுக்குக் கணவன், கணவன் மட்டுமல்ல. தெய்வமுமவனே. தெய்வத்தைப் பிரிந்து இங்கென்ன வேலை? இன்பமும், துன்பமும், மூச்சும் அவனாக இருக்கும்போது அவன் போன இடத்திற்குப் போக வேண்டியதுதானே? தெய்வத்தைப் பிரிந்து எப்படி வாழ்வது? கணவனையல்லாத உயிரில்லை. உயிர் பிரிந்தபின் எங்கு வாழ்வது? தேவரே! என் உயிரை நீங்கள் கொண்டு போகிறீர்கள். என்னை எங்குபோகச் சொல்கிறீர்கள்.

எப்பொழுது என் கணவன் உயிரைப் பற்றினீர்களோ அப்பொழுதே என் உயிரும் உணர்வும் உமக்கு வசமாயின. என்னைப் போகச் சொல்ல உமக்கு உரிமையில்லை. யான் என் பர்த்தாவை

---

†. ஆவி—நுண்ணுடம்பு; சூக்கும சரீரம் என்றும் பெயர். பருத்த இவ்வுடலுக்குள் இருப்பது. அவ்வாவியுடம்பைக் கொண்டு போய்ப் பூததநுவில் இடுவார்கள். சொர்க்கம் போனால், பூதசாரதநுவில் இடுவார்கள். ஆவி—நுண்மை. காயம்—தூலம். இரண்டும் அழியும். உயிர் அழியாது. அதனால் தான் 'ஆவியொடு காயம் அழிந்தாலும்'—எனப்பட்டது.

இயல்பாகவே தொடர்கிறேன். எந்த இடத்துக்கு என் பர்த்தா கொண்டு போகப்படுகிருரோ, அவர் எந்த இடத்திற்குப் போகிருரோ அந்த இடத்துக்கு நானும் செல்ல வேண்டும். அதுதான் எனக்குச் சாசுவதமான தருமம். பிரபுவே! நான் வருவது எந்த சக்தியினுலும் தடுக்கப்படவில்லை. ஆகவே யான் வருவது முறையென்று தெரிகிறதல்லவா? தவத்தாலும், குரு பக்தியாலும், பதி பக்தியாலும், உம்முடைய அநுக்கிரகத்தாலும் யான் வருவேன். என்னைத் தடுக்காதீர்கள்.

உம்மிடத்தில் நான் நட்பை யடைகிறேன் தத்துவார்த்தங்களை உணர்ந்த பண்டிதர்கள் நட்பைச் சிறந்ததென்று சொல்கிருர்கள். ஆகையால் நட்பை முன்னிட்டு ஒன்று சொல்லுகிறேன். உம்முடைய தருமத்தை நான் கெடுக்கவில்லை. என் கணவன் உயிரை விட்டு விடும்; என்று கேட்கமாட்டேன். அது பிழை. உமக்கு இறையவரால் விதிக்கப்பட்ட நியமப்படி தேவரீர் நடக்கிறீர். ஆகவே பற்றிய உயிரை விடவேண்டா. என்னைத் தருமத்தில் நடக்க நீர் விடவேண்டும். பெண்களுக்குத் தருமம் எது? கணவனை அனுசரிப்பது. பொறி புலன்களை யார் அவிக்கவில்லையோ அவர்கள் இல்லறமும் வானர்பிரத்தமுமாகிய தருமத்தையும் பிரமசரியத்திற்குரிய குரு குல வாசத்தையும் சர்வ சங்க பரித்யாக ரூபமான சந்யாசத்தையும் அநுட்டிக்கிறதில்லை. அவர்களால் அது முடியாது. நான்கு தர்மங்களிலும் எதில் அவர்கள் நின்ருலும் போலியாகத்தான் இருக்கும். சான்ருேர்கள் தருமத்தை முதன்மையாகச்

சொல்கிறார்கள். சூரியன் தருமத்தில் நிலை பெற்றிருக்கிறான். கடவுள் தரும வடிவாக இருக்கிறார். அதனால் அவருக்குத் தருமலிங்க மென்றும் தேவியாருக்குத் தரும சம்வர்த்தனி என்றும் திருநாமங்கள். அவர்களைத் தாங்குவது தரும விடை. நீங்கள் தருமத்தில் பிறழாதவர். அதனால் உங்கட்குத் தருமராஜா-என்று பெயர்.

ஆகவே தன் ஆத்ம ஞானத்திற்காகத் தருமத்தைச் செய்ய வேண்டும் என்று சொல்கிறார்கள். நான்கு தருமங்களிலும் ஆன்றோர்கள் கொள்வது ஒன்றே. அதுவே ஆத்ம ஞானத்தைத் தரவல்லது. அந்த அறம் இல்லறமாகும். கணவனும் மனைவியுமாக இருந்து செய்யும், கிருகதாசீர்மமே எவற்றினும் சிறந்தது. சாதுக்கள் இதனையே பிரதானமாகக் கொள்கிறார்கள். உலகமே அப்படித்தான் இருக்கிறது. பிதாவே! இறையவர் பார்வதி பரமசிவமாக, லட்சுமி நாராயணராக, சரசுவதி நான்முகராக, வள்ளியும் முருகனுமாகக் காட்சி யளிக்கிறார்கள். தேவரீரும் அப்படித் தானே விளங்குகிறீர்கள். ஆகவே நான் பிரமசரியத்தையும், சந்யாசத்தையும் விரும்பவில்லை. இல்லறத்தையே விரும்புகிறேன். இல்லறத்தின் முதிர்ச்சியே வானப்பிரத்தம். இல்லறத்தை விரும்பும் யான், எப்படிக் கணவனைப் பிரிய முடியும்? கணவனுடன் வருவேன். அதுதான் எனக்குக் கட்டளை. கணவனைப் பிரிந்த நான் கற்புடையவளாவேனா? ஆகவே என்னைத் தடுக்காதீர். உம்மை வேண்டுகிறேன். என்னைத் தடுத்து நிறுத்தாதீர்கள்” என்று வேண்டினாள்.

அறக் கடவுள் கேட்டார். நெஞ்சு உருகினுர். மனம் மகிழ்ந்தார். "தாயே! உதாக்தம் முதலிய அறங்களோடு கூடிய உன் சொற்கள் என்னை மகிழ் வித்தன. நீ பேசுவது வேத சாரமாகும். கற்பின் மிக்கவளே! பலவகையான யுக்திகளைக் கையாண்டு பேசும் உன் பேச்சுக்கு விடை கூற என்னுல் இயல வில்லை. நீ தருமத்தையே பேசுகிருய். சத்தியத் தையே செய்கிருய். உனக்கு நானுகவே வரத்தைக் கொடுக்க விரும்புகிறேன். கல்யாணி! இச் சமயத் தில் உன்பதியின் உயிரைத் தவிர வேண்டிய வரத் தைக் கேள். வரிக்கப்பட்ட உனக்கு அது சித்தி யாகும். இகழப்படாதவளே! உன்னிடத்தில் எனக்கு அன்பு மிகுதியாகிறது. விரைவாகக் கேள்" என்ருர்.

சாவித்திரி கேட்டாள். இயமனை வணங்கினுள். மனதிலே சிந்தித்து முடிவு செய்து கொண்டாள். "தருமராஜரே! எனக்குத் தெய்வம் என் நாயகர். அவருக்குத் தெய்வம், அவர் மாதா பிதாக்கள். தாய் தந்தையரை வணங்கும் அவர் உள்ளத்தில் ஒரு குறை யிருந்தது. அப்பாவுக்குக் கண் இல்லையே என்று நெடு நாட்களாக மனதிலே வருந்திக் கொண்டிருந்தார். கொண்கண் குறிப்பறிந்து ஒழுகு பவளே பத்தினி. என் பதியின் மனக்குறையை யான் தீர்க்க வேண்டும். தேவரீர் கருணையினுல் என் மாமனுருக்குக் கண்கள் நன்ருகத் தெரியட்டும். சூரியனுக்கும், அக்கினிக்கும் ஒப்பானவராக அவர் விளங்கட்டும். அது கண்டு என் பதி மகிழட்டும். பதிவிரதையாகிய நான் பர்த்தாவின் மகிழ்வைத்

தவிர வேறு என்ன யாசிக்கப் போகிறேன்? ஆகவே இதைக் கொடும்'' என்று கேட்டாள்.

செல்லுவதில் விரைவு கொண்ட தருமராஜா, "சாவித்திரி! உன்னால் சொல்லப்பட்டது அப்படியே ஆகும். யான் அந்த வரத்தை யளிக்கிறேன். நீ திரும்பு. வழி நடையினால் நீ இளைக்கிறாய். திரும்பிச் செல். போ'' என்று கூறினார். அந்த அளவில் அவர் மிகுந்த வேகமாகச் சாவித்திரியைத் தாண்டிச் சென்றார். விநாடியில் அதிக தொலை போய்விட்டார். சாவித்திரி பார்த்தாள். "ஐயோ! என்னே என்மதி? பேதைமதி! என் மாமனாருக்குக் கண் கிடைத்தால் நல்லது தான். அதனால் எனக் கென்ன பயன்? நான் என் கணவருடன் போகாமல் நின்று விட்டேனே? தெய்வமே! அறக்கடவுள் அதோ மனதிற் கெட்டாத தொலை போய்விட்டாரே? தேவி! உன் திருவடியே துணை. யான் எப்படியும் என் கணவரைப் பின் பற்ற வேண்டும்'' என்று மனதில் நினைந்து தவத்தாலும் பஞ்சாட்சர செபத்தாலும் நினைக்க முடியாத வேகத்தோடு இயமனை வந்து அணுகினாள். போகின்ற அவரை வணங்கினாள். அறக் கடவுள் பார்த்தார். விதிர்த்துவிட்டார்.

'இவள் பெண்ணல்ல. கற்புத் தெய்வம். தேவர்களாலும் அணுக முடியாத என்னை இவள் அணுகுகிறாள். எந்த ஒரு சக்தியினாலும் கடக்க முடியாத வழிகளை இவள் கடந்து வருகிறாள். என்னை ஒரு சக்தி நிறுத்திவிட்டது. என்னால் மேலே போக முடியவில்லை. இவளை நயமாகத்தான் பேசி அனுப்ப வேண்டும்' என்று நினைந்து அறக் கடவுள் சாவித்

திரியை நோக்கினுர். "வெல்ல முடியாதவளே! ஏன் என்னைத் தொடருகிருய்? பிறப்பும் இறப்பும் இயற்கை. மரணத்தை வென்றவர் யார்? மரிப்பு எல்லா உயிர்கட்கும் உண்டு. பிறந்துவிட்ட உயிர்கள் இறந்துதான் ஆகவேண்டும். தேவர்களாலும் அதனைத் தாண்டமுடியாது. சுந்தரி! நீ ஏன் வருந்துகிருய்? ஆயுள் முடிந்தால்தான் நான் வருவேன். நான் வந்துவிட்டால் அந்த மரணம் சம்பவிக்காமல் இருக்காது. மாந்தாதா எங்கே? மனு எங்கே? இட்சுவாகு எங்கே? யயாதி எங்கே? நினைத்துப் பார். தருமந் தெரிந்தவளே! கடவுள் கட்டளையை நாம் மீறக்கூடாது. நீ என்னைத் தொடராதே; போ. வாட்டமடைகின்ற நீ இந்த வழியில் வரத் தகாதவள்'' என்று இனிமையாகச் சொன்னுர்.

சாவித்திரி மலர்ந்த முகத்தோடு தரும தேவதையை வணங்கினுள். மனதிலே திடமாகச் சங்கற்பித்துக் கொண்டாள். 'யாது காரணம் பற்றியும் கணவனைப் பிரியக் கூடாது. வழி எத்தனைத் துன்பமாக இருந்தாலும் கணவனுடன் போகவேண்டும்.' என்று நினைத்தாள். பணிந்தாள். மென்மையாகப் பேசினுள். "தருமந் தெரிந்தவரே! பர்த்தாவினுடைய சமீபத்தில் எனக்குச் சிரமம் ஏது? துன்பம் ஏது? கணவனைப் பிரிவது துன்பம். நாயகனைத்தொடர்வது துன்பமா? அதனுல் எனக்கு வாட்டமில்லை. அதுவே எனக்கு நிலையான கதி. எந்த இடத்திற்கு என் பர்த்தாவைக் கொண்டு போவீரோ அதுவே எனக்கும் இடம். தேவநாதரே! தெரிந்தவராகிய உமக்கு நான் எதைச் சொல்வேன்?

நல்லவர்களைப் பார்ப்பதே இன்பம். அவர்களைப்பார்த்தாலே துன்பந் தொலையும். அவர்களோடு பேசினால் வரும் பயன், எல்லையில்லை. அவர்களோடு பழகினால் துன்பமே இல்லை. இன்பமே எய்தும். யான் பாவியானாலும் சாதுவாகிய உம்மைப் பார்த்தேன். சான்றோராகிய உம்முடன் பேசினேன். சிவ பக்தராகிய உம்மோடு பழகினேன். சிவ நாமங்களைச் சொல்லுகின்ற உம்மோடு நட்பு கொண்டேன். பெரியவரே! சத்புருஷர்களின் சினேகம் வீணாகாது. காளை மாட்டின் வாலைப் பற்றி, ஓடுகின்ற நீரில் இறங்கினாலும் அக்கரை சேரலாம். பயமில்லை. நாயின் வாலைப் பற்றினால்? ஆற்றோடு போக வேண்டியது தான். தூய்மையானவரே! எளிதிற் பார்க்கமுடியாத உம்மைத் தரிசித்த குற்றத்திற்காக நான் துன்பப் படலாமா? உம்மோடு பழகியதற்காக நான் பதியைப் பிரியலாமா? மேன் மக்களோடு சேர்ந்த சேர்க்கை பாழாகலாமா? அறிவுள்ள பெருமகனாகிய உம்மை நட்பு கொண்ட நான் வாடலாமா? என் துன்பம் உங்களுக்குத் தெரியவில்லையா? உங்களை நான் அதிகமாக யாசிக்கவில்லை. என் பதியை நான் தொடர்கிறேன். தடுக்காதீர்கள். உம்மை வணங்கிக் கேட்டுக்கொள்கிறேன். என்னைத் தடுத்துத் துன்பத்தை மிகுதியாக்காதீர்கள்'' என்று மனதிற் படும்படியாகச் சொன்னாள்.

தட்டமுடியாத அந்த சொல்லை, இயமன் கேட்டார். மனதில் ஒரு புதிய உணர்ச்சி யுண்டாயிற்று. "இந்தப் பெண் இது வரை கேட்டறியாத தருமங்களைச் சொல்கிறாள். ஆகா! இவள் மதிநலம்

என்னே? சத்தியவானை நாம் பிடித்ததும் நல்லது தான். "கற்புத் தேவதையே! உன் சொற்கள் வேத வசனம். என் தாய் அங்கயற்கண்ணியைப் போல் நீ பேசுகிருய். நீ வாழ்க! உன் நாமம் வாழ்க! மனதிற்கு அனுகூலமானதைச் சொன்னுய். அறிஞர்களுக்கு இன்பத்தைப் பெருக்கும் உரையைச் சொன்னுய். பேசத்தெரிந்தவளே! கேள். விரும்பியதைக் கேள். சத்தியவான் உயிரைக் கேட்காதே. அந்தவரம் என்னுல் தரத்தகாதது. நன்மைக்கு ஆதாரமான சொற்களைச் சொன்ன உனக்கு வரந்தர அவாவுகிறேன். வரிப்பாயாக" என்ருர்.

சாவித்திரி வணங்கினுள். "அறக்கடவுளே! எனக்கு ஏன் வரம்? என் கணவன் உயிரைத் தவிர வேறு என்ன வேண்டும்? அதுவும் யான் உம்மிடத்தில் யாசிக்க மாட்டேன். யான் விரும்புவதெல்லாம் கணவனுடன் செல்வது ஒன்றே. வரத்தைத் தரும் உம்மை மறுக்க நினைக்கவில்லை. விரும்பித் தருவதைப் பெற்றுக்கொள்கிறேன். எனக்காக எதுவும் வேண்டா. என் கணவனுக்காக இதனை உம்மிடம் எதிர் பார்க்கிறேன். கூற்றுவரே! கணவன் அபீஷ்டத்தை நிறைவேற்றுபவளே பத்தினி. அவளைத்தான் தேவர்கள் வணங்குகிருர்கள். அவளுக்கு எல்லா உலகங்களும் காத்திருக்கின்றன. எவள் கணவன் விரும்பியதைச் செய்கிருளோ அவள் புகழை அடைகிருள். கணவன் விருப்பத்திற்கு மாருக நடப்பவளை நரகம்கூட விரும்பவில்லை. விதியே என்று அவளைச் சுமக்கிறது.

என் மாமனுர் முற்காலத்திலேயே நாட்டை யிழந்தார். பகைவர்கள் அவர் அரசைப் பறித்துக் கொண்டனர். என்தெய்வம் அப்பொழுது இளையவர். தந்தையார் மணிமுடி இழந்தாரே-என்று இவருக்குக் குறை. தம் புய வலியால் சாலுவதேயத்தை மீட்டுத்தர வேண்டும் என்று விரும்பினுர். அவர் விருப்பத்தை நான் நிறைவேற்ற வேண்டும். அன் புள்ளவரே! உமது கருணையால் என் மாமனுர் இழந்த தம் ராஜ்யத்தை அடையட்டும். இதனையே எனக்கு வரமாகக் கொடும்'' என்ருள்.

இயமன் கேட்டு மகிழ்ந்தான். ''இந்தப் பெண் தனக்காக ஒன்றும் கேட்கவில்லையே? வேண்டாமை யெய்தினுளோ?'' என்று நினைத்து ''வணங்கத் தக்க வளே! அந்த வரத்தை யான் தருகிறேன். துயுமத் சேன மன்னர் விரைவில் தன் அரசைப் பெறுவார். அவர் தம் அறத்தினின்றுந் தவற மாட்டார். என்ஞல் உன் விருப்பம் நிறைவேற்றப்பட்டது. போ. போய் விடு. வழி பயங்கரமானது. இது தொலையா வழி. துன்பம் நிறைந்தது. பெண்ணுகிய நீ வரத்தகாதது'' என்று கூறினுர். விரைவாகத் தெற்கு நோக்கி நடந்தார். எருமை அவருக்கு முன்னே ஓடியது. கண் திறப்பதற்கு முன் பல கோடி அண்டங்களைக் கடந்துவிட்டார். கடமை தவருதவராகிய இயமன் செல்வதைச் சாவித்திரி கண்டாள். பதறினுள்; துடித்தாள். 'தேவி! இது என்ன சோதனை? யான் என் கணவனைப் பிரிந்து ஏன் இங்கு நிற்கிறேன்? என்ன முட்டாள்தனம்? அவரைப் போய் அடை வேன்' என்று ஓடினுள்.

சாவித்திரியின் கால்களுக்குக் கீழே எத்தனையோ உலகங்கள் ஓடின. ஒளி மயமான அண்டங்கள் அவள் தாண்டுவதனுல் சிறப்புப் பெற்றன. ஆயிரமாயிரம் சூரியர்களைக் கண்டாள். கோடானு கோடி சந்திரர்களைக் கண்டாள். நட்சத்திரங்கள் உருண்டு ஓடின. அந்த வழிதான் எத்தனை பயங்கர மானது. தனிமையான அந்த வழியில் கணவனை நாடி ஓடினுள் சாவித்திரி. தன்னையோ தன் சுற்றுப் புறத்தையோ வழிகளின் பயங்கரத்தையோ அவள் பார்க்கவில்லை. அவை ஒன்றும் அவளுக்குத் தெரிய வில்லை. ஒளி உமிழும் வழியில் ஓடினுள். வழுக்கற் பாறைகளைக் கடந்தாள். மலர்க் குவியல்களைத் தாண்டிச் சென்ருள். பனிப் பாளங்களைக் கடந்தாள். அப்பா! எத்தனை பயங்கரம்!

ஒரே இருள். பாறையா? பள்ளமா? தெரியவில்லை. மலையா? மேடா? உணரமுடியவில்லை. சாவித்திரி நிற்கவில்லை; ஓடினுள். ஓடிக்கொண்டேயிருந்தாள். அதோ அதோ என்று கூற்றுவனைப் பார்த்துக் கொண்டே விரைந்தாள். அந்த இருளிலும் அவளுக்குக் கண் நன்ருகத் தெரிந்தது. துல்லியமாக இயமனைப் பார்த்தாள். அறக் கடவுளைவிடத் தன் ஆருயிர் நாயகனை விடாது பார்த்தாள். தேவியை மறந்தாளில்லை. திருவருளைத் துணை கொண்டு ஓடினுள்.

வாழைப் பழத்தைக் கசக்கிப் போட்டதைப் போன்ற வழி. வழ வழப்பு. முடை நாற்றம். சே! வழியா அது? ஒரு அடி வைத்தால் வழுக்கிக்

கொண்டே போகின்றதே? எப்படித்தான் சாவித்திரி ஓடிஞளோ? தருமமும் சத்தியமும் அவளுக்கு இரு மருங்கிலும் நின்றன. பிணங்கள் வெந்து கொண் டிருந்தன. தீ நாற்றம். கூளிகள் ஆடின. காளிகள் பூசை யேற்றன. கழுகுகள் விருந்துண்டன. கழுது கள் குதித்தன. அப்பப்பா! மகா பயங்கரம். நாற்றம் சகிக்க முடியவில்லை. எத்தனைதான் புழுகையும் சந்தனத்தையும் தெளித்தாலும் இந்த நாற்றம் போகாது. ஐயோ! இது வழியா? தன் கணவன் இந்த வழியில் போகிருனே? என்ற நினைப்பே சாவித்திரிக்கு உடல் கூசியது. துன்பத்தைத் தந்தது. ஓடினுள்; நிற்கவில்லை.

தொடர்ந்து ஓடுகின்ற சாவித்திரியின் கால்கள் மணலில் புதைந்துகொண்டன. ஒரே மணற்காடு; நொய் மணல். கால் புதைகின்றது. நல்லவர் வாழ்வு கண்டு பொருத தூர்த்தர்களின் நெஞ்சுபோல் கொதிக் கின்றது. கால் வைக்கமுடியவில்லை. வைத்த காலைப் பெயர்க்க முடியவில்லை. என்ன துன்பம்? எப்படித் தான் போவது? சிவனை நினைந்து ஓடினுள். கொஞ்ச தூரத்தில் சேறு. வழுக்கற் சேறு. புதை சேறு. கழுத்து வரை புதைகிறது. புதைந்துகொண்டே போகிறது. அப்பா! சாவித்திரி இதை எப்படிக் கடந்தாள்? யார் துணை நின்றது? தாண்டிச் சென்ருளா? தாவிச் சென் ருளா? இயமன் நிற்கவில்லை. கருமமே கண்ணுயி னுன். வேகம்! வேகம்! வேகம்தான்.

ஓடுகின்ற சாவித்திரி நின்ருள். திசை தெரிய வில்லை. வழி பல வகையாகப் பிரிகின்றது. அதோ

கூற்றுவன்! மறுபடியும் ஓடினுள். அவள் கால்களில் ஏது அத்தனை பலம்? தெருக்களில் புகுந்து ஓடினுள். என்ன உலகமோ? என்ன நகரமோ? மாட மாளிகைகள், உயர்ந்த அரண்மனைகள், வெளிச்சம் வருகின்றது. வெப்பமில்லை; காற்றடிக்கிறது; தூசியில்லை; பல பெண்கள் நின்று பார்த்தார்கள். பல பெண்கள் ஓடிக்கொண்டே பார்த்தார்கள். சாவித்திரி நடந்தாளா? பறந்தாளா? ஐயோ! இது என்ன மலை? மண் மேடா? சிவ சிவா! எப்படித்தான் ஏறுவதோ? மூச்சு முட்டுகிறது. நிற்க முடியுமா? மலைகளைக் கடந்தாள். கணவனைத் தொடர்வது ஒன்றே குறி.

கொடுமையான பல மனிதர்களைக் கண்டாள். மனைவியைத் துன்புறுத்தும் ஆடவர்களும் கணவனை எதிர்த்துப் பேசும் பெண்களையும் கண்டாள். தாய் பிள்ளையை வெறுத்தாள். தந்தையை மகன் அடித்தான். மக்களை விற்றனர். குருவை நிந்தித்தனர். ஊன் தின்றனர். கற்பழித்தனர். அழிந்தனர். பிள்ளையைக் கொன்ருர்கள். கருவழித்தனர். கொடுமை! கொடுமை! உடன் பிறந்தாரை வைதனர். தூற்றினர்; இகழ்ந்தனர்; துன்பமே துய்த்தனர்.

பத்தி நிலவியது. வழிபாடு மிகுந்தது. அறவுரை சூழ்ந்தது. பண்பு ஒளிர்ந்தது. தவம் நிலைத்தது. தானம். மல்கியது பெண்கள் பெண்களாயிருந்தார்கள். அற்ப ஆயுள் யாருக்கும் இருக்கவில்லை. கணவனுக்குப்பின் யாரும் இறக்கவில்லை. குருவுக்குமுன் நடப்பவரில்லை. எல்லா உலகங்களையும் கடந்தாள்.

"எங்கு பார்த்தாலும் தண்ணீர். அது கால்வாயா? மடுவா? யாறு? கடலா? தெரியவில்லையே? எப்படிக்

கடப்பது? கங்காதரா? நீயே துணை" என்றுள். மழை கொட்டுகின்றது. உடல் விரைக்கும் குளிர். அங்கங் கள் வதங்கும் சூடான தண்ணீர். பச்சை நிறம். சிவந்த குருதி நீர். உப்பு நீர். இது என்ன வெள்ளை? குடிக்க ஆகுமா? தாகம்! தாகம்! நீர் வேட்கை. அவ்வளவு தண்ணீரையும் குடித்துவிடலாமா? தண் ணீர் குடிக்க ஏது நேரம்? ஓடினுள். எப்படித்தான் ஓடினுளோ!

தெய்வமே! இந்த இளம் பெண்ணின் உடம்பில் எங்கிருந்து இந்த வன்மை வந்தது? கற்பெனுந் திண்மை இதுவா? கொழுந்து விட்டெரியும் தீயில் நடக்கிருளே? நடக்கிருளா? ஓடுகிருளா? தெரிந்து கொள்ள முடியவில்லை. பயங்கரமான தீ. உலகத் தைப் பொசுக்கும் தீ. தீ நாக்குகள் ஜ்வாலையைக் கக்கிக்கொண்டு நீள்கின்றன. அந்தத் தீயில் விழுந் தால் பிழைப்பதேது. கருகி மடியவேண்டியதுதான். சுழலுகின்ற தீ. பரவுகின்ற தீ. அப்பப்பா! கற்புத் தீ அதைக் கடந்துவிட்டதே?

என்ன மாயம் இது? சுழலுகின்ற காற்று. சாவித் திரியை எங்கோ கொண்டு போகின்றதே? அண்டங் கட்கு அப்பாலே எறிந்துவிடுமா? ஒவென்ற புயற் காற்று. மலைகளைத் தூளாக்கும் சுழற் காற்று. சே! இந்தக் காற்று முருகன் தேரில் எப்படிப் பொறுமை யாகச் சாரதியாக இருந்தது? குழவிக் காற்று. ஊதற் காற்று. எல்லாக்காற்றும் இங்கேதான் இருக்கின்றன. பதிவிரதையாகிய சாவித்திரி இவை யொன்றையும் உணரவில்லை. கணவனைப் பின் பற்றுவதையே நோக்கமாக ஓடினுள்.

அப்பா! ஒரே வெளி. கண் பார்த்த இடமெல்லாம் ஒன்றுமில்லை. வெட்ட வெளி. அங்கே நாதங்கள் மயங்கின. எத்தனையோ ஒலிகள். யாழ் மீட்டின. குழல் ஒலித்தது. குயில் கூவியது. மயில் அகவியது. சுரங்கள் மோதின. பண்கள் சுழன்றன. அறிவு தெளிவாக இருந்தது. கலைகள் குழுமின. என்ன இது? இங்கேயும் சாவித்திரி நிற்கவில்லை. சாவித்திரி தொடர்ந்து வருகிறாளா? நின்று விட்டாளா? என்று இயமனுக்கு ஐயம். திரும்பிப் பார்க்கலாமா என்று நினைத்தான். வாமை செம் பாதம் பதிந்த முதுகைப் பார்த்துக்கொண்டே ஓடி வந்த சாவித்திரி அவனுக்கு முன்னே போய் நின்றாள். வியர்க்கவில்லை; வாடவில்லை; மூச்சு வாங்கவில்லை. இளைப்பும் களைப்புமில்லை.

அறக் கடவுள் கண்டார். மனம் நடுங்கினார். பயம் அவரைப் பற்றிக்கொண்டது. என்ன வில்லங்கம் இது? சிவ அபராதம் செய்கிறோமோ? என அஞ்சினார். இப்பெண் தெய்வம் ஐந்தெழுத்தோதி வருகிறாள். இவள் செல்லத் தகாத உலகமில்லை. இவள் பார்க்கத் தகாத உருவமில்லை. இவள் காதுகளுக்குக் கேட்காத ஒலியில்லை. பரமேசுவரியேஇவள். இவளைத் தாண்டி என்றாற் போகக் கூடவில்லை. இவளை உதாசீனப்படுத்துவதற்கில்லை. அதனால் தருமங் கெடும். "அம்மையே! உன்னை வணங்குகிறேன். பத்தினித் தெய்வமே! உன்னைப் பார்த்ததில் நான் பாக்கியவான். நீ கடக்கத் தகாதவள். உன் சக்தி பெரியது. தாயே! என்னைத் தருமத்தில் நிலை பெறச் செய்.

"பற்றிய உயிரை விடுவது எனக்குத் தருமமல்ல. ஆயுள் தீராத உம்மைக் கொண்டு போகமுடியாது. மாதரசி! கருவிலேயே விதி விதிக்கப்படுகிறது. அதனைக் கடக்க இயலாது. தேவரும் மூவரும் விதியை வெல்ல முடியாது. ஈசன் இன்னபடி என்று விட்டால் அன்னபடிதான் நடக்கும். மாற்ற இயலாது அம்மணி! உமது விஷயத்தில் எப்படி எழுதியிருக்கிறதோ? நான் கலங்குகிறேன். என்னைத் தொடர்ந்து வருதல் யாருக்கும் இயலாத ஒன்று.

பதிபக்தியிற் சிறந்த பாவையே! உனக்கு இந்த வழிகள் வழியை விட்டன. உன்னை மன்றாடிக் கேட்டுக்கொள்கிறேன். இனி நீ வருவது நீதியல்ல. தருமமல்ல. போகுமாறு கட்டளையிடவில்லை. வேண்டுகிறேன். திரும்புங்கள். கடவுள் கட்டளையை மீறலாகாது. என் வேலையைக் கால விளம்பஞ் செய்ய வேண்டா" என்று பக்தியோடு கூறினார்,

கருப்பயில்பொழுதே காலமு நிலையுங்
　　கருமமு மாயுவுங் கணக்கிட்
டிருப்பதா மவ்வா றுரித்தலால் விலக்கற்
　　கிமையவர்க் கென்னினுங்கூடா
மருப்பயில் குழலாய் நீதியோ தொடர்ந்து
　　வருவது தருமமோ மீண்டுன்
திருப்பயில் நகரஞ்சேர்தியென் றுரைத்தான்
　　தேன்மொழி யிவ்வுரை பகர்வாள்.

மருப்பயில் குழலாய்-மரு-நறுமணம். பெண்கள் கூந்தலில் மலர் சூட்டிக்கொள்வார்கள். அதனால் அக்குழல் நறுமணமுள்ளதாக இருக்கும். இன்னும் அகில் புகையாலும் பனிநீரினாலும் மணங்கமழும். கணவனை யிழந்த பின் மாதர்கள் மலர் சூடுவதில்லை.

மலர் சூட்டாமையின் மணமில்லை. இங்கே சாவித்திரி இனி எப்பொழுதும் சுமங்கலியாயிருக்கப்போகிறவள். கணவன் இறந்த பின் உயிர் வாழ்பவள் தானே அமங்கலி? சாவித்திரியோ இப்பொழுதும் இனி எப் பொழுதும் கணவனுடன் தொடர்கிருள். அவள் எப்படி அமங்கலியாக முடியும்? இது கருதியே மருப் பயில் குழலாய்—எனப்பட்டது. இன்னும் சற்று நேரத்தில் சத்தியவானை விட்டுவிடப் போகிரு னல்லவா!

சாவித்திரியின் நாடான சாலுவதேயம் இது வரை தெவ்வர்கள் பயின்ருர்கள். இனி துயுமத் சேனனும் சத்தியவானும் ஆளப் போகிருர்கள். ஆகவே அங்கு திரு-பயிலும் என்பது தோன்ற திருப் பயில் நகரம்-எனப்பட்டது. இன்னும் கற்பின் பொற் பாம் நீயே திரு. நீ சென்று அந் நகரத்தில் இருக்கப் போகிருய்; உன்ஞல் அந் நகரம் வளர்ந்து வாழப் போகிறது. ஆகவே திருவாகிய உன்ஞல் பயிலப் படும் நகரம் என்பதுந் தோன்றத் திருப்பயில் நகரம்-எனப்பட்டது.

அவசரம், பட படப்பு இவைகளிருந்தால் சொற் கள் பிரியா-கோபத்திலும் பேசவராது. நா குழறும். சொல் தடுமாறும். சொல் தெறித்துவிடும். பேசவே வராது என்ருல் அப்பேச்சு இனிமையாகவா இருக் கும்? பட படவென்று பொரியும். சிலர் கோபத்தில் என்ன பேசுகிருர்கள் என்று தெரியாது. என்ன பேசுகிரேும் என்பதை யுணராமலேயே பேசுவார் கள். உணர்ச்சி கூடிஞல் பேச்சு வராது. பத்தியோ

காதலோ இன்பமோ துன்பமோ-எதுவானுலும் மிகுந்த உணர்ச்சியில் பேச முடியாது; தடுமாறும்.

"உரையவிழ உணர்வவிழ உளமவிழ உயிரவிழ உளபடியை
உணருமவர் அநுபூதி யானதுவும்"—

எனவும்.

"உரையற்று உணர்வற்று உடலற்று உயிரற்று உபாயமற்றுக்
கரையற்று.........எனதற்று இருக்கும்."

—அருணகிரிநாதர்

எனவும் பேசப்பட்டதல்லவா! பத்தியில் பேச்சு வராது. மொழி குழறும். மனனம் செய்த பாடல் வராது. குறைகளைச் சொல்லிக்கொள்ள முடியாது. முருகா! சிவா! என்று சொல்வார்களே தவிர, என்னைக் காப்பாற்று எனக்கு இது கொடுஎன்றோ, இறையவர் பெருமைகளையோ, அருளிப் பாடுகளையோ எடுத்துச் சொல்ல வராது. இந்த அநுபவம் அருணகிரிநாதருக்கு வாய்த்தது. "பேசா அநுபூதி பிறந்ததுவே" என்ருர்கள். மொழி குழறும். குறைகளைக் கருதுவார்கள். அங்கே பேசியதாகத்தான் பொருள். அதனைத்தான்.

"மொழியுமடியார்கள் கோடிகுறை கருதினும் வேறு
முனிய அறியாத தேவர் பெருமாளே"

என்ருர்கள். குறை கருத முடியுமே தவிர, மிகுதியான பக்தியுணர்ச்சியினுல் பேச வராது. இது பக்தி.

காதல் வயப்பட்டார்க்கும் அப்படியே. உணர்வு கூடினுல் உரை நின்றுவிடும். பார்த்துக்கொண்டே

யிருப்பார்கள். உள்ளம் உறவாடும். கண்ணே! கற்பகமே! என்ற பேச்சுக்களெல்லாம் அங்கே கிடையாது. உணர்ச்சி குறைந்தால்தான் கற்கண்டே தேனே மானே-எல்லாம். "வாய்ச் சொற்கள் என்ன பயனுமில" என்ருரல்லவா?

> "கண்ணொடு கண்இணை நோக்கி யொன்றையொன்
> றுண்ணவும் நிலைபெரு துணர்வும் ஒன்றிட"

என்பது கம்பர் வாக்கு. உணர்வு மிகுமானல் பேச்சேது? "பிரிந்தவர் கூடினல் பேச வேண்டுமோ?" என்ருரே? பேசிக் களிப்பதா? உணர்ந்து உவப்பது. பக்தியோ காதலோ உணர்வுமிக்க போது பேச்சு வராது.

அவலமும் அப்படியே. இழப்பில் என்ன பேசுவது? துன்பம் மிகுந்து உணர்ச்சி ஏற்பட்டபோது, பேச வராது. அப்பொழுது போய் பாடலும் எதுகையும் மோனையும் இராகமும் வாரா. அப்படி யாராவது பாடுவார்களானல் அவர்க்குத் துக்கமில்லை என்பது பொருள். துன்ப மேலீட்டில் 'அந்தோ! என் செய்வேன்? ஐயோ!' என்று பேசுவாரே யன்றி பிழையறப் பாடவோ பேசவோ முடியாது. அப்படியே அவசமாய்ப் பேச்சற்று விழுந்து விடுவார்கள்.

இங்கே சாவித்திரிக்கு ஏற்பட்ட உணர்ச்சி என்ன? எத்தனை உணர்ச்சி? கணவன் மீது வைத்த காதல்; அவனைத் தெய்வமாக நினைத்த பக்தி; நாயகன் உயிர் பிரிந்தானே என்ற துன்பம்; அப்பா! எத்தனை உணர்ச்சிகள்! எவ்வளவு அவசரம்! நெஞ்சு

எப்படி அடித்துக்கொள்ளும் ? பேச வருமா? பேசினுல் சொல் பிரியுமா? பிரிந்தால் இனிமையாகவா இருக்கும்? தித்திப்பாகவா இருக்கும்? ஆனுல் அறக்கடவுள் சொல்கிருர், தித்திக்கும் தேன்மொழி பேசுகின்றவளே! என்று அழைக்கிருர். அப்படியாஞல் எத்தனை அமைதி இருக்கவேண்டும்? மனம் எப்படிப் பக்குவப்பட்டிருக்கவேண்டும். இன்பத்துள் இன்பம் விழையாத தன்மை யல்லவா அது. துன்பத்துள் துன்பம் ஏது? வேண்டாமை எய்தி நின்றமையால் எக்காரணத்தாலும் சாவித்திரி கலங்கவில்லை. மனம் சாந்தியாக இருக்கிறது. பட படப்பு இல்லை. அவசரமில்லை. கோப தாபமில்லை. ஆகவே, சொற்கள் தெளிவாக வருகின்றது. தேனுகத் தித்திக்கின்றது. அது கருதியே தேன் மொழி இவ்வுரை பகர்வாள்-எனப்பட்டது.

இனி சாவித்திரி கணவனைப் பிரியவில்லையல்லவா? மரணத்திலும் தொடர்ந்து வந்த மனைவியாயிற்றே? அவலமேது? அவலமிருந்தால்தானே அவலச் சொற்களும் அவச் சொற்களும். தன்னைக் கணவனை விட்டுப் பிரிந்தவளாகவே எண்ணிக் கொள்ளவில்லை. எப்பொழுதும் சாவித்திரி வாயிலிருந்து, துன்ப மொழிகள் வரவேண்டிய தேவையில்லை. எப்பொழுதுமே இன்பம் நிறைந்தவள். இனிமையாகவே பேசுவாள். அது கருதியே தேன் மொழி யிவ்வுரை பகர்வாள்-எனப்பட்டது.

இயமன் கூறியதைச் சாவித்திரி கேட்டாள். மனந் தளரவில்லை. அறக்கடவுளை வணங்கினுள். “பெருமைக் குரியவரே! நீவிர் என் பதியைக்

கொண்டு போவதை யான் தடுக்கவில்லை. அவர் உயிரைக் கொடுங்கள் என்று இரக்கவில்லை. அவர் போகும் இடத்திற்கு நான் வருகிறேன். இதில் தங் கட்டு வரும் குறையென்ன? நீங்கள் என்னை முயன்று கொண்டு போகவில்லை. யானுகை வருகி றேன். நீங்கள் கொண்டு போனலும் தருமந் தவறும் என்று நினைக்கலாம். நான் என் பதியுடன் வருவ தால் உங்கட்கு என்ன பிழை? உங்கள் பெருமைக்கு இழிவா? பத்தினிப் பெண்கள் பதியைப் பிரிந்து வாழ முடியுமா? என் துன்பம் உங்கட்குத் தெரியவில் லையா? பேதையாகிய யான் ஓடி வருவதை ஏன் தடுக்கிறீர்? இது உமக்கு அறமா? உம்மை அறக் கடவுள் என்று கேள்விப்பட்டிருக்கிறேனே? தேவ ரீர் இரக்க மனமுடையவரல்லவா? பாபிகளைத் தானே தண்டிப்பீர்? யான் என்ன பாவம் செய் தேன்? ஏன் என் பதியைப் பிரிந்து போகச் சொல் கிறீர் ?

நடுநிலை தவருதவரே! உங்கள் பெருமை உங் களுக்குத் தெரியவில்லையா? பிரமதேவர் படைக்கும் எல்லா உயிர்த் தொகைகளையும் அழிப்பவர் நீரல் லவா? தங்கட்கு மேலான தேவர் யார்? எல்லாத் தேவர்களும் தங்கள் பாசத்திற்குக் கட்டுப்பட்டவ ரல்லவா? தங்கட்குத்தானே சண்டன் என்று பெயர். யாவற்றையும் அடக்குபவர் நீரல்லவா? அதனுல் உங்கட்கு எமன் என்பது பெயரல்லவா?

"ஆருயிர்கட்கு அந்தத்தைச் செய்பவரே! உயிர் வேறு, உடல் வேறு பிரிப்பவர் தாங்களல்லவா? அதனல் கூற்றுவன்-என்று உங்களைச் சொல்லுகிருர்

கள். அந்த வேலேயோடு கணவனேயும் மனேவியை யும் கூறுபடுத்தும் வேலே ஏன் உமக்கு? யான் வரு வதைத் தடுக்காதீர். கண்ணிருந்தும் காண மறுக் காதீர். கருத்திருந்தும் கருத மறுக்காதீர். தேவரே! என் துன்பம் உங்கள் கண்களுக்குப் படவில்லேயா? கருத்தில் உரைக்கவில்லேயா? கற்புடைய பெண் ணுக்குப் பதியைப் பிரிவதைவிடத் துன்பம் உண்டா? அதைவிடத் துன்பம் அவளுக்கு யாரா வது செய்ய முடியுமா? நீர் அந்தகர்—என்ற பெயரை உறுதிப் படுத்துகிறீரா?

தங்கள் கருணேயை யான் கேள்விப்பட்டிருக் கிறேன். அதனேப் பொய்யாக்காதீர்கள். தடுக்க மாட்டீர்கள் என்று நம்பி வந்த என்னேத் தள்ளாதீர் கள். கணவனுக்கும் எனக்கும் நடுவே நின்று நலி வைத் தராதீர்கள். இதற்காக உங்களுக்கு நடுவன் என்று பெயர்? பெண் தருமத்தை அழிக்க ஏன் முயலுகிறீர்? உம்மைத் தருமராஜா-என்று எப்படி இனி அழைப்பார்கள்? பரிதவிக்கும் என்னேத் துரத் திப் பழிக்கும் பாவத்திற்கும் ஆளாக வேண்டா. ஐயனே! உம்மை வணங்குகிறேன். போ-என்று சொல்லாதீர்கள். அது என் உயிரை வாங்குகிறது. அதிர வைக்கும் மேளத்தைப் போன்ற ஒலி அது. பெண்ணுகிய நான் கேட்கத் தகாத சொல் அது. இயமன்-என்பதை உறுதிப்படுத்த எண்ணுகிறீர் களா?

பழிப்பறுங் கமலன் படைத்திடத் திருமால்
பரிந்த பல்லுயிர்த் தொகை முழுதும்
ஒழிப்பவனி மற்றுன்னிலு முயர்ந்த
வும்பரு முளர்கொலோ வடியேன்

கழிப்படு நினது பெருமையும் வலியும்
†கண்டவர் புகன்றிடக் கவலே
ஒழித்தினி துணர்ந்தேன் நின்புகழ் நீயிங்
குணர்கிலே போலுமா வென்ருள்.

"பகவானே! சிரமம் வேண்டா என்கிறீர்களே? பதியைப் பிரிவதைவிடச் சிரமம் உண்டா! இந்த உயிர்களே, நீர் விதியைச் செய்து கொண்டுபோகிறீர். நன்ருகச் சம்ய மனம் செய்யப்படுகிறது. நீரோ தருமத்திஞலன்றி உமது இச்சையிஞல் கொண்டு போவதில்லே. அதஞல் நீர் புகழடைகிறீர். முடிவிலும் நீர் ஒருவரே நிலேத்திருக்கிறீர். எந்த உயிர்களிடத்தும் செய்கையிஞலும் வாக்கிஞலும் எண்ணத்திஞலும் வஞ்சனே செய்யாமையும் அருளுடைமையும் கொடுக்குந் தன்மையும் ஆன்ருேர்களுக்கு உரியது. உம்மைப் பெரியவராகக் காணுகிறேன். சாதுவாக எண்ணுகின்ற என் எண்ணம் பிழைபடவேண்டா. சான்ருேர்களின் பழமையான தருமத்தை விடாதீர். இந்த உலகம் சாதுக்களேயே அநுசரிக்கிறது. மனிதர்கள் சக்தியிஞல் குறைந்தவர்கள். பகைவனுக்கும் அருள்பவர்கள் சான்ருண்மை மிக்கவர்களே. நீங்கள் பெரியவர்கள். மகத்தானவர்கள். உம்மை வணங்குகிறேன். நான் உங்கட்குப் பகையல்ல. உங்கள் தருமத்தை மீறவில்லே. என்னேத் தடுக்காதீர்கள். என் நாயகனுடன் போக அனுமதியுங்கள். இது உங்கட்குப் புண்ணியம்" என்று இரந்தாள்.

---

† கண்டவர்-இங்கு நாரதர்.

தருமராஜா, "ஆகா! பரதேவதை! உன் ஞானச் சொல்மழையால் என்னை நனைத்தாய். தாகங்கொண் டவனுக்குத் தண்ணீர் போன்ற, சொற்களைச் சொன் ஞய். உன் அறிவு பெரியது. உன்னை நான் மானு டப் பெண்ணுக மதிக்கவில்லை. ரிஷிகளுக்குரிய பேச்சுக்களைப் பேசினுய். உன் வாக்கியம் தாண்ட முடியாதது. நீ செய்யாத செயலில்லை. நீ சாதிக் காத சாதனையில்லை. பரமேசுவரியே! நீயே தெய்வம். நீயே எங்கட்குக் காவல். நீயே எங்களை ஏவுகிருய். உன்னுல் கதிர் உதிக்கிறது. மதி தோன்றுகிறது. மழை பொழிகிறது. பூமி குளிருகிறது. உன் சக்தி பெரியது. அம்மா! உன்னைத் தடுக்க என்னுல் முடி யுமா? உனக்கு வரங் கொடுக்காமல் இருக்க முடிய வில்லை. சத்தியவான் உயிரைத் தவிர இந்த சமயத் தில் உசிதமான வரத்தைக் கேள். கல்யாணி! வரங் கொடுக்கப் பிரியப்படுகிறேன்" என்று அழகாகச் சொன்னுர்.

சாவித்திரிக்கு மகிழ்ச்சி. இமயன் தன்னைக் கோபிப்பானே என்று பயந்தாள். தடுத்து நிறுத்து வானே என்று அஞ்சினுள். அறக்கடவுளை மீறிப் போக முடியுமா? என்று நடுங்கினுள். மாருக 'வரந் தருகிறேன்' என்று மறுபடியும் சொன்னதும் மகிழ்ந் தாள். மலரடியில் வணங்கினுள். கை கூப்பினுள். கணவனை மனதில் நினைத்தாள். அவருக்குப் பெரு மை தரத் தக்க வரங் கேட்க வேண்டும்; என்று எண்ணினுள்.

"கருணைக்கதிபதியே! என் கணவருடன் இருப் பதை யன்றி வேறு எதையும் விரும்பேன். எனக்கு

எதுவுந்தேவையுமில்லை. கொடுக்கின்ற நீங்கள் பெரியவர்கள். மறுக்கச் சக்தியற்றவள். என் கணவனுக்குப் பெருமை வரவேண்டும். அவர் புகழ் மங்கக் கூடாது. என்கொழுநர் திருவடிபட்ட இடம் சுபிட்சமாக இருக்கவேண்டும். அங்கு குறை யிருக்கக் கூடாது. உள்ள குறை போக வேண்டும். என் காதலர் மத்ரதேயம் போனுல் அங்கு என் தந்தைக்குப் பிள்ளையில்லாக்குறை இருக்கக்கூடாது. நாடாள நன்மகனில்லையே என்று வருந்தக் கூடாது. புத்திரனுக்காகத் தவமிருந்த அவர் என்னைப்பெற்ருர். அவர் நாடு, ஆளுவாரின்றி வாடுகின்றது. அவ் வாட்டம் நீங்கட்டும். என் தாய் மாளவிக்கு என் தந்தையினிடமே நூறு பிள்ளைகள் பிறக்கட்டும். குலம் வளரட்டும். என் நாயகருக்கு அதனுல் பெருமை; அதனைக் கொடும்" என்ருள்.

கூற்றுவன், "கல்யாணி! எந்த வரமும், உன் பதியை முன்னிட்டுத்தான் கேட்பாய் போலும்? அடாடா! என்ன உன் கற்பின் மாட்சி! கருதுவதற்கரிய கற்புடையவளே! குலத்திற்கு இடையருதவர்களும், ஒளியுள்ளவர்களுமான நூறு சத்புத்திரர்கள் உன் பிதாவுக்கு உண்டாவார்கள். தந்தைக்கு மகனே, மாமனுக்கு நாடோ யாவும் கணவனைப் பெருமைப்படுத்தும் வகையில்தான் கேட்கிருய். உன் அறிவை என்னுல் அளக்க முடியவில்லை. ராஜபுத்ரி! வரத்தைப் பெற்ற நீ போகுமாறு வேண்டுகிறேன். வழியினின்றும் நெடுந் தூரம் வந்துவிட்டாய். கருணை செய். திரும்பு" என்று பணிவாகக் கூறினுன்.

'தரும தேவதை தன் நாடுநோக்கிச் சென்றார். அவர் கதி தொடர்வதற் கரியதா யிருந்தது. சாவித்திரி சளைக்கவில்லை. மீண்டுந் தொடர்ந்தாள். தன் முயற்சியில் சற்றுந் தளராத அப் பத்தினிப் பெண் இயமன் நகரை யடைந்தாள். இரும்பாலாகிய அந் நகரம், இருளும் ஒளியும் உடையதாயிருந்தது. கூச்சலும் இனிய ஒலியும் மிகுந்தது. கொடுமையும் இனிமையும் சேர்ந்தே இருந்தது. ஐயோ! அம்மா தாங்க மாட்டேன்-என்று அலறினார்கள். சிவா! சங்கரா! கங்காதரா! என்று போற்றினார்கள்.

சாவித்திரியின் கற்பொளிபட்டு அவ் விரும்புக் கோட்டை தங்கமாக ஜ்வலித்தது. அவள் கால்பட்ட இடங்களில் தூய்மை பெருக்கெடுத்தது. கண்பட்ட இடங்களில் பாவக் கறை கழுவப்பட்டது. பலர் தம் கரிய நிறம் நீங்கி ஒளிமயமான உடலோடு மேலே சென்றனர்.

கற்பகோடி காலங்களாக நரகத்தில் அடைபட்டிருந்த பல தீயவர்கள் சாவித்திரியின் வருகையால் தேவராகிச் சுவர்க்கம் புகுந்தனர். நரகக் குழிகளே புதுமை பெற்றன. ஓம், ஓம் என்று கோயில் மணிகள் ஆர்த்தன. பல்லியம் முழங்கின. பம் பம் என்று சங்குகள் சத்தித்தன. கற்பக மலர் பொழிந்தன. நறுமணங் கமழ்ந்தது. அளறுலகமா இது? என்ன புதுமை? ஏன் இந்த மாற்றம்? என்று அறக்கடவுள் வியந்தார். சாவித்திரி திரும்பாமல் வருகிறாளோ? என்று எண்ணினார். அவரை வணங்கிக்கொண்டு சாவித்திரி நின்றாள்.

தரும தேவதை பார்த்தார். அவர் கைகள் தாமாகக் குவிந்தன. தமக்கு ஆபத்தோ என்று எண்ணினார். முதுகு விண், விண் என்று வலித்தது. தாங்க முடியாத பயம் அவரைக் கவ்விக்கொண்டது. கற்புடைய பெண்களுக்குத் தீங்கு செய்தால் யார் வாழ முடியும்? இவ்வம்மையின் மனம் நோக நடந்து கொண்டோமா? என்று ஐயுற்றார். நெடு நேரம் சாவித்திரியைக் கூர்ந்து பார்த்தார்.

''அம்மையே! நீர் சாவித்திரியல்ல. சாவித்திரி தேவியே. உம்மிடத்தில் நான் பேச்சற்றுப் போனேன். என்னைச் செயலிழந்தவனாகச் செய்தது உம் கற்பு. எனக்குச் சக்தியிருந்தால் சத்தியவானை விட்டுவிடுவேன். யாரையும் பிணிக்கவும், அவிழ்க்கவும் இயலாதவன். இது பாசமன்று. தருமம். தருமத்தினால்தான் கட்டிவருகிறேன். அக் கட்டை அவிழ்க்க வலியிலேன். தேவி, நான் என்ன செய்ய வேண்டும்? கட்டளை யிடுங்கள்.

பிரமன் படைப்பிலேயே பூவுலகிலிருந்து இது வரை யாரும் இங்கு வந்தது கிடையாது. இனியும் வரமாட்டார்கள். என் ஆணையும் வலிமையும் நழுவுவதை உணர்கிறேன். எனக்கு மீறிய சக்தி யொன்று செயல்படுவதைத் தெரிந்துகொள்கிறேன். உத்தமியே! உன் சரீரம், பூத பரிணாம தநுவா? பூத தநுவா? பூத சார தநுவா? இது என்ன அதிசயமான உடல். தங்கள் உடல் ஞானமய கோசமா? விஞ்ஞானமய கோசமா? ஆனந்தமய கோசமா? என்னால் அறியக்கூடவில்லை. இந்த சரீரத்தோடு

தாங்கள் எங்கும் போகலாம். இதுவே தூலமாகிறது. இதுவே நுண்ணுடம்பு. இதுவே காரணம்; இதுவே கஞ்சுகம். இதுவே குணம். கற்பின் வடிவமே! தங்கட்கு முன் நான் ஓர் அணு. யானும் ஒரு காலத்தில் இறப்பேன். தாங்கள் இறவாதவர். மாளாத வான் புகழ் தங்களுடையது.

தங்களுக்கு வரங்களைக் கொடுத்தேன்; போவது உத்தமம். இதைத் தவிர எனக்கு வேறு ஒன்றுந் தோன்றவில்லை. தங்கள் கண்களுக்குப் புலப்படாமல் மறைய என்னால் முடியவில்லை. மறைவையும் வெளிப்படுவதையும் பார்க்கிறீர்கள். தாங்கள் பூலோகத்திற்கே திரும்புமாறு யாசிக்கிறேன்'' என்றார் குழைவாக.

சாவித்திரி துன்பத்தோடு சிரித்தாள். சிவ நாமத்தை யுச்சரித்தாள். பதியைப் பிரிந்து போவதில்லை என்று உறுதி கொண்டாள். அறக்கடவுள் தன்னைப் புறந்தள்ளுவாரோ? என்று அஞ்சினாள். தருமதேவதையை வணங்கினாள். ''தயை மிக்கவரே! வரங்களைக் கொடுத்த உம்மை வணங்குகிறேன். வாழ்த்துகிறேன். அவற்றிற்குக் கடப்பாடுடையேன். பத்தினிப் பெண்ணாகிய எனக்குப் பதியைத் தவிர வேறு ஏன்? இறந்த உடம்பை அலங்கரிப்பதைப்போல், எனக்கு வேறாக உள்ளவர்களுக்கு நன்மை செய்தீர். அதனால் எனக்கென்ன பயன்? யான் மகிழ முடியுமா? யான் கொழுநனுடன் இருப்பதனாலல்லவா மகிழ்ச்சி யடைகிறேன்? அதனாலல்லவா துன்ப மில்லாமலிருக்கிறேன்.

உயிரிலாத நல்லுடலினைப் பூண்களா லுடையால்
இயலு மாலையாற் சாந்தினுல் எழில்பெறச் செயல்போல்
அயலி னுள்ள பேறளித்தனை ஆளனை யன்றிப்
பயனி யாதினிப் பாவையர்க் குளவெனிற்பகராய்.

எம்பெருமானே! என்னைப் போகச் சொல்ல வேண்டா. கற்பிழந்து உயிர் வாழ யான் விரும்ப வில்லை. உமக்கு மேற்பட்ட கடவுளை நான் பார்க்க வில்லை. நீர் உருத்திரராக வருகிறீர். நீரே நாரண ராக வருகிறீர். நீரே தருமம். நீரே முறை. நீரே கதி. உம்மை வணங்குவதில் நான் மகிழ்கிறேன், நீர் வேதத்தைச் சொன்னவர். உம் மொழி சுருதி. கருணைக்குரியவர் உம்மை யன்றி யார்? மேகம் உம்மால் மழை பொழிகின்றது. உலகம் உம்மால் சுழலுகின்றது. நெறி தவருதவரே! இன்பமுந் துன் பமும் நீரே! என்னை நன்ருகப் பாரும். என் துயரும் உமக்குத் தெரியும். உணர்கின்றவர் நீரே. பெண் என்று நினையும். என்னைப் போகச் சொல்வதால் உமக்குப் புகழ் இல்லை. எனக்கு அபயமளித்தால், கடவுள் மகிழ்கிருர். என்னைக் காப்பதால், தருமம் சிதையாது. என்னைக் கணவனுடன் இருக்க விடும்.

கணக்கொடு கருத்து முறைமையும் பிறவுங்
கடவுள்நீ கருணை செய்தவர் பால்
பிணிப்புரு துன்சொற் கருதியே யன்ரே
பேசலென் மாசிலா யென்னைத்
துணைக்கொளு முரியோன் றன்னுடன் கொடுபோய்த்
தோமற தீமை நீக்கெனலுந்
தணப்பறுங் கால தண்ட வெண்கரத்தோன்
தண்ணளி புரிந்திது பகர்வான்.

ரிஷியே! வழி நடைப்பில் எனக்குத் துன்ப மில்லை. கணவருக்கு அருகிலிருத்தலால், இது தூர மன்று. என் மனம் வேகமாக ஓடுகின்றது. பேதை யேன் உள்ளத்திற் பட்டதைச் சொல்லுகிறேன். நீர் போய்க்கொண்டே கேட்கலாம். எதற்காகவும் நிற்க வேண்டா. இனி யான் திரும்பப்போவதில்லை. புகழுள்ள உம்மை, விவஸ்வானுடைய, குமாரர் என்று அறிகிறேன். அந்த சூரியன், எங்கட்கு மூதாதை. சூர்ய குமாரரே! அதனுல் நீரும் நானும், ஒருகுலம். ஒரு பிதாவைப் பெற்றுள்ளோம். உடன் பிறப்பாகிய எனக்குக் கேடு சூழலாமா? முனிவர்கள், இதனுல்தான், வைவசுதரென்று, உம்மை அழைக் கிருர்கள்.

ஈசுவரரே! நீர் பகை பார்ப்பதில்லை. நட்பு உமக்குக் கிடையாது. சமத்தை யுடையவர். உயிர் களிடத்தில் ஒரு படித்தான அருளுடையவர். சமன் என்றே உம்மை வேதஞ் சொல்லுகிறதே. ஏற்றத் தாழ் வில்லாத உமது ஆட்சியில்தான், உயிர்கள் வசப் பட்டு நடக்கின்றன. மக்கள் உம்மை நம்புகிருர்கள். ஏன்? நீர் நல்லவராக இருக்கிறீர். தன்னையும் நம் பாத ஒருவன் நல்லவர்களை நம்புகிருன். அதனுல், ஒவ்வொருவரும், உம்மை நம்மவன்-நமன், என் கிருர்கள். என்னிடத்தில் ஏன் பாரபட்சம்? நான் குழந்தை யல்லவா? உம்முடைய சக்தியையும் பெரு மையையும், நான் அறிவேனு? மன்னியுங்கள். என் பர்த்தாவை விட்டு என்னைப் பிரிக்காதீர்கள்'' என்று இரும்பு உருகுமாறு உரைத்தாள்.

இயமன் கேட்டார். உருகினர். குழைந்தார். இறும்பூதுற்ருர். உடல் புல்லரித்தது. தன் அறிவைக் குறைவாக மதித்தார். "வாகீசுவரி! உன் சொற்கள், திட்பமும், நுட்பமும் வாய்ந்தவை. இதற்கு விடைகூற, யான் அசக்தன். உன்னைத் தவிர, யார் இப்படிப் பேசமுடியும்? அமுதமயமான உன் சொற்கள் என்னை மகிழ்வித்தன. வேதம் போன்ற, கருத்து நிறைந்த இது போன்ற உரைகளை யான், இதற்கு முன் கேட்டதில்லை. மகிழ்கிறேன். கல்யாணி! வரத்தைத் தருகிறேன். கணவனைத் தவிர வேறு வரங் கேள். உனக்குக் கொடுப்பதனுல், நான் பாக்கியவானுகிறேன்" என்று பேசினர்.

சாவித்திரிக்கு, வரத்திற் பிரீதியுண்டாகவில்லை. அப்பொழுது அவர்கள் இருவருமே, தேஜோமயமான சபையின் நடுவில் நின்றிருந்தனர். நூறுயோசனை நீளமுள்ளதும், அதே அளவான, அகலமுள்ளதுமான அச்சபை, நினைத்தபடி உருவெடுக்குந் தன்மையை உடையது. கண்ணைப் பறிக்கும், மணிகள் அங்கு இருந்தன. குளிர்ச்சியும், சூடும் இருந்தன. பசி, தாகம், மூப்பு, பிணி, சாக்காடு இவை வசப்பட்டுத் துயருழந்தவரும் அவற்றை வென்றவர்களும் அங்கிருந்தனர்.

கண்கண்ட தெய்வமான தீக்கடவுள் அங்கிருந்தார். சப்த மருத்துக்களும், அட்ட வசுக்களும் இருந்தார்கள். அகத்தியர், புலத்தியர், ததீசி, மரீசி, முதலிய தவஇருஷிகளும், மாந்தாதா, இட்சுவாகு, யயாதி, ப்ருதஸ்வன், சர்யாதி, சூர்ஷ்டி

ஷேணன் முதலிய மன்னர்களும், வருணன், குபேரன், அசுவினி, நிருதி முதலிய தேவர்களும், [1] இராம லட்சுமணர் முதலிய கடவுள்களும், அங்கிருந்தனர்.

இன்னும், நுரையை உண்ணும், பேனபர்களும், நீராவியை உண்ணும், ஊஷ்மபர்களும், அமிர்தமுண்ணும், சுதாவர்த்தர்களும், தீயிலிருக்கும், பர்கிஷர்களுமான அநேக ஆயிரம் பிதிரர்கள் அங்கிருந்தனர். நூறு நூருகவும், ஆயிரமாயிரமாகவும் கூடியிருந்தும், அச்சபை நெருக்கமில்லாமலிருந்தது. இனிய ஒலி கேட்டுக்கொண்டே யிருந்தது. நறுமணங் கமழ்ந்தது. பாவத்திற்கும், புண்ணியத்திற்கும் அதுவே நிலைக்களனுயிருந்தது. உலகத்திலுள்ள எல்லாப் பொருள்களுக்கும், அங்கே மூலமிருந்தது. இரவு பகல் அங்கிருந்தே உண்டாயின.

அத்தகைய பெரிய சபையில் சாவித்திரி நின்ருள். தரும தேவதையால், சாவித்திரிக்கு முன், ஆசனத்தில் உட்கார முடியவில்லை. அங்குள்ள அத்தனை பேர்களும் எழுந்து நின்றனர். இயமன் மந்திரியான காலன் எழுந்தான். கணக்கெழுதும், சித்திரகுப்தன் எழுந்தான். தூதுவர்கள் எழுந்தார்கள். கொடுமையே வடிவமான பல தூதர்களும் எழுந்து நின்ருர்கள். பிரம்மாண்டமான அரியாசனம், உட்காரப்படாமலேயே, காலியாக இருந்தது.

சாவித்திரி எல்லோரையும் பார்த்தாள். எல்லோரும் அவளைப் பார்த்தார்கள். யாவரையும் தலை

[1] உத்தர ராமாயணம் பார்க்க.

யால் வணங்கினுள். யாவரும் அவளை வாழ்த்தினுர் கள். சாவித்திரி கூற்றுவனை நோக்கினுள். "கர்த் தாவே! நான் மிகவும் புண்ணியசாலி. உம்மைக் கண்டேன். உம்முடன் பேசினேன். உம் நகரம் வந்தேன். வர முடியாத இந்தச் சபைக்கும் வந் தேன். உங்கள் கருணைதான், இதற்குக் காரணம். கொடை வள்ளலாகிய நீங்கள் வரங்கொடுக்க நிற் கிறீர்கள். நான் அப்படியே பெற்றுக்கொள்வேன்.

அரசரே! கொடுக்கிறேன் என்ற பின், அதனை மாற்றுவது முறையல்ல. நீர் அறத்தின் வடிவம். கொடுத்த பின், ஏன் கொடுத்தோம் என்றும், நல்ல வர்கள் நினைப்பதில்லை. அதற்காக மனவருத்த மில்லை. நல்லவரோடு உறவாடினுல், வீணுகிற தில்லை. சாதுக்களிடத்தில் பயமேது? எப்படி வேண்டுமானுலும் பேசலாம். அவர்கள் உரிமை யைக் கொடுக்கிருர்கள்.

நல்லவர்கள், சூரியனையும், பூமியையும், நடத்துகிருர்கள். உலகைத் தாங்குவதே, அவர்கள் தான். சென்றதற்கும், வருவதற்கும் அவர்கள் ஆதாரம். பிரபுவே! நல்லவர்களை அணுகினுல், காரியம் நடைபெறவில்லையே, என்று வருந்த வேண்டியதில்லை. பெரியவர்களினுல், அன்போடு, அடையப்பட்ட நடை இதுதான். பிறருக்கு, நிஷ்ப் பலனுக உபகரிக்கிருர்கள். தன்னலமில்லை. சான் ருேர்களிடம் உண்டாகும், மகிழ்ச்சிதான் நிலைக் கிறது. அவர்களால் ஏற்பட்ட பொருளும், புகழும் அழிவதில்லை. காக்கின்றவர்கள் அவர்களே.

கடவுளே! நீர் சுகதுக்கமாக விளங்குகிறீர். பாவமும் புண்ணியமும் நீரே! நல்லவர்களும், தீய வர்களும் உம்மை நாடுகிருர்கள். உம்மை அடைந் தவர்கள் துன்பப்படுவதில்லே. சோர்வடைவதில்லே. காரியம் நிறைவேருமல் திரும்புவதுமில்லே. எனக் குக் கொடுக்கும் வரம், நிலேயானதாக இருக்கட்டும். அதனுல், என்பதி, மேலுலகங்களேப் பெறட்டும். அதனுல், எங்கள் பிதிரர்கள் திருப்தியடையட்டும். பதிவிரதைகளுக்கு ஏற்ற வரத்தையே கேட்பேன். அதனேயே கொடும். எங்கள் குலம் வளரவும், கற் புடையவளாகிய எனக்கு என் பதியினிடமிருந்தே தோன்றுபவர்களும், பலமும், வீர்யமும் உள்ளவர் களான, நூறு [1] ஔரச புத்திரர்களேக் கொடும். இதனேயே யான், வரமாக வரிக்கிறேன்'' என்ருள்.

தரும நன்மனத்தோர் தம்முடைத் தோற்றஞ்
சாற்றருந் துயர்தவிர்த் தினிமை
தருமென உரைத்தார் குரவர்மற் றதற்கோர்
பிழைபடுந் தகையவோ நாயேன்
தருமவான் கடவுள் உனேயெதிர்ந் தேத்திச்
சரணடைந் தேன்குறை சார்தல்
தருமமோ வென்ருள் பருப்பதத் திறைவன்
தந்த மாதினேநிகர் தவத்தாள்.

அப்பொழுது, ஆ! ஆ! என்ற ஒலி எழுந்தது. மணிகள் இடைவிடாமல் ஒலித்தன. முனிவர்கள் கைதூக்கி வாழ்த்தினர். அப்படியே ஆகட்டும்; என்ருர்கள். "தருமனே! அவள் விரும்பியதைக் கொடு'' என்ருர்கள். இயற்கையாகவே பூமழை

[1] ஔரசர்—கணவனிடமே பிறப்பவர்.

பொழிந்தது. உமையவள் பெருமானைப் பார்த்தார். சிவபெருமான் தேவியைப் பார்த்தார். இருவரும் புன்னகை புரிந்தார்கள். அங்கிருந்து ஒரு ஒளி, சாவித்திரியை அடைந்தது. சாவித்திரி, ஐந் தெழுத்தை மறக்கவில்லை.

அப்பொழுது அங்கே ஒரு அதிசயம் நிகழ்ந்தது. தரும தேவதை கையிலிருந்த பாசம் நழுவிக் கீழே விழுந்தது. அதிற் பிணித்திருந்த பிணிப்புக்கள் அகன்றன. சத்தியவான் விடுபட்டான். எல்லோ ரும் அதனைப் பார்த்தார்கள். சாவித்திரி பார்த்தாள். இயமனுங் கண்டான்.

அளவிறந்த மகிழ்ச்சியினல், சாவித்திரியை அறக்கடவுள் வணங்கினர். "புனிதமானவளே! உன்னல் இந் நகரம் புனிதமடைந்தது. இந்த வரத்தைக் கேட்க நீயே தகுதியுடையவள். உனக்கு அந்த வரத்தைக் கொடுப்பதில் பெருமையடை கிறேன். பதிவிரதையே! தருமம் நிறைந்ததும், சுநாதமும், பொருளும் கூடியதும், மனதிற்கு இனி யதுமான, சொல்லைச் சொன்னய். அந்த வரம் உனக்குச் சித்திக்கும். எனக்கு உன்னிடத்தில், உத்தமமான பக்தி உண்டாகிறது. நீ வணங்கத் தக்கவள்.

உன் புகழ் நிலைத்து நிற்கும். உன்னுடன் சேர்க்கை, எனக்கும் புகழைத் தந்தது. உன் பெயர் உள்ளவரை, என்னையும் நினைப்பார்கள். கற்பரசி! யார் ஒருவர், உன் பெயரைச் சொல்கிருர்களோ,

அவர்களை மரணம் அணுகுவதில்லை. உன்னை உபா சிப்பவர்களைக் கால பாசம் பிடிக்காது. உன் கதை யைப் படிப்பவர்களிடம், யமதூதர்கள் போகமாட் டார்கள். சாவித்திரி-என்பது மகாமந்திரம். உன்னை வணங்குகிறேன். தோத்தரிக்கின்றேன். விருப்பம் போல் செல். உன்னை நிற்கச் சொல்லவோ, போகச் சொல்லவோ, உரிமையில்லாதவன்'' என்று பேசினர்.

சாவித்திரி மகிழ்ந்தாள். மனதிற் சிரித்தாள். ''கௌர்வத்தைக் கொடுப்பவரே! தங்களால் இந்த வரம் கொடுக்கப்பட்டது. புத்திர பலப் பிராப்தி என்பது, பதியினல் உண்டாவது. கற்புடைய பெண்களுக்குப் பதியினலன்றி இவ்வரம் நிறை வேருது. மற்றைய வரங்களைப் போலல்ல. உம் வாக்கு சத்தியமாகட்டும். பதியைவிட்டுப் பிரிந்த நான், மரித்தவள் போலானேன். நான் பதியைப் பெற அனுக்ரகியும். இது எனக்கு ஐந்தாவதான வரமாக இருக்கட்டும்'' என்ருள்.

தருமர், ''சத்தியவதியே! எந்த வரமும் என்னல் உனக்குக் கொடுக்கப்படவில்லை. பதிவிரதையாகிய நீயே எடுத்துக்கொண்டாய். கற்புடைய பெண்கள் மூவுலகையும் காக்கிருர்கள். அவர்கள் பெருமை மூவர்க்கும் வராது. த்ரிமூர்த்திகளும், அவர்கள் ஏவல் கேட்கிருர்கள். ஏவல் வழி நிற்கவில்லை யானல், அவர்கள் திரிமூர்த்திகள் தான். நான் எம்மட்டு?

உனக்கு வரங்களைக் கொடுப்பதற்காகக், கடவுள் என்னைக் கருவியாக்கிக்கொண்டார். திருவருட் செயலை இன்னதென்று யாரறிவார்? உன்னைக் காணவும், உன் வேத வசனத்தை இங்குள்ளவர்கள் கேட்கவுமே, உன் கணவன் உயிர், இங்குவந்தது போலும்? உன் வாயிலிருந்து சொற்கள் வந்தவுடனே கட்டுக்கள் அவிழ்ந்தன. சத்தியவான் விடுபட்டான். இப்பொழுது அவன் இங்கில்லை. நீ கண்களை மூடித் திறந்தால், உன் கணவன் அருகில், காட்டில் இருப்பாய்.

கல்யாணி! குலத்தை மகிழ்விப்பவளே! நான் உன்னால், தருமங்களைக் கேட்டு மகிழ்ந்தேன். உன்னை யிதுவரைக்கும் கொண்டு வந்ததனால், எனக்குத் தீமை யுண்டாகாதிருக்கட்டும். அந்த வரத்தை நீ எனக்குக் கொடு. இந்த சத்தியவான், நோயில்லாதவன். தருமங்கள் நிறைந்தவன். உன்னுடன் நானூறு யாண்டுகள் நிலவுலகில்வாழ்வான். இனிமையாகச் செங்கோலோச்சுவான். வேள்விகளால் தேவர்களையும் தருமத்தால், உலகத்தையும் மகிழ்விப்பான். கொடைத் தன்மையால் அழியாத புகழை அடைவான். உன்னிடமிருந்து, நூறு புத்திரர்களை உண்டுபண்ணுவான். அரசர்களான அவர்கள் யாவரும், சாவித்திரர் என்ற பெயரோடு, புத்திர பௌத்திரர்களோடு நெடிது காலம் வாழ்வார்கள். உன் தாயினிடம் உனக்குத் தம்பியாகத் தோன்றுகின்றவர்கள், மாலவர்கள்-என்று புகழ் பெறுவார்கள். பதிவிரதையே! போய்வா. எனக்கு

மகிழ்ச்சியாக இருக்கிறது'' என்று வணங்கி விடை கொடுத்தார்.

சாவித்திரி கண்களை மூடினாள். பழையபடி காட்டிற்கு அதே யிடத்தில் வந்தாள். சத்தியவானை மறுபடியும் தன் மடியில் வைத்துக்கொண்டாள். சத்தியவான் கால்கள் அசைந்தன. சாவித்திரி சிவநாமங்களை வேகமாகச் சொன்னாள். சத்திய வான் இமைகள் படபடத்தன. கண் திறந்தான். மனைவியைப் பார்த்தான். சிவா-என்றான்.

சாவித்திரி கணவனைப் பார்த்தாள். அவன் முகத்தையே பார்த்தாள். கார்த்திகை மாதத்து மேகம் போல் அவள் கண்கள் கண்ணீரைக் கொட் டின. துக்கம் பீறிட்டுக்கொண்டு வந்தது. அவன் முகத்தைக் கட்டித் தழுவினாள். முகத்தோடு முகம் வைத்தாள். கோடானு கோடி முத்தங் கொடுத் தாள். குலுங்கிக் குலுங்கி அழுதாள்.

சத்தியவான் தன் இரு கரங்களாலும், சாவித் திரியின் கழுத்தைக் கட்டிக்கொண்டான். வெகு நேரம் அவளைப் பார்த்துக்கொண்டிருந்தான். எழுந் திருக்க முடியவில்லை. உடல் அயர்ந்திருந்தது. அங்கங்களெல்லாம் வலித்தன. என்ன, என்னவோ நினைவுக்கு வந்தன. நாம் இங்குதான் இருக்கிறோமா- என்று நினைந்து பார்த்தான். நினைவுகளை நினை வுக்குக் கொண்டுவந்தான். கொஞ்சம் கொஞ்சமாக யாவும் நினைவுக்கு வந்தன. தான் விறகு பிளந்த தும், மயங்கி விழ்ந்ததும், நினைவுகொண்டான். அப்

புறம் என்ன? அப்புறம் யார் வந்தது? யார் அது? ஏதோ நினைவுக்கு வந்ததைப் போலுமிருந்தது. அயல் நாடு போய் வந்தவனைப்போலே, மறுபடியும், மறு படியும், மனைவியை அன்போடு பார்த்தான். அவன் பார்வையில், குழந்தைத் தன்மை இருந்தது. தன்னைக் காத்த கடவுளைப் பார்ப்பதுபோல், பார்த்தான். நெடுமூச் செறிந்தான். கால்களை உதறினான். அசைந்து கொடுத்தான். 'சாவித்திரி!'—என்றான்.

"கண்மணி! நான் எங்கிருக்கிறேன்? வெகு நேரம் உறங்கி விட்டேனா? நீ என்னை எழுப்பி யிருக்கலாம். உத்தமியாகிய நீ கணவனை உறக்கத்திலிருந்து எழுப்பமாட்டாய். மாதரசி! தருமங்கள் உன்னிடத்திலிருந்துதான் தோன்றுகின்றன. எனக்கு எல்லாம் நினைவுக்கு வருகின்றன. கரிய ஆண்மகன் ஒருவன் வந்தான். என்னை இழுத்தான். அவன் எங்கே? பொழுது சாய்ந்து விட்டதே? நீ மிகவும் களைத்திருக்கிறாய். உணவும் உண்ண வில்லை. துணையின்மையால் தனிமை கண்டு அஞ்சினாயோ?" என்றான்.

சாவித்திரி தன்னைத் தேற்றிக்கொண்டாள். தேவியை மனமாரத் துதித்தாள். கணவனை வணங்கினாள். "அன்பே! சற்று அப்படியே இரும். களைத்திருக்கிறீர்கள். தாங்கள் நெடுநேரம் உறங்கினீர்கள். தாங்கள் பார்த்த அக்கரிய வடிவத்தினர் போய்விட்டார். ராஜ குமாரரே! களைப்பாறிய பின் எழுந்திரும்" என்று இதமான சொற்களைச் சொன்னாள். அப்பொழுது பொழுது சாய்ந்தது. "தன் மகன், இயமன்

தருமத்தினின்றுந் தவறவில்லை; கற்புடைய பெண்ணிற்கு இடையூறு செய்யவில்லை. பதிவிரதையின் சாபத்திற்காளாகவில்லை; நான்தான் முன் ஒரு பத்தினிப் பெண்ணால் துன்பப்பட்டேன்; இவனும் எங்கே துன்பப்படுவானோ? என்று அஞ்சினேன். நல்ல காலம். சாவித்திரிக்கு மகிழ்ச்சியே. என்னை விட இவன் அறிவுள்ளவன். தம்மிற்றம் மக்கள் அறிவுடைமை இனிது. இதனை நாகர்களுக்குச் சொல்வேன்'' என்று மகிழ்ச்சியோடு செல்பவனைப் போல், சூரியன் அத்தமித்தான். உடன் பிறந்தவர்களால், தூற்றப்பட்ட, சகோதரனின் வாழ்வு போல் வனம் இருண்டது. ஏதிலாரின் வசை மொழிகளைப் போல், பயங்கர ஒலிகள் எழுந்தன. துன்பத்திலும் மனஞ் சலியாத நல்லறிவாளர்களின் ஒழுக்கம்போல் நாகமணிகள் விளக்கெடுத்தன.

சத்தியவான் முயற்சியோடு எழுந்து உட்கார்ந்தான். மனைவியைத் தழுவிக்கொண்டே, சாய்ந்து அமர்ந்தான். எல்லாப் பக்கங்களிலும் நன்கு பார்த்தான். தெளிவெய்தியவனாக, ''நல்ல இடையுள்ளவளே! எனக்கு எல்லாம், நினைவுக்கு வந்துவிட்டன. பழங்களை நாம் இருவரும் சேகரித்தோம். விறகு பிளந்து கொண்டிருந்த எனக்குத் தலைவலி கண்டது. தலைவலியால் துன்பப்பட்ட நான், நிற்க முடியாமல் தவித்தேன். பிறகு உறங்கிவிட்டேன். உன் மடியில் படுத்தது எனக்குத் தெரியாது. கல்யாணி! அருவருப்பான இருட்டையும், கருத்து ஒளியுள்ள ஒருவனையும் கனவில் பார்த்தேன். அது என்ன? அதைப்பற்றி உனக்கேதாவது தெரிகிறதா?

என்னை அவன் வலிந்து இழுத்தான். நான் அவன் வசப்பட்டேன். ஒரு அழகிய பெண்மணி, எனக்காக அவனிடம் யாசித்துக்கொண்டிருந்தாள். நீ நன்கு அறிகிருயா? அவள் உன்னைப்போல்தான் இருந்தாள். கனவா? உண்மையா? வெகுதொலை சென்றதைப்போல் உணருகிறேன். என் உடல், பிழிந்தெடுத்ததைப் போல் வலிக்கிறது. சாவித்திரி! எனக்கு நேர்ந்த துன்பம் என்ன? அது எப்படி விலகியது? உன்னுல்தான் விலகியதா? குழம்புகின்ற எனக்குச் சொல்'' என்ருன்.

சாவித்திரி, ''ஆர்வலரே! இரவு மிகுகிறது. நாம் விரைவில், தவச்சாலை போகவேண்டும். தாங்கள் கண்டது கனவுமல்ல. சாவித்திரி தேவி யருளால், அது தங்களை விட்டு நீங்கியது. தங்கட்கு ஏதாவது தெரிந்து கொள்ள வேண்டுமானுல், நாளை சொல்கிறேன். எழுந்திருங்கள். மகா பாக்கியமுள்ளவரே! நன்கு களைப்பாறிய நீங்கள் நடக்கலாமல்லவா? உடம்பு எப்படி யிருக்கிறது? கூடுமானுல் எழுந்திரும். இருள் செறிந்து வருகிறது. என் தோளின் மீது கை வைத்துக்கொள்ளும். மெதுவாகவே நடக்கலாம். அம்மாவும் அப்பாவும், நம்மைக் காணுமல் வருந்துவார்கள். சூரியன் மறைந்தான். இரவு, நடுநிசியாக இருக்கிறது. காட்டு விலங்குகளும், அரக்கர்களும் அஞ்சும் வண்ணம் கூச்சலிடுகிருர்கள். அவைகளும், அவர்களும், ஓடுவதால், சருகுகள் மிதிக்கப்பட்டு, உடல் சிலிர்ப்பைத் தருகிறது. உங்களுக்கு நடக்க முடியுமா? முடியாவிட்டால், இங்கேயே தங்கிவிடலாமா? பொழுது

விடிந்தபின் போகலாமா? தங்கள் உள்ளக்கிடக் கையை அருளுங்கள்'' என்று பேசினுள்.

> இளைத்த மேனியும் வருத்தமு மிரவு நற்காடுங்
> களைத்த வேடையுந் தனிமையு மொருப்படக் கண்டோர்
> தளைத்த கந்தடு களிறுடைச் சாலுவர்க் கிறையே
> திளைத்திரா விவ ணிருத்தியோ சேறியோ வென்ருள்.

சத்தியவான், துன்பத்தோடு எழுந்து நின்ருன். மனைவியின் தோள்களைப் பற்றிக்கொண்டான். பற்றிய கைகள் நடுங்குவதைச், சாவித்திரி யுணர்ந் தாள். கால்கள் நடுங்கின. நிற்க முடியவில்லை. கால் பெயர்க்க இயலவில்லை. சாவித்திரி, அவனைத் தாங்கித் தழுவிக்கொண்டாள். மெல்ல ஒரு அடி எடுத்து வைத்தான். விழுந்துவிடுபவனைப்போல், தள்ளாடினுன்.

சத்தியவான், "பெண்மணி! சூதாடிகளின் நெஞ்சைப்போல், இருண்ட இவ்வனத்தில், வழி தெரிவது துன்பம். எனக்கோ, அறிவு மயங்கி யிருக் கிறது. நீயும் புதியவள். எப்படிச் செல்வது? வழி தெரியாவிட்டால், அலைவதுதான் மிச்சம்'' என்ருன். சாவித்திரி அவனை அன்போடு அணைத்துக்கொண் டாள். துன்பத்திஞல், நடுங்குகின்ற அவன் உடம்பை, இறுகப் பிடித்துக்கொண்டாள். "காத லரே! தங்கட்குத் துன்பமாஞல் போகவேண்டா. காட்டுத் தீ எரிகிறது பாருங்கள். அதிலிருந்து, நெருப்பைக் கொண்டுவந்து உலர்ந்து பட்டுப் போன, மரக்கட்டைகளைக் கொளுத்துகிறேன். தீ இருந்தால், கொடிய விலங்குகள், வாரா. ஞானத்

தீ யிருந்தால், காமக்குரோதம், முதலிய துர்க்குணங் கள் நெருங்காதல்லவா? காடு நன்ருகத் தெரியுமள வுக்குப் பொழுது விடிந்தபின் போகலாம். உங்கள் ஆணைப்படி நடப்பேன். பழங்களை யுண்டு, என் மடியில் படுத்துக்கொள்ளுங்கள்'' என்ருள்.

சத்தியவான், மெல்ல நடந்து, நிலம் வரை வளைந்து நிமிர்ந்த, கிளையின்மேல், வசதியாகச் சாய்ந்து கொண்டான். தன்னை நன்ருகச் சோதித் துக் கொண்டான். சாவித்திரி கூடையிலிருந்து மாதுளையும், நாவற் பழங்களையும் எடுத்துக் கொடுத் தாள். மெல்ல, மெல்ல அவற்றை வாங்கி யுண் டான் முழு எலுமிச்சம் பழம் ஒன்றைத் தோலோடு, மென்று தின்ருன். அது அவனுக்கு மிகுந்த நன் மையைச் செய்தது. எங்கிருந்தோ, தண்ணீர் கொண்டுவந்து தந்தாள். பாதி இரவில், இருளில், காட்டில், சாவித்திரி, கேட்காமலேயே தண்ணீர் கொண்டு வந்தாள். கேட்டாலும் சில வீடுகளில் கிடைக்காதே? போய் எடுத்துக் குடியுங்களேன்! என்பார்களே? பாவம்! உம். என்ன செய்வது? அவர்கள் பதிவிரதா தருமம் அப்படி?

“கண்மணி! நான் நன்ருக உணருகிறேன். சாவித்திரி தேவி என்னைக் காக்கவில்லை. இந்த சாவித்திரிதான் என்னைக் காத்தாள். மானே! உண்மையைச் சொல். நான் மரண மடைந்து விட்டேஞ? வந்தது இயமன் தானு?'' என்று, சத் தியவான், சாவித்திரியின் கைகளைப் பற்றி உரு கிஞன்.

15

சாவித்திரி புன்னகை புரிந்தாள். நாணித் தலை கவிழ்ந்தாள். கால்களால், நிலத்தைக் கீறிய வண்ணம், "நாயகரே! அப்படித்தான் இருந்தால் நான் அதைச் சொல்லலாமா? தங்கள் திருவடிப் பெருமை தானே அது. எனக்கு என்ன ஆற்றல் இருக்கிறது? உண்மையாகவே, இறை யருளின்றி ஏதாவது நடக்குமா? தேவரீர் வாய்மைக் கடவுள். குணக்குன்று. தவ சீலர். பக்திக்குறைவிடம். ஒழுக் கத்தின் உயிர். தங்கட்கு ஏன் துன்பம் வருகிறது? வந்தாலும், பனிபோல் நீங்கும். ஞானவாள் வெம் மைக்கு ஆற்றுமா? பல்லுயிர் போற்றுந் தங்கட்குத் துன்பஞ் செய்ய, அறக் கடவுள் எண்ணுவாரா?" என்று அடக்கமாகச் சொன்னாள். விரதத்தால், இளைத்து வெளிறிய அவள் முகம், நாணத்தால் சிவந்தது. எரிகின்ற தீயினால், அது மிகுதிப்பட்டுத் தெரிந்தது.

சத்தியவான் அவளை மார்பிறுக அணைத்தான். ஒரு குழந்தையைப் போல் அவளைப் பார்த்தான். 'தெய்வமே! இவள் எனக்கு மனைவியாக வாய்க்க, யான் என்னதவம் செய்தேன்? இது ஒன்றிற்கா கவே, நான் பதினாயிரம் பிறவிகள் எடுத்து உன்னை வழிபடவேண்டுமே? இறைவா!' என்று நினைத்துக் கொண்டான்.

"நெருக்கடியான நேரத்தில் எனக்கு நீ, உதவி செய்தாய். கோமளமே! யான் என்னை மறந்த போது, நீ என்னை மறக்கவில்லை. மறந்து சென்றிருந்தால், என்னை விலங்குகள் தின்று பசி

யாறி யிருக்கும். சாவித்திரி! யான் இறப்பேன் என்பது உனக்கு முன்னமே தெரியுமா? அதனுல் தான், என்று மில்லாமல், இன்று தொடர்ந்து வந் தாயா? கற்புடைய மனைவியைக் கொண்டவனுக்குத் துன்ப மேது? இல்லதென் இல்லவள் மாண்பானுல்— என்பது உன்னை நோக்கித்தான் போலும்! அருந் ததியால் வசிட்டர் சிறப்புற்ருர். அநசூயையால், அத்திரி முனிவர் புகழடைந்தார். சீதையால் இரா மருக்குப் பெருமை. உன்னுல் நான் காப்பாற்றப் பட்டேன். குலவிளக்கே! மனைவிதான் இருக்கும் போதும், இல்லாத போதும் அன்பு செலுத்துகிருள். இறந்த பின்னுந் துணையாவது அவளே. எவன் மனைவியை உடையவனே அவன் எல்லாமுடை யவன்.

பன்னியுள்ளவனே தமருள்ளவன் பாக்கிய முளனுமே
பன்னியுள்ளவனே சுகமுள்ளவன் பகர்கிரியை யுளோனும்
பன்னியுள்ளவன் நம்புதற் குரியவன் பகர்மனையவனுமே
பன்னியே உயிரிருக்கினு மிறக்கினும் பரிந்தனு சரிக்கின்ருள்.

—கிருபானந்தவாரி. (மகாபாரதம்)

வசீகரி! மனைவியைப் போல் உற்ருர் யார்? சிறந்த மனைவி, ஆபத்துக் காலங்களில், அமைச்சனு கிருள். உரையாடும் பொழுது தோழனுகிருள். உணவு படைக்கும்போது தாயாகிருள். தொண்டு செய்யும் போது, ஏவலாளாகிருள். தன் குலத்தை வளர்க்கும் குமாரரைத் தரும்போது, மனைவியா கிருள். அவளே உயிர். அவளே உணர்வு. அவளே இன்பம். அத்தகைய சிறந்த மனைவி நீ. என்

முற்பிறவியின் தவம். சென்ற பிறவியில், எவன், உடுக்கை யிழந்தவன் கைபோல் உதவும் நண் பனே, அவன், வரும் பிறவியில், மனைவியாகிருன். கடமை தவருத மனைவியும், கருணையுள்ள நண் பனும், வேறல்லவே?

உடன் பிறந்தும் பகைப்பவன், சென்ற பிறப் பின் பகையாளி. தீமையைச் செய்து, தீமையைப் பேசி, தீமையைக் கருதும், மாற்ருர் வரும் பிறவி யிலும், சகோதரனுகப் பிறந்து. அதனையே செய் கிருர்கள். எல்லோரும் அப்படியா? நற்குணங் களைப் போன்ற சகோதரர்களும் இருக்கிருர்களே! எவன் தன் துணைவனைக் கண்ட இடத்தும், காணு இடத்தும் தூற்றுகிருனே, அவன் போன பிறவியின் பகை. சகோதரனை நையாண்டி செய்வதற்காகவே கையுறைகள் கொடுத்துச் சில கயவர்களைச் சூழ வைத்திருப்பார்கள். அவர்கள் அவனை வைவதில், இவர்களுக்கு மகிழ்ச்சி. சிலர் திருப்பணிகள் செய் வார்கள். குளமோ, கோயிலோ? சகோதரனுக்கும் ஒரு திருப்பணி நடக்கும். அதற்குப் பெயர் பழி. அதன் மதிள் அலர். அதனை உயரமாக்குவது, தூற்றல். புறங்கூறல் அதற்கு மெருகிடுகிறது. அவ தூறு, என்ற சுண்ணச் சாந்தோடு, அவச்சொல், என்ற கல்லை இட்டுக் கட்டப்படுவது அது. வசை மொழி என்ற கோபுரத்திற்கு, நையாண்டி என்ற கலசம் வைப்பார்கள். அதில் சமாதி வைக்கப்படுவது சகோதரனின் புகழ். இருந்தாலும், சகோதரனின் வைராக்கிய மென்ற வெய்யிலாலும், நேர்மை யென்ற மழையாலும், அந்தத் திருப்பணி இடிபாடா

கவே இருக்கிறது. அங்கே கொடூர மென்ற கள்ளி யும், அசத்தியமாகிய பேயும் வாழ்கின்றன. தருமம் என்ற வாளால், அவை அழிகின்றன. சாவித்திரி! இப்படி யிருப்பதைப் பார்த்தால், அது முற்பிறப்பின் பகைதானே. அது வல்வினை தானே? நீ கிடைத் தது நல்வினைதானே? தூய்மையானவளே! உன் னைப் புகழ எனக்குச் சொற்கள் கிடைக்கவில்லை. நீ அருகிலிருக்கும்போது, நான் எத்துணை முறை வேண்டுமானாலும், இறப்பேன்.

பெண்ணமுதே! என் தலைவலி போய்விட்டது. நாம் இனியும் இங்கிருக்கக் கூடாது. பெரியவர்கள் தேடுவார்கள். ஒரு காலத்திலும் நான் இப்படித் தாமதித்ததில்லை. சற்றுநேரமானாலும், என் தாய் வருந்துவாள். ஏன் இத்தனைத் தாமத மென்று கோவிப்பார்கள். உன் கையைப் பற்றிக்கொண்டு வருகிறேன். உன் துணையால் நான் என் தாய் தந்தையரை அடையவேண்டும். பகலிலும் என் னைப் பிரிவதை அவர்கள் பொறுக்க மாட்டார்கள். மற்ற முனிவர்களோடும் நம்மைத் தேடத் தொடங்கு வார்கள். 'நீ தாமதித்து வருகிறாய்' என்று என்னை முன் ஒரு முறை கோபித்திருக்கிறார்கள். இப்பொழுது எப்படித் துன்பப் படுகிறார்களோ? எங்கெங்கு தேடு கிறார்களோ?

இனியவளே! என் தாய் முதியவள். தந்தை யும் அப்படியே. 'குழந்தாய்! உன்னை ஒரு கணமும் பிரிய முடியவில்லை. நீ எங்களுக்குக் கண். உன்னால் இக்குலம் வளர வேண்டும். எங்களுக்குப் புகழ்

உன்னுல் வருகிறது. உன்னுல் நாங்கள் பிண்டம் பெறப் போகிருேம். ஆகவே, நீ இருக்கிருயோ— என்று நாங்கள் எண்ணுமளவும், நீ ஆலசியம் செய்யாதே’ என்று கூறியுள்ளார்கள். அவர்களைப் பார்ப்பதில், நான் விரைவு கொள்கிறேன். அவர்களைப் பாராமல் உயிரோடு இருக்க விரும்பவில்லை. சே! என்ன தூக்கம்? தூக்கமா? துக்கமா அது? தூங்கிக் கெட்டேன். நித்திரை என்னைக் கெடுத்துவிட்டது. நான் இன்னும் நித்திரையை விரும்பவில்லை. நித்திரையினுல் தானே இத்துயர்? ஆகவே, நான் விரைவாகக் குரவர்களைப் பார்க்க அவாவுகிறேன். நீ துணைசெய். என் தந்தையும், பதிநெறி மாருத தாயும் துன்பப்படக் கூடாது. அவர்கள் ஐயப்படுவார்கள். குழம்பி வேதனைப்படுமளவுக்கு நான் தவறு செய்துவிட்டேன். தேவி! இப்பொழுது என் உயிரின்மீது கூட எனக்கு ஆசையில்லை. நான் வாழ்வது அவர்களுக்காக. ஐயோ! எத்தனை நேரம் அவர்களைப் பிரிந்தேன்? எல்லோரையும் அவர்கள் விசாரிப்பார்கள். விரைந்து புறப்படு!” என்று துடித்தான்.

சாவித்திரி, பழக்கூடையை எடுத்துக் கிளைகளின் இடுக்குகளில், நன்ருக வைத்தாள். விறகுகளை ஒருபுறமாகக் கட்டி வைத்தாள். சமித்துக்களைப் பத்திரப்படுத்தினுள். சில பழங்களை மட்டும் எடுத்துக்கொண்டாள். தருமாத்மாவும், குருபக்தியுள்ளவனும், குரவர்களின் அன்புக்குரியவனுமான, சத்தியவான் தன் இரு கைகளையும், மேலே தூக்கிக் கொண்டு, குழந்தையைப்போல், ஓவென்று அழு

தான். அவன் அழுகை வனமெங்கும் எதிரொலித் தது. சாவித்திரி சிரித்துக்கொண்டே, அவனைத் தழுவி, அவன் கண்ணீரைத் துடைத்தாள். அவிழ்ந்த தன் கூந்தல்களை எடுத்து முடிந்துகொண் டாள். கணவனைத் தூக்கிக் கொண்டவளைப் போலவே, தன் கைகளால், ஆரத்தழுவி, நடத்திக் கொண்டு போனாள்.

''பிரபுவே! ஏன் அஞ்சுகிறீர்கள். நீங்கள் அஞ் சும்படியாக ஒன்றும் இல்லை. நிச்சயமாக நம் தாய் தந்தையர்கள் உயிரோடிருப்பார்கள். அதுமட்டு மல்ல, அவர்களுக்கு இடையூறுமில்லை. நான் பொய் சொல்வதில்லை. விளையாட்டிலும், வாய்மையைக் கடைப்பிடிப்பவள். நான், நல்ல விரதமும், வேள்வி யும் செய்திருந்தால், அவர்கள் நலமாக இருக்கட்டும். நாதரே! என்னால் உண்மையாகவே தவம் செய்யப் பட்டிருக்குமானால், இந்த இரவு, என் நாயகருக்கும், மாமனாருக்கும், மாமியாருக்கும், இனிமையாக இருக் கட்டும். என் சத்தியம் அவர்கள் உயிரைக் காக் கட்டும்''

என்று சாவித்திரி, உறுதியான சொற்களைச் சொன்னாள். மெதுவாகக் கணவனை நடப்பித்துக் கொண்டு வந்தாள். சத்தியவான், மனைவியின் பலத்தாலும், தாய் தந்தையரைப் பார்க்கவேண்டும், என்ற ஆர்வத்தாலும் நடந்து வந்தான். ''உயி ரமுதே! என் தாய் தந்தையரின் தரிசனத்துக்கு ஏங்குகிறேன். அவர்களை உயிரோடு பார்ப்பேனா? அது அப்படியிருக்கவில்லையானால், நான் உயிர்

பெற்றிருப்பேனே? என்னைத் தொட்டு ஆணையிடு கிறேன். பதிவிரதையே! காலவிளம்பமில்லாமல் போ. எனக்கு விருப்பமானதைச் செய். நான் உயிரோடிருப்பதை விரும்பு. போ" என்று துரிதப் படுத்தினன்.

சாவித்திரி சிரித்துக்கொண்டாள். இறைவனை ஏத்தினள். "ஆருயிரே! ஏன் இந்தப் பதட்டம்! நீங்கள் மெதுவாகவே நடந்து வாருங்கள். விரைவு வேண்டா. ஆசிரமத்தில் யாருக்கும் ஒன்றுமில்லை. நமக்கு நல்ல சகுனங்கள் ஆகின்றன" என்று இனிமையாகப் பேசிக்கொண்டே நடந்தாள். கால் களினால் தடவிக்கொண்டும், மரக்கிளைகளின் இடை யில் விழும், நட்சத்திரங்களின் ஒளியாலும், வழி தெரிந்து கொண்டு நடந்தார்கள். உயர்ந்திருப்ப தும், பருத்திருப்பதுமான மரங்களை, இன்னின்னவை என்று தெரிந்து, அதிக அலைச்சலில்லாமல், வழியை நிச்சயப்படுத்திக்கொண்டு நடந்தார்கள். பழங் களைத் தேடிக்கொண்டு எந்த வழியில் வந்தார் களோ, அந்த வழியிலேயே நடந்தார்கள். பலாச மரங்களடர்ந்த தோப்பில் இரண்டாகப் பிரியும் வழி யில், வடக்கு நோக்கிப் போனார்கள். அப்பொழுது சத்தியவான், "நாயகி! இந்தத் தனித்த வழிக்கு நீ துணையாகினாய். பயங்கரமான வழியில் துணை யாய் வந்தவளே! என் வாழ்க்கைக்குத் துணையான நீ, வழிக்குத் துணையானாய். உன் மாங்கல்யம் வாழ்க!" என்று பேசிக்கொண்டே நடந்தான்.

## காலன் தனக்கும் அஞ்சேன்

அங்கே மத்ர தேசத்தில், அசுவபதியும், மாளவி யும், இறைவனை நன்ருக வழிபட்டார்கள். சாவித் திரிக்கு நலம் பயக்கத் தக்க விரதங்களையும், தருமங் களையும், செய்தார்கள். நாட்களை எண்ணிக் கொண்டேயிருந்தார்கள். நாரதர் சொன்ன, அந்த நாளில், இருவரும் தேரேறிக் கானகம் வந்தார்கள். சாவித்திரியும், சத்தியவானும் போன அப்பொழுதே இவர்கள் வந்தார்கள். துயுமத்சேனருக்கு மகிழ்ச்சி. ஒரு யாண்டு கழித்து வந்த சம்பந்தியை நன்கு உப சரித்தார். இருவரும் அளவளாவினுர்கள். அசுவபதி, சத்தியவானுக்கு என்னவோ? என்று அஞ்சிக்கொண்டே யிருந்தார். பஞ்சாட்சரத்தை நன்கு செபம் புரிந்தார். ஒருபக்கம், சைப்யையும், மாளவியும், மனங்கலந்து உரையாடினர். அவர்க ளிடையே வேற்றுமையே இல்லை. மாளவி தன்னை அரசியாக நினைத்துக்கொள்ளவில்லை. சைப்யை தன்னை ஏழையென்று வருந்தவில்லை.

சத்தியவானைப் பற்றியும், சாவித்திரியைப் பற்றி யும் நெடுநேரம் பேசிக்கொண்டிருந்தார்கள். சாவித் திரியின் விரதங்களை யெல்லாம், அசுவபதிக்குச் சொன்னுர்கள். இன்று அவள், பாரணையாக இருந் தும், உண்ணுமல், கணவனுடன் சென்றதையும் கூறினுர்கள். அசுவபதிக்குத் தெரியும்; இன்று அந்த நாள்என்று.சென்றவர்கள் திரும்புவார்களோ? என்று அஞ்சினுன். அன்று யாரும் உண்ணவில்லை. எல்லோரும் சாவித்திரியைத்தான் எதிர்பார்த்துக்

கொண்டிருந்தார்கள். அப்பொழுது, பொழுதுபோய் விட்டது. திடீரென்று, துயுமத்சேன மன்னருக்குக் கண்கள் நன்ருகத் தெரிந்தன. கண்களைத் திறந்து திறந்து பார்த்தார். ஒரே வியப்பு.

எல்லாப் பக்கங்களையும் நன்ருகப் பார்த்தார். கண்களைக் கசக்கிவிட்டுக் கொண்டு பார்த்தார். இது உண்மையோ, என எண்ணினுர். "அசுவபதி! எனக்குக் கண்கள் நன்ருகத் தெரிகின்றனவே? உம்மைப் பார்க்கிறேன். எல்லாப் பொருள்களையும் பார்க்கிறேன். என்ன இது?" என்று உவகையுடன் பேசினுர். எழுந்தார். ஓடினுர். உள் அறையில் இறைவனை வழிபட்டார். இறைவா! என்ருர். பாவியேன் செய்த, தவம் பயன் தந்ததோ? என்ருர். திருநீறணிந்தார். மறுபடியும் வெளிவந்தார். சைப்யை மகிழ்வோடு கணவன் திருவடிகளில் வீழ்ந்து வணங்கினுள்.

துயுமத்சேனர், மகிழ்ச்சியோடு எல்லாப் பொருள்களையும் பார்த்தார். சூரியாத்தமனத்தைப் பார்த்தார். மரங்களைப் பார்த்தார். செடி கொடிகளைப் பார்த்தார். அசுவபதியையும் மாளவியையும் பார்த்தார். "நண்பரே! என்ன இது? எப்படி எனக்குக் கண்கள் கிடைத்தன? யார் இப்படிச் செய்தார்கள்?" என்ருர். அசுவபதிக்கும் மகிழ்ச்சி. மாளவி மகிழ்ந்தாள். மகள் துயருக்கிடையில் இது ஒரு ஆனந்தம்- "தங்கள் தவந்தான், கண்ணொளி கிடைத்தது" என்ருர்.

துயுமத்சேனர், "இல்லை இல்லை; என் மருமகள் தவந்தான். திருமகளைப் போன்ற அவள் விரதங்களால்தான் எனக்கு விழி கிடைத்தது. அவள் தீர்க்க சுமங்கலியாயிருக்கட்டும். சைப்யை! நான் முதலில் குழந்தையைப் பார்க்கவேண்டும்" என்றார். துயுமத்சேனருக்கு, இப்பொழுது குழந்தைகளைப் பார்க்க வேண்டும் என்ற வேகம் வந்துவிட்டது. ஏன் இன்னும் வரவில்லை? என்று துடித்தார். விரைவில் வர வேண்டும் என்று விரும்பினார்.

அசுவபதி, வருவார்களா? என்று எண்ணினார். மீண்டும் பார்ப்போமா? என்று ஏங்கினார். தெய்வங்களை எல்லாம் வேண்டினார். துன்பத்தை வெளிக்காட்டவில்லை. சத்தியவானுக்கு இன்றோடு ஆயுள் முடிவு-என்பதையுஞ் சொல்லவில்லை. இதற்கும், அதற்கும் உலவிக் கொண்டிருந்த துயுமத்சேனர், நின்றார். யாவரையும் பார்த்தார். 'அது என்ன சத்தம்? குழந்தைகள் வருகிறாற்போல் இருக்கிறது' என்றார். குழந்தைபோல் வாசலுக்கு ஓடினார். அங்கு யாருமில்லை. சிறு சத்தங்கேட்டாலும், அவர்களோ, என்று ஓடுவார். வாராமையால் எய்த்து வருவார். "உம். ஏன் வரவில்லை? வந்து விடுவார்கள். குழந்தைகள் தானே? விளையாட்டில், பொழுது போனது தெரிந்திருக்காது. கிட்ட கிட்ட வந்து கொண்டிருப்பார்கள்" என்பார்.

யார் முகத்திலும் தெளிவு இல்லை. சத்தியவான் சாவித்திரியைப் பார்ப்போமா? என்று நினைத்தார்கள். ஒருவரை யொருவர் பயங்கரமாகப் பார்த்தார்

கள். வெளிச்சம் மங்கிவிட்டது. இருள் சூழ்ந்து விட்டது. சொல்ல முடியாத தாபம் ஒவ்வொருவர் உள்ளத்திலும் புகுந்துகொண்டது.

"ஏன் நாம் இங்கிருக்கவேண்டும்? சத்தியவானே யும், சாவித்திரியையும் தேடிப் பார்ப்போம். எனக்கு இப்பொழுதே குழந்தைகளேப் பார்க்க வேண்டும். வாருங்கள் போகலாம்" என்று துயுமத்சேனர் விரைந்து முன்னே நடந்தார். யாறுகளிலும், குட்டைகளிலும் சென்று, சாவித்திரி! சத்தியவான்! என்று உரக்க அழைத்தனர். சோலேகளில் தேடி னர். மண் மேடுகளில் ஏறிக் கூப்பிட்டார்கள். வழியும் குழியுந் தெரியவில்லே. இருள் கப்பிக் கொண்டது. சாவித்திரி! சாவித்திரி! என்று ஓடினுர் கள். சத்தியவான்! எங்கே யிருக்கிருய்? மகனே! மகனே! என்று அலறினுர்கள்! தனித்தனியாக ஓடி னுர்கள். வந்து விட்டாளு? என்று, மீண்டு வந்து கேட்டார்கள். மறுபடியும் ஓடினுர்கள்.

கால்கள் தேய்ந்தன. கண்கள் இருண்டன. என்னவோ? என்று மருண்டனர். வயிறு பகீர் பகீர் என்றது. எய்த்தனர். இளேத்தனர். நெடுமூச் செறிந்தனர். விழுந்தனர். எழுந்தனர். விரைந்தனர். சாவித்திரி! என்று கதறினர். வழி நெடுக அழுதனர். துடித்தனர். ஆடைகள் கிழிந்தன. முட்கள் உட லேக் கிழித்தன. கால் சோர்ந்தது. வைத்த அடி தோறும், குருதி விழுந்தது. வேர்வை ஆருகப் பெருகியது. மகனே! மகனே! என்றும், மகளே! மகளே! என்றும் அவசமுற்றனர். கதறிக் கதறிக்

குரல் கம்மியது. விழி சிவந்தது. ஐயோ! அது அப்படியே நடந்துவிட்டதோ? என்று அசுவபதி மயங்கினர்.

எதிர்ப்பட்டவர்களை யெல்லாம் கேட்டார்கள். அந்தணர் கால்களில் விழுந்தார்கள். நல்லதைச் சொல்லுங்கள் என்ருர்கள். துயுமத்சேனருக்கு, உயிர் போகுமோ என்று ஆய்விட்டது. அநேகம் முனிவர்கள் இவர்கள் குரலைக் கேட்டு அங்கங் கிருந்து ஓடிவந்தனர். ஓடுகின்ற இவர்களைத் தடுத்து நிறுத்தினர்கள். என்ன? என்ன? என்ருர் கள். "ஐயனே...! ஐயனே....! என்...என் குமாரன்... சத்தியவானை......சத்தியவானைப் பார்த்தீர்களா? ஐயோ! காலையில் குழந்தைகள் போனுர்கள். இருட்டிவிட்டது. இன்னும் வரவில்லையே? என் செய்வேன்? சிவனே!" என்று இரைக்க இரைக்கப் பேசினர் துயுமத்சேனர்.

முனிவர்கள் ஆறுதல் சொன்னுர்கள். துன்பத் தால் தளர்ந்த துயுமத்சேனரைக் குழந்தையைப் போல், தூக்கிக் கொண்டார்கள். ஆசிரமத்திற்கு, மற்றவர்களையும் அழைத்து வந்தார்கள். முற்றத்தில் சுகமான படுக்கை விரித்து அதில் மன்னனை வளர்த் தினர்கள். மயில் விசிறியினுல் விசிறினர்கள். இத மான வார்த்தைகளைச் சொன்னுர்கள்.

எல்லா முனிவர்களும், சுற்றியும், விலகியும், நெருங்கியும், அங்கங்கும் இருந்தார்கள். பலர், பல வசனங்களைச் சொன்னுர்கள். எல்லோருக்குமே,

கொஞ்சம் கிலேசம்தான். குழந்தைகள் நன்ருக்த் திரும்பவேண்டும், என்பதற்காக எல்லோரும் இறைவனே வழிபட்டனர். துன்பம் விலகுமாறு, பல அறங்களேச் சொன்ஞர்கள். சிலர் கதைகளேச் சொன்ஞர்கள். சத்தியவான் இளமையைப் பற்றிச் சிலருரைத்தார்கள். சாவித்திரியின் பெருமையையும், அவள் பிறந்த வரலாற்றையும் சிலர் எடுத்துச் சொல்லினர். சாவித்திரியின் கற்பையும், சத்தியவானின் தருமத்தையும், அவர்கட்குத் துன்பம் வாராதென்பதையும், கடவுள் அவர்களுக்கு, அருளுவார் என்பதையும் கூறிஞர்கள். நேரம் போய்க்கொண்டேயிருந்தது.

“ஆ! மாணிக்கமே! வருவாயா? மருகி! நீ அறிவுள்ளவளாயிற்றே? உன்னிடந்தானே சத்தியவானே ஒப்புவித்தேன். அவன் மயங்கிய போது, நீ தெருட்டக்கூடாதா? புத்ரா! புத்ரா!” என்று புலம்பிஞர் துயுமத்சேனர். இவையொன்றையும் மாளவி யுணரவில்லே. நாரதர் சொன்னது நடந்து விட்டதென்று, கோ கோ-என்று அழுதாள். நீர் ஆருகப் பெருகியது. கண் சிவந்து எரிந்தது. மகளே! மகளே! என்று, விக்கிஞள். அசுவபதி அலமந்து நின்ருர். ‘சாவித்திரி! உன் கற்பு உன்னேக் காக்கவில்லேயா?’ என்று உருகிஞர். சைப்யை புழுவெனத் துடித்தாள். பிரிந்தறியாத மகனேயும், அன்புயிராம் மருகியையும், எண்ணி எண்ணிச் சோர்ந்தாள். தவச் சூழல், அவலச் சூழலாயிற்று. பல முனிபத்தினிகள் கதறிஞர்கள். ‘அம்மா! சாவித்திரி! வருவாயா!’ என்று வாய் விட்டு அரற்றினர். கைகளேப் பிசைந்தார்கள்.

என்ன செய்வது? என்று கேட்டுக்கொண்டார்கள். சிலர், காரணமில்லாமல், எங்காவது போய் வந்தார்கள்.

அப்பொழுது, அங்கிருந்தவர்களுள் சத்தியவாக் குள்ள, சுவர்ச்ச சென்ற முனிவரர் எழுந்தார். எல் லோரையும் பார்த்தார். கையமர்த்தினர். "சும்மா யிருங்கள். ஏன் அழுகிறீர்கள்? இப்பொழுது என்ன நடந்துவிட்டது? அப்படித்தான் நடந்துவிட்டால், நாம் என்ன செய்ய முடியும்? அது இயற்கைதானே? இங்குள்ளவர்களில், யாராவது காப்பாற்றுவார்களா? நாம் இறைவனைத் துதிக்கவேண்டும். துன்பத்திற் குடையக் கூடாது. நான் சொல்கிறேன்; சத்திய வானும், சாவித்திரியும் சுகமாக இருக்கிருர்கள். எல்லாச் சகுனங்களும், நன்ருக இருக்கின்றன. ஏன் பதட்டம்? நான் பொய் சொல்வதில்லை. மிக்க இளமையிலிருந்தே, பிரமசரியத்தை விடாது பயில்கிறேன். என் வாக்கு வீணுகாது. அவர்கள் நன்ருக இருக்கிருர்கள். துன்பத்தை விடுங்கள். நான் வேதத்தை முறையாகப் பயின்றவன். குருவும் அக்நியும், என்னுல் திருப்தி யடைந்தனர். எல்லா விரதங்களிலும் இருந்த யான் யாவற்றையும் காண்கிறேன். சத்தியவான் உயிரோடிருக்கிருன். யாவரும் அறியுங்கள். அசுவபதி இதனை உண்மை என்று தெளியட்டும்" என்று தீர்க்கமான வசனங் களைச் சொன்னுர்.

யாவருக்கும், மெய் புல்லரித்தது. 'அப்படியே ஆகுக' என்று நினைத்துக்கொண்டார்கள். சில

பெண்கள் ஒளி விளக்கிட்டனர். எல்லோரும், சிவ நாமங்களைச் சொன்னார்கள். திருநீறணிந்து கொண்டார்கள். சுவர்ச்சசின் மாணவன் எழுந்தான்; "என் ஆசிரியர் கூறியன யாவும் உண்மை. இது பொய்யாகாது. நாம் காணுமாறு அவர்கள், இப்பொழுதே வருவார்கள்" என்றான். மற்றும் பல முனிவர்களும், "ஆம். அது அப்படியே ஆகும். நாங்கள் சௌமங்கல்யத்தை அடைவாய் என்று வாழ்த்தியுள்ளோம்" என்றார்கள்.

பாரத்வாஜர் சிரித்தார். எழுந்தார். "ஒன்றுந் துன்பமில்லை. சாவித்திரி தவமும் சீலமும் புலனடக்கமும் உள்ளவள். அதனால் சத்தியவான் உயிர் பெற்றிருக்கிறான். இதில் ஐயமில்லை" என்றார். தாம்ப்யர்—என்ற மகரிஷி எழுந்தார். "துயுமத்சேனா! சாவித்திரியை இயமன் பற்றுவானா? அவள் தவம் நாம் அறிந்ததல்லவா? ஏன்? உனக்குக் கண் தெரிந்ததே? எதனால்? அது சாவித்திரியின் நெறியாலல்லவா? அது மட்டுமா? சாவித்திரி விரதமிருந்து உண்ணாமலேயே காட்டுக்குச் சென்றிருக்கிறாளே? இவை யெல்லாம் வீண் போகுமா? ஆகவே, அஞ்சுதலில்லை. சத்தியவான் உயிரோடு இருக்கிறான்" என்றார்

ஆபஸ்தம்பர் என்ற முனிவர் அனைவரையும் பார்த்தார். "உங்கட்கு நான் சொல்வது, வீண் போகாது. எல்லோரும் சிவநாமங்களைச் சொல்லுங்கள். எனக்கு மிருக, பறவைகளின் மொழிகள் தெரியும். அவைகள் என் காதுகளில் சொல்கின்றன.

'சாவித்திரியும்சத்தியவானும் உயிரோடிருக்கிருர்கள்; நடந்து வருகிருர்கள்' என்று சொல்கின்றன. நல்ல திசையில், பறவைகள் சொல்கின்றன. பயந் தெளி யுங்கள்" என்ருர். தௌம்யர் "உம்முடையபுத்ரனுன சத்தியவான் ஜீவித்திருக்கிருன். எல்லாக் குணங் களும் அழிந்தால், அவன் அழிவான். குணங்களுக்கு இருப்பிடம் அவன். தீர்க்காயுளுள்ளவனுன அவன் விரைவில் நம்மிடம் வந்து சேருவான்" என்ருர்.

சத்தியவானின் நண்பர்களான பல இளைஞர் களும், சாவித்திரியின் தோழிகளான பலயுவதிகளும், தனித்தனியாகவும், கூட்டம் கூட்டமாகவும், சத்தியவானையும், சாவித்திரியையும், தீப்பந்தங்களை எடுத்துக்கொண்டு, தேடிச் சென்றனர். சத்தியவான் செல்லுமிடங்களையும், வழிகளையும் மரங்களையும் சென்று பார்த்தார்கள். துயுமத்சேனன் முனிவர்கள் உரைகளினுல் சற்று தேறினுன். அசுவபதி 'இப்படி யும்நடக்குமா? சாவித்திரி வருவாளா?' என்று மயங்கினுன்.

அப்பொழுது ஒரு முகூர்த்த காலம் சென்றது. எல்லோராலும் எதிர்பார்க்கப்பட்ட சத்தியவானும் சாவித்திரியும் சிரித்துக்கொண்டும் பேசிக்கொண்டும் சிவநாமங்களைச் சொல்லிக்கொண்டும்அயர்ச்சியினுல் தளர்ந்தும், நடை மெலிந்தும் அந்த இரவிலேயே அங்குவந்து சேர்ந்தார்கள். அவர்களைக்கண்டு மகிழ்ச்சியினுல் எல்லோரும் எழுந்தார்கள். பல முனிவர்கள் கை கூப்பினர். சிலமுனிவர்கள் வாழ்த்தி ஞர்கள். முனிபத்தினிகள் சாவித்திரியை வீழ்ந்து

16

வணங்கினுர்கள். துயுமத்சேனர் மகளே! என்று ஓடிவந்தார். சாவித்திரி பிதாவே! என்று மாமனுர் திருவடியில் வணங்கினுள். வணங்கிய மருகியை வாரி எடுத்தார். தானீன்ற குழந்தையைப்போல் அணைத்தார். உச்சி மோந்தார். கண்ணீர் சிந்தினுர். முதுகைத் தடவிக்கொடுத்தார். அம்மா! அம்மா! என்ருர். அசுவபதி சத்தியவானைத் தழுவினுர். நாம் காணுவது கனவோ என்று ஐயுற்ருர். ஆனந்த பாஷ்பம் பொழிந்தார்.

சாவித்திரியும் சத்தியவானும் யாவரையும் தனித்தனியாக வணங்கினுர்கள். ஆசிபெற்ருர்கள். சாவித்திரி தாயாரையும் மாமியையும் வணங்கினுள். சைப்யையும் மாளவியும் கற்பரசியைக் கட்டியணைத்தனர்; உச்சிமோந்தனர். மறுபடியும் மறுபடியும் அவளைப் பார்த்தார்கள். உரைக்கமுடியாத உவகையுற்றனர். அங்கு மகிழாதார் இல்லை. ஒவ்வொருவரும் தங்கள் தங்கட்கே மக்கள் வந்ததாகக் களித்தனர். யாவரும் அமர்ந்தனர்.சத்தியவானும்,சாவித்திரியும், சைப்யையும், மாளவியும் நின்று கொண்டேயிருந்தனர். எத்தனை கூறியும் அவர்கள் அமரவில்லை.

முனிவர்கள், "துயுமத்சேன! உன்னைக் காண நாங்கள் மகிழ்கிருேம். நீ சத்தியவானேடும் சாவித்திரியோடும் கூடியிருக்கிருய்.உன்னைக் காண உவகை பெருகுகிறது. கண்களைப் பெற்ற உன்னை முன்னைவிட மிக்க மகிழ்ச்சியோடு பார்க்கிருேம். உனக்கு இன்னும் பல நன்மைகள் பெருகும்" என்ருர்கள்.

துயுமத்சேனன் மகனை வெகுநேரம் உற்றுப் பார்த்தார். சபை அமைதியாக இருந்தது. ஆறு வய துக் குழந்தையில் அவனைப் பார்த்ததல்லவா? தன் மருகியைப் பார்த்தார். அவள் அழகும், அடக்கமும் அவர் நெஞ்சையீர்த்தன. ''மகனே! சத்தியவான்! ஏன் இத்தனைத் தாமதம்? நாங்கள் மிகவுந் துன்புற்றோம். முனிவர்களும் துடித்துவிட்டார்கள். அசுவபதியும் மாளவியும் காலையிலேயே வந்தார்கள். உங்களுக்கு நேர்ந்த இன்னலென்ன? வருவதற்குத் தடையாயிருந்தது எது? நீங்கள் தருமந் தெரிந்தவர் கள். வெறும் கேளிக்கையில் ஈடுபட்டுக் காலவிரயம் செய்பவர்கள் அல்ல. நீங்கள் வாராமைக்கு வேறு காரணம் இருக்கவேண்டும். நாங்கள் யாவரும் ஆவலாயிருக்கிறோம். சொல். விரைவாகச் சொல்'' என்றார்.

சத்தியவான், தந்தையாரையும் மற்றவர்களை யும் வணங்கினான். தந்தையாற் கொடுக்கப்பட்ட கட்டளையைத் தாங்கிப் பணிவோடு பேசினான். ''அப்பா! தங்கள் கட்டளையால், சாவித்திரியோடு நான் கானகம் போனேன். பழங்களைத் திரட்டினோம்; சமித்துகளெடுத்தோம்; தர்ப்பைகள் கொய்தோம். நான் விறகு பிளந்தேன். அப்பொழுது தலைவலி உண்டாயிற்று. நான் அந்தவேதனையைப் பொறுக்க முடியாமல் மயங்கிவீழ்ந்தேன். பிறகு வெகுநேரம் உறங்கிவிட்டேன். இதுதான் எனக்குத் தெரியும். தூக்கம் தெளிந்து எழுந்ததும் உடல் வலியையும் பொருட் படுத்தாமல் உங்களைப் பார்க்க ஓடோடி வந்தோம்'' என்றான்.

அசுவபதி, தன் மருகனையே பார்த்தான். கண்குளிரப்பார்த்தான். திருமணத்தில்கூட நன்ருகப் பார்க்கவில்லை. இறந்துவிடப் போகின்றவனை என்னபார்ப்பது? என்று விட்டார். இப்பொழுதோ! இவன் எப்படிப் பிழைத்தான்? இறக்கவேயில்லையா? நாரதர் சொன்னதும் பொய்யாகுமா? என்று பலவும் நினைந்து, அவன் பேசுவதையே கவனித்துக் கொண்டிருந்தான். அவன் அடக்கம் இவனைப் பிணித்தது.

கௌதமர் சத்தியவானைப் பார்த்தார். "தவ புத்ரா! உன் பிதாவுக்குத் திடீரென்று கண்கள் தெரிந்தன. இதைப்பற்றி உனக்கு ஒன்றுந் தெரிய நியாயமில்லை. சாவித்திரி! நீ உணர்வாய். நீ மகா ஞானி. உன்னைச் சாவித்திரி தேவியே என்று உணர்கிறேன். உன் சக்தி பெரியது. பதிவிரதையே! நடந்தது என்ன? எதுவாளுலும் ஒளிக்காமல் சொல்" என்று கேட்டார்.

சாவித்திரி முறையாக யாவரையும் வணங்கினுள். "பெரியோர்களே! சிறுமி வணங்குகிறேன். பொய் தீது. அதனினும் பெரியவர்களிடத்தும், தாய் தந்தையரிடத்தும், குருவினிடத்தும் பொய் தீது. ஆகவே, யான் சொல்வது உண்மை. மறைக்க மாட்டேன். நீங்கள் யாவரும் எப்படி எப்படி நினைக்கிறீர்களோ, அது அப்படியப்படியே உண்மையாகும். அதற்குமேல், நான் எதை எப்படிச் சொல்வேன்? மன்னியுங்கள். உங்கள் அருளால் நன்மை விளைந்தது. நீங்கள் எல்லாம் தீர்க்கதரிசனம் உள்

ளவர்கள். ஆகவே, என்னையே வற்புறுத்த வேண்டா'' என்று வணங்கினுள்.

யாவரும், அவள் தன்னடக்கத்தைக் கண்டு, வியந்தார்கள். இறும்பூதுற்றுர்கள். துரும்பையும் அசைக்க இயலாதவன் தூணைச் சுமந்தேன் என்றும், கல்லா மோழை, கலேஞன் என்றும் வீறு பேசும், இயல்பான இவ்வுலகில், செயற்கரிய செயல் செய்த இப்பெருமாட்டி, உங்கள் அருள் என்றும், உங்கள் வாழ்த்துதல் என்றும் கூறுகிருளே? ஆகா! என்னே கற்பு! என்னே அறிவு! இறைவனே! இவர்களே இங்கு கொணர்ந்தமைக்கு நன்றி என்று எண்ணி மகிழ்ந்தார்கள். மாளவியும், அசுவபதியும் பெரு மகிழ்வெய்தினர். துயுமத்சேனன், மருகியை வைத்த கண் வாங்காமல் பார்த்தான்.

அந்த இனிய சூழ்நிலேயில் முருகா! முருகா! என்று கூறிக்கொண்டு நாரத பகவான் வந்தார். யாவரும் வணங்கினுர்கள். அவர் ஆணே வழி அமர்ந் தார்கள். நாரதர் புன் சிரிப்புடன் யாவரையும் பார்த்து, ''யாவர்க்கும் மகிழ்ச்சிதானே? பிரமன் எழுதிய விதி, எங்கள் ஐயன் கால்பட்டு அழிந்தது. ஊழையும் உப்பக்கங் காண்பர். சாவித்திரி தவம் பெரியது. சாவித்திரி சத்தியவானே மணக்கும் போது சத்தியவானுக்கு ஆயுள் ஒருயாண்டுதான் இருந்தது. அதனேத் தெரிந்தே சாவித்திரி இவனே மணந்தாள். யான் கூறித் தடுத்தேன். இவள் உறுதி குலேயவில்லே'' என்ருர். அப்பொழுது யாவ ரும் ஆ! ஆ! என்றனர்.

"அசுவபதியும், மாளவியும் இதனை உணர்ந்திருந்தனர். சாவித்திரி கணவன் ஆயுள் வளரும் பொருட்டு சாவித்திரி விரதம் இருந்தாள். நாட்களை எண்ணிக்கொண்டிருந்தாள். இன்றுதான், அந் நாள் என்று தெரிந்தது. அதற்குமுன் மூன்று நாட்கள் அந்த விரதம் இருந்தாள். இன்று கணவன் மரிப்பான். அவனைப் பிரியக்கூடாதென்று அவனுடன் சென்றாள். விதி பொய்க்காது. அதுபடி சத்தியவான் இறந்தான். இயமனே வந்து பற்றிக்கொண்டு சென்றான். சாவித்திரி தொடர்ந்து சென்றாள். இயமனை விடவில்லை. செல்லமுடியாத கதிகளில் சென்றாள். இயமன் தடுத்தும் நிற்கவில்லை.

இயமனிடம் ஐந்து வரங்களைப் பெற்றாள். மாமனாருக்குக் கண்கள் கிடைப்பதும், அவர் இழந்த ராஜ்யம் திரும்புவதும், இருவரங்கள். அதுபடி கண்கள் தெரிந்தன. நாளை சாலுவதேசத்திலிருந்து மந்திரிகள் வருவார்கள். தன் பிதாவுக்கு நூறு பிள்ளைகள் பிறப்பது ஒரு வரம். அந்த பிள்ளைகள் மாளவர்கள் என்று பெயர் பெறுவார்கள்.

தனக்கு ஔரச புத்திரர்கள் நூறு பிறப்பதும், தன் கணவன் உயிர்பெறுவதும் மற்ற வரங்கள். துயுமத்சேனா! உன் மகனும் மருகியும் நானூறு யாண்டுகள் அரசாளுவார்கள். அவர்களுக்குப் பிறக்கும் பிள்ளைகள் சாவித்திரர்கள் என்று பெயர் பெறுவார்கள். சாவித்திரியால் இந்த நாடு தழைக்கும். அவள் பெயரைச் சொன்னால் காலபயம் நீங்கும். யமபாசந் தொடராது. அவள் அனுசரித்த சாவித்திரி

விரதத்தை அநுசரிப்பவர்கள் சௌமங்கல்யத்தை அடைவார்கள்'' என்று சொன்னார்.

எல்லோரும் நாரதரை வணங்கினார்கள். சாவித்திரி வணங்கினாள். யாவருக்கும் திருநீறு கொடுத்தார். வாழ்த்திவிட்டுச் சென்றார் நாரதர்.

அன்று இரவு யாரும் உறங்கவில்லை. அங்கு பெரிய மகிழ்ச்சி நிலவியது. எத்தனையோ பெண்கள், எத்தனையோ ஆண்கள், சாவித்திரியை வீழ்ந்து வணங்கினார்கள். கூச்சத்தால் சாவித்திரி ஒதுங்கி ஒதுங்கி, "சிவ சிவா! முருகா! என்ன இது? நான் சிறுமியல்லவா?" என்று பதைத்தாள். அதை யார் கவனிக்கிறார்கள். பலரும் பணிந்தார்கள்.

சாவித்திரியை உண்ணவைப்பதில் எல்லோரும் முயற்சியாக இருந்தார்கள். சாவித்திரியை நீராடச் செய்து கணவன் அருகில் அமர வைத்தார்கள். பலபழங்களையும் கொண்டுவந்தார்கள். தங்கள் தங்கள் வீடுகளிலிருந்து சுவையான பல அடிசில்களைக் கொண்டுவந்தனர். யாவர்க்கும் படைத்தனர். யாவரும் உண்டனர். சிரித்து மகிழ்ந்தனர். பேசிக் களித்தனர். பல கதைகளையும் பேசினார்கள். சாவித்திரி புகழை இசையாகப் பாடினார்கள்.

சான்றோர்களின் உள்ளம்போல், ஒளிமயமாகப் பொழுது விடிந்தது. பறவைகள் சாவித்திரி புகழைப் பாடி எழுந்தன. எல்லோரும் மகிழ்ச்சியோடு எழுந்தார்கள். சாவித்திரி தங்களைப் பிரிகிறாளே

என்ற வருத்தம். இருந்தாலும் சாவித்திரி அரசாட்சிக் குப் போகிருள் என்று களித்தனர். காலைக்கடன்களை முடித்தனர். தங்கள் தங்களுக்குள் சாவித்திரி பெரு மைகளைச் சொல்லி மகிழ்ந்தனர். திருப்பித் திருப் பிச் சொல்லியும், மனம் ஆரவில்லை. எல்லோரும் ஒன்று கூடினர். சாவித்திரி தனித்தனியாக எல் லோரிடமும் விடைபெற்ருள். சாவித்திரிக்கு எல் லோரும் நினைவுப் பொருள்கள் கொடுத்தனர். பலர் சாவித்திரியோடு புறப்பட்டனர்.

அப்பொழுது சாலுவ தேசத்திலிருந்து, திரளான மக்கள் பெருங் கூட்டமாக வந்தார்கள். அநேகம் குதிரைகள், மிகுதியான யானைகள் யாவும் வந்தன. அமைச்சர்கள் வந்தார்கள்; சேனுதிபதிகள் வந்தார் கள். யாவரும் துயுமத்சேனனை வணங்கினுர்கள். முனிவர்களை வணங்கினுர்கள். அமரச் சொன்னபின் அமர்ந்தார்கள்.

"அரசரே! நேற்று இரவு, தங்கள் அமைச்சரால், தங்கள் பகைவன் கொல்லப்பட்டான். படைகள் அழிக்கப்பட்டன. குடிமக்கள் அனைவரும், தங் களையே அரசராக எதிர்பார்க்கிருர்கள். கண் இருக் கிறதோ? இல்லையோ? அவரே ஆளட்டும் என்கி ருர்கள். ஆகவே, நீங்கள் வந்து உங்கள் அரசை ஒப்புக்கொள்ளுங்கள்" என்ருர்கள். தங்கள் இள வரசர் சத்தியவானையும் அவர் தேவியாரையும் கண்டு மகிழ்ந்தார்கள்; வணங்கினுர்கள். துயுமத் சேனன் கண் பெற்றதுகண்டு வியந்தனர். சாவித்

திரியின் பெருமைகளையும், நடந்த அதிசயங்களையும் கேட்டு இறும்பூதுற்றனர். போற்றினர்.

அனைய தேயத்தோ ராங்கடைந் தரசனைத் தொழுது
பினையும் வேழமேற் கொண்டரும் புரந்தனி லெய்தி
நினையும் முன்னரின் மாமுடி கவித்தனர் நெறிசேர்
தனைய னோடிருந் துலகெலாம் காத்தனன் தலைவன்.

யாவரும் வாகனங்களில் ஏறினர்கள். இரதங்களில் ஊர்ந்தார்கள். சாவித்திரி வணங்கி விடைபெற்றாள். சாலுவதேயம் வந்தார்கள். காட்டிலிருந்தே வந்த முனிவர்கள் துயுமத்சேனனுக்கு மணிமுடி புனைந்தனர். சத்தியவானை இளவரசாக்கினர். உலகம் தழைத்தது. செங்கோல் சிறந்தது. பிறகு சத்தியவானே பேரரசேற்றான். அசுவபதியும் மாளவியும் களித்தனர். வரத்தின் வண்ணமாக சாவித்திரிக்கும் சத்தியவானுக்கும் நூறு பிள்ளைகள் பிறந்தார்கள். அசுவபதிக்கும் மாளவிக்கும் நூறு பிள்ளைகள் பிறந்தார்கள். நானூறு யாண்டுகள் வாழ்ந்தனர். தருமம் அகமகிழ்ந்தது. கற்பு களித்தது. உலகெலாம் சாவித்திரி புகழ் பாடியது.சாவித்திரியும் சத்தியவானும் காதலொருமித்து இனிதுவாழ்ந்தனர். அறம் பல புரிந்தனர். வேள்விகள் செய்தார்கள். உலகம் வாழ்ந்தது. சாவித்திரி புகழ் பேசியவர்கள் வாழ்ந்தார்கள். இந்த வரலாற்றை எழுதியவர்களும், சொன்னவர்களும், படித்தவர்களும், பேசியவர்களும், கேட்டவர்களும், சாவித்திரியருளால் வாழ்ந்தார்கள். வாழ்க!

தந்தை புத்திரர் சதம் படைத்துளமிகத் தருக்குற்
றிந்திரன்பெறும் போகமும் வாழ்வு மெய்திடலால்
பைங்கொடிக் குளமகிழ்வுறப் பலமக வுதவிச்
சந்ததத்திருந் துலகெலாம்புகழ வாழ்தழைத்தான்.

★ ★ ★

சூலம் பிடித்தெம பாசஞ் சுழற்றித் தொடர்ந்துவருங்
காலன் றனக்கொரு காலு மஞ்சேன் கடல்மீதெழுந்த
ஆலங் குடித்த பெருமான் குமாரன் அறுமுகவன்
வேலுந் திருக்கையுமுண்டே நமக்கொரு மெய்த்துணையே.

—கந்தரலங்காரம்



## தம்பி தமையர் உறவாமோ

மாணப்ர மாத நமக்கில்லை யாமென்றும் வாய்த்ததுணை
கிரணக் கலாபியும் வேலுமுண் டேகின் கிணிமுகுள
சரணப்ர தாப சசிதேவி மங்கல்ய தந்துரட்சா
பரணக்ரு பாகர ஞான கரசுர பாஸ்கரனே.

தண்டா யுதமுந் திரிசூல மும்விழத் தாக்கியுன்னைத்
திண்டாட வெட்டி விழவிடு வேன்செந்தில் வேலனுக்குத்
தொண்டா கியவென் னவிரோத ஞானச் சுடர்வடிவாள்
கண்டா யடாவந்த காவந்து பார்சற்றென் கைக்கெட்டவே.

படிக்குந் திருப்புகழ் போற்றுவன் கூற்றுவன் பாசத்தினாற்
பிடிக்கும் பொழுதுவந் தஞ்சலென் பாய்பெரும் பாம்பினின்று
நடிக்கும் பிரான்மரு காகொடுஞ் சூரன் நடுங்கவெற்பை
இடிக்குங் கலாபத் தனிமயி லேறு மிராவுத்தனே.

பட்டிக் கடாவில் வருமந்த காவுனைப் பாரறிய
வெட்டிப் புறங்கண் டலாதுவிடேன் வெய்ய சூரனைப்போய்
முட்டிப் பொருதசெவ் வேற்பெரு மாள்திரு முன்புநின்றேன்
கட்டிப் புறப்பட டாசத்தி வாளென்றன் கையதுவே.

வெட்டுங் கடாமிசைத் தோன்றும்வெங் கூற்றன் விடுங்கயிற்றாற்
கட்டும் பொழுது விடுவிக்க வேண்டுங் கராசலங்கள்
எட்டுங் குலகிரி யெட்டும்விட் டோடவெட் டாதவெளி
மட்டும் புதைய விரிக்குங் கலாப மயூரத்தனே.

தந்தைக்கு முன்னந் தனிஞான வாளொன்று சாதித்தருள்
கந்தச் சுவாமி யெனைத்தேற் றியபின்னர்க் காலன்வெம்பி
வந்திப் பொழுதென்னை யென்செய்ய லாஞ்சத்தி
வாளொன்றினாற்
சிந்தத் துணிப்பன் தணிப்பருங் கோப த்ரிசூலத்தையே.

சேல்வாங்கு கண்ணியர் வண்ணப் பயோதரஞ் சேரஎண்ணி
மால் வாங்கி ஏங்கி மயங்காமல் வெள்ளி மலையெனவே
கால் வாங்கி நிற்குங் களிற்ருன் கிழத்தி கழுத்திற்கட்டு
நூல் வாங்கி டாதன்று வேல்வாங்கி பூங்கழல் நோக்கு நெஞ்சே.

மாகத்தை முட்டி வருநெடுங் கூற்றன்வந் தாலென்முன்னே
தோகைப் புரவியிற் ருேன்றிநிற் பாய்சுத்த நித்தமுத்தித்
த்யாகப் பொருப்பைத் த்ரிபுராந் தகனைத் த்ரியம்பகனைப்
பாகத்தில் வைக்கும் பரமகல் யாணிதன் பாலகனே.

தாரா கணமெனுந் தாய்மார் அறுவர் தருமுலைப்பால்
ஆரா துமைமுலைப் பாலுண்ட பால னரையிற்கட்டுஞ்
சீராவுங் கையிற் சிறுவாளும் வேலுமென் சிந்தையவே
வாரா தகலந்த காவந்த போதுயிர் வாங்குவனே.

வேலா யுதன்சங்கு சக்ரா யுதன்விரிஞ் சன்னறியாச்
சூலா யுதன்தந்த கந்தச் சுவாமி சுடர்க்குடுமிக்
காலா யுதக்கொடி யோனரு ளாய கவசமுண்டென்
பாலா யுதம் வரு மோயம னேடு பகைக்கினுமே.

குமரா சரணஞ் சரணமென் றண்டர் குழாந் துதிக்கும்
அமரா வதியிற் பெருமாள் திருமுக மாறுங் கண்ட
தமராகி வைகுந் தனியான ஞான தபோதனர்க்கிங்
கெமராசன் விட்ட கடையேடு வந்தினி யென்செயுமே.

சலங்காணும் வேந்தர் தமக்குமஞ் சார்யமன் சண்டைக்கஞ்சார்
துலங்கா நரகக் குழியணு கார்துட்ட நோயணுகார்
கலங்கார் புலிக்குங் கரடிக்கும் யானைக்குங் கந்தன்நன்னூல்
அலங்கார நூற்று ளொருகவி தான்கற் றறிந்தவரே.

—கந்தாலங்காரம்

# பிழை திருத்தம்

| பக்கம் | வரி | பிழை | திருத்தம் |
|---|---|---|---|
| 1 | 13 | இவ்வுல கூட்டுவாய் | இவ்வுலகூட்டுவாய் |
| 6 | 18 | முனிவர்கள்: | முனிவர்கள், |
| 9 | 4 | நாட்டி லிருக்கும் போதா | நாட்டிலிருக்கும்போதா |
| 9 | 24 | காலனுர் | காலரூர் |
| 9 | 28 | செய்வது தானே? | செய்வதுதானே? |
| 11 | 10 | வேண்டியனவற்றைக் | வேண்டியவற்றைக் |
| 13 | 7 | பிற வுயிர்கட்கு | பிற உயிர்கட்கு |
| 15 | 9 | வெறுங்கையாகவா. | வெறுங்கையாகவா |
| 26 | 20 | அத்துவதரிதழ்ச் | அத்துவரிதழ்ச் |
| 30 | 14 | "மரதரசே! | "மாதரசே! |
| 36 | 6 | தர்மந் | தருமந் |
| 41 | 5 | மாளவி, | மாளவி: |
| 41 | 11 | மன்னன், | மன்னன்: |
| 44 | 5 | சாவித்திரி, | சாவித்திரி: |
| 44 | 16 | மாளவி, | மாளவி: |
| 44 | 20 | நகைத்தபடி, | நகைத்தபடி: |
| 45 | 2 | சாவித்திரி, | சாவித்திரி: |
| 47 | 24 | சொல் | சொல்— |
| 48 | 5 | விருப்புபவர்கள் | விரும்புபவர்கள் |
| 48 | 17 | தாரணி | தாரணி; |
| 49 | 3 | தனித்தும் | தணித்தும் |
| 53 | 17 | 2... | 2111 |
| 53 | 29 | தென்னவரே | தென்னவரோ |
| 54 | 2 | ரீசா | ரீசா |
| 56 | 19 | செல்வேன் | செல்லேன் |
| 59 | 27 | கஞ்சுகம் | கஞ்சுகம் |

| பக்கம் | வரி | பிழை | திருத்தம் |
|---|---|---|---|
| 60 | 23 | மறந்த | மணந்த |
| 62 | 7 | ஆடலோசை | கடலோசை |
| 63 | 8 | சேர்ந்தது. | சேர்ந்தன. |
| 66 | 13 | நாயகனே | நாயகமே |
| 75 | 24 | ஆட்டிவைவப்பாயோ? | ஆட்டி வைப்பாயோ? |
| 76 | 11 | நாரதர். | நாரதர், |
| 91 | 16 | ‘சாவித்திரி | சாவித்திரி |
| 95 | 11 | காணுதவனுகக் | காணுதவர்களாகக் |
| 95 | 12 | கேட்காதவனுக | கேட்காதவர்களாக |
| 101 | 27 | உபசரிக் | உபகரிக் |
| 103 | 8 | வருவ | உருவ |
| 111 | 3 | நியமல்களாலும், | நியமங்களாலும், |
| 120 | 9 | அன்பன்! | அன்பன்!’ |
| 122 | 18 | -அமிராமியந்தாதி | -அபிராமியந்தாதி |
| 133 | 18 | தரழ்வாரத்தில் | தாழ்வாரத்தில் |
| 138 | 8 | மவர்க்கென்று மோதா ளுய் | மவர்க்கொன்றுமோ தாளுய் |
| 141 | 13 | காற்று?’’ | காற்று’’ |
| 141 | 15 | “ஆ...ம்...?’’ | “ஆ....ம்...’’ |
| 141 | 17 | தான்...?’’ | தான்...’’ |
| 141 | 19 | சொன்ளுய்:’’ | சொன்ளுய்?’’ |
| 141 | 22 | “ஆ...ண் தான்...?’’ | “ஆ...ண் தான்...’’ |
| 148 | 2 | தவிப்பவள் | தவிர்ப்பவள் |
| 148 | 21 | ஆருகிருய். | ஆளுகிருய். |
| 150 | 33 | மணியள் | மேனியாள் |
| 150 | 41 | பநிமலே | பனிமலே |
| 153 | 29 | கின்னநேசப்ரியா | கின்னரநேசப்ரியா |
| 155 | 10 | பாவளி | பாவனி |
| 155 | 35 | கந்தர்வமனேக | கந்தர்வ மனேகரி |
| 156 | 16 | வரகசாயி | வரசகாயி |
| 156 | 34 | சுரக்கும் | கரக்கும் |
| 157 | 5-வது வரிக்குக் கீழ்:—திருப்புகழ்மணி என்றுசேர்க்க. | | |
| 162 | 7 | மகளாகிருன் | மகளாகிருள். |
| 163 | 7 | துயுமத்சேனர், | துயுமத்சேனர்: |
| 163 | 13 | அவர் | அவள் |
| 168 | 25 | கலேந்தாரி | கலேந்தாலி |
| 177 | 3 | உயர்ந்த | உலர்ந்த |



உ

முருகா

# திருப்புகழமிர்தம்

(ஒரு சிறந்த மாத வெளியீடு)

ஆசிரியர் :

## திருமுருக கிருபானந்தவாரி அவர்கள்

குரோதி ஹூ சித்திரைமீ முதல் 29வது ஆண்டு நடைபெற்று வருகிறது. ஒவ்வொரு இதழிலும் திருப்புகழ்ப்பாடல் 1 அல்லது 2க்கு விரிவுரை, கற்பு என்ற தலைப்பில் ஒரு சிறுகதை, ஸ்ரீ கி. வா. ஜ. அவர்கள் கட்டுரை, வியாசபாரதக் கட்டுரை முதலியன வெளிவருகின்றன.

வருட சந்தா (இந்தியா) ரூ. 2–50

(சித்திரைமீ முதல் பங்குனிமீ முடிய)

**திருப்புகழமிர்தம் காரியாலயம்**

89, சிங்கண்ண செட்டித்தெரு,

சிந்தாதிரிப்பேட்டை : : சென்னை 2.

பார்க்கர் அச்சகம், சென்னை-1